# ஹிமாலயா
# புக்கே
# டால்கம்
# பவுடர்







நாள் முழுதும்
புதுமலர்ச்சி
யுடன்
விளங்க



- நறுமண–
  மோங்குவது
- சிக்கனமிகுந்தது
- குடும்பத்தினர்
  அனைவருக்கும் உகந்தது

லண்டனிலுள்ள இராஸ்மிக் சார்பாக, ஹிந்துஸ்தான்
லீவர் லிமிடெட்டினால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

HBT. 19-50 TM

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

என் தவறுதான்

நான் பின்னி சூட்டிங் வாங்கியிருக்க வேண்டும்



# வெங்கடேஷ் வஸ்திராலயா

விற்கு

இப்போதே போகிறேன்

ஷோரூம்கள் 1ம், 2ம்

ஹைக்கோர்ட் எதிரிலுள்ள பாங்க் ஆப் மைசூர் கட்டிடத்தில்

VV 873

**குறிப்பு** எமது ஆதரவாளர்களின் சௌகரியத்தை முன்னிட்டு வெங்கடேஷ் வஸ்திராலயா வின் மூன்றும் ஷோரும் 2, தம்புச்செட்டி தெருவிலிருந்து ஸென்ட்ரல் ஸ்டேஷன் எதிரில் மாற்றப்படுகிறது. எமது புது ஷோரும் ஜுலை 13, 1959 அன்று திறக்கப்படும்.




| | | |
|---|---|---|
| மலர் 18<br>இதழ் 49 | தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற<br>தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | விகாரி ௵<br>ஆனி ௴ 21௳ |


# லெனினை விரும்பாதது நமக்கு எதற்கு?

**வி**வசாயத்துக்குச் சமுதாய சாகுபடி உதவாது என்று லெனின் 1922-ம் ஆண்டில் தீர்மானித்து, தம்முடைய சீடர்களுக்கு அந்திம உபதேசம் செய்தார்.

“கூட்டுப் பண்ணை சம்பந்தமாகப் பல முட்டாள்தனமான காரியங்கள் செய்தோம். இன்றைக்குச் செய்ய வேண்டிய காரியங்களில் கூட்டுப் பண்ணை பிரச்னை இடம் பெறவில்லை. அதை நீக்கி விட்டோம்.

“தனிநபர் விவசாயிகளையேதான் நாம் நம்ப வேண்டும். குடியானவர்கள் எப்போதும் இருப்பது போலவே இன்றும் இருக்கிறார்கள். குடியானவனுடைய மனப்பான்மையை மாற்றி விடுவது நம்முடைய காலத்தில் முடியாது. விவசாயிகள் சோஷலிஸ்டுகள் அல்ல. அவர்களைச் சோஷலிஸ்டுகள் என்று எண்ணிக் கொண்டு சோஷலிஸ திட்டங்களை அந்த அஸ்திவாரத்தின் மீது நிர்மாணிப்பது மணல் மீது வீடு எழுப்புவது போல்தான். விவசாயியின் மனோபாவத்தையும் பழக்க வழக்கங்களையும் மாற்ற வேண்டுமானால் பல தலைமுறைகள் பிடிக்கும். அரசாங்க பலாத்காரத்தினால் பயன் விளையாது. நம் முன்னுள்ள பணி என்னவென்றால் உபதேச முறையில் தான் விவசாயியை மாற்ற முயல வேண்டும். நடுத்தர விவசாயிகளின் நிலைமையை நாம் கவனத்தில் வைத்துக் காரியங்கள் செய்ய வேண்டும்.

பொருளாதார முன்னேற்றத்துக்கு மிக முக்கியமான நடுநாயகன் யாரென்றால் திறமையான தனி நபர் விவசாயிதான்.”

கடைசி வரியை அடிக் கோடிட்டு வற்புறுத்தியது லெனினேதான்; நாமல்ல.

“குடியானவர்களைச் சோஷலிஸ்டுகள் என்று எண்ணிக் கொண்டு சோஷலிஸ திட்டங்களை நிர்மாணிப்பது மணல் மீது வீடு எழுப்புவது போல்தான்.” - இந்த வாசகம் நமது பிரதம மந்திரி நேருஜி அவர்கள் சொல்வதை ஞாபகப்படுத்துகிறது. கூட்டுறவு விவசாயத்தை நமது கிராம மக்கள் உற்சாகமாக வரவேற்கிறார்கள் என்று அடிக்கடி சொல்லி வருகிறார். மணல் மேல் வீடு எழுப்புகிறார்.

“பலாத்காரம் பயன்படாது” என்று சொன்னார் லெனின். மிகவும் சிரமப்பட்டுக் கொடுக்கப்பட்ட அருமை வரிப் பணத்தை நேரு கூட்டுப் பண்ணையில் விரயம் செய்வதைப் பாருங்கள். லஞ்சம் கொடுத்துக் காரியத்தைச் சாதித்துக் கொள்ளப் பார்ப்பதும் பலாத்காரம்தான். விவசாயிகளின் மனோபாவம் மாற்ற முடியாதது என்று லெனின் கண்டார். வாக்காளர்களுக்கு லஞ்சம் கொடுப்பது சுலபம். கொடுத்து விட்டால் மளமள வென்று வோட்டுகளும் நமக்கு வேண்டிய பெட்டியில் வெகு சீக்கிரத்தில் விழுந்து விடும். லஞ்சம் கொடுத்த அதே கணத்தில் பலனும் கிடைத்து விடும். ஆனால் நிலத்தில் கவனம் செலுத்துவதும், பண்ணையில் அக்கறை கொள்வதும், லஞ்சம் கொடுத்து வோட்டுப் பெறுவது போல் அவ்வளவு சுலபமாகப் பெறக் கூடிய விஷயங்களல்ல. கொடுத்த பணம் செலவழிந்து போனபின் கூட்டுப் பண்ணை விவகாரத்தில் குடியானவனுக்கு ஒரு அக்கறையுமிராது. பணம் அவன் கைக்கு நேரடியாக வந்து தங்கவில்லை. அந்த அற்ப சந்தோஷமும் அவன் அனுபவிக்கவில்லை. யாரோ ஒரு உத்தியோகஸ்தர் கூட்டுப் பண்ணைக்காகச் செலவழிப்பார்; அதனால் அந்தக் கூட்டில் சேர்ந்த விவசாயி எவனுக்கும் ஒருவித சந்தோஷமோ, திருப்தியோ இருக்கவும் இருக்காது.

"நடுத்தர விவசாயியைப் பற்றிச் சிரத்தை கொள்ள வேண்டும். நமது பொருளாதார மீட்சிக்கு முக்கியமான மைய புருஷன் திறமை வாய்ந்த விவசாயியே" என்று மார்க்ஸியவாதிகளுள் முதலிடம் பெற்ற லெனின் சொன்னார். 1922-ம் ஆண்டிலேயே லெனின் கண்ட உண்மையை, நமது புது மார்க்ஸியவாதிகள் காண மறுப்பது நமது துரதிர்ஷ்டம்தான்.

எந்தக் கொள்கையைக் கடைப் பிடித்தாலும், தெளிவான சிந்தனை வேண்டும். உணவுப் பிரச்னை ஒரு தனிப் பிரச்னை. அப்பிரச்னையுடன் மற்றக் கொள்கைகளையும் இலட்சியங்களையும் இணைத்துக் குழப்பக் கூடாது.

தோல்வியுற்றுவரும் பிடிவாதமான கூட்டுப் பண்ணைக் கொள்கையை முட்டுக் கொடுத்து நிறுத்துவதற்குப் பொதுப் பணம் பல் வேறுவிதமாக வாரி இறைக்கப்படுகிறது. ஜாமீன், அடமானம் இல்லாத கடனாகவும், வட்டியில்லாத உதவி நிதியாகவும் கணக்கு வழக்கின்றி, நிலத்தின் மதிப்பை விட பன்மடங்கு அதிகமாகவே செலவழிக்கப்படுகிறது. நிலத்தின் விளைவைக் கடனுக்குச் சரிக்கட்டும்போது குடியானவன் விழித்துக் கொள்வான். கடனைத் தள்ளிவிடலாம் என்று சர்க்கார் நிர்வாகஸ்தர்கள் சொல்லும்போது தேசம் முழுதிலும் பெருத்த ஏமாற்றமும் அதிருப்தியும் காணப்படும். நில உச்சவரம்புக் கொள்கையை நின்று கொண்டு வருவதற்குக் காரணம் ஏழைகளையும் பாமர மக்களையும் ஏமாற்றுவதற்குத்தான். உச்சவரம்புக்கு மேல் உள்ள நிலத்தை எத்தனை பேருக்குப் பிரிக்க முடியும்? யாருக்குக் கொடுப்பது? யாருக்குக் கொடுக்காமலிருப்பது? பொறாமையைப் பரப்புவது முற்போக்குக்கு அடையாளமல்ல; வழியுமல்ல. வர்க்கப் போராட்டம்தான் அணுயுகம். இந்தக் கருத்துக்கள் எவ்வளவு அர்த்தமற்ற மோசடி என்பது ஏழைகளுக்குத் தற்போது தெரியாது. பின்னால்தான் தெரிய வரும். ஆனால் இதை நன்கு உணர்பவர்கள், இப்போதே தேசத்துக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். தேசத்தின் தார்மிகப் பண்பு முற்றும் நசித்துப் போவதற்கு முன் எடுத்துச் சொல்ல வேண்டும்.

பொறாமையையும் போராட்டத்தையும் வளர்க்கும் இந்தப் பேதைமை எண்ணங்கள், உணவு உற்பத்திக்கு வழியல்ல. பிறர் துன்பத்தைக் கண்டு மகிழும் வாய்ப்புகளும் கொடிய பழக்கங்களும் இப்பொழுது இல்லையே என்று உச்சவரம்பு கொண்டுவரப் பட்டிருக்கிறது போலும்! கொடுமை செய்வதில் கீழ்மக்களுக்கு ஒருவித ஆனந்தம். ஒரு பிரயோசனமுமின்றிச் சொத்தைப் பறிமுதல் செய்யும் சட்டங்கள், வாக்காளர்களை இந்தக் கீழ்த்தரமான இன்பத்தில் ஆழ்த்த உதவலாமே அன்றி உண்மையான உணவு உற்பத்தித் திட்டமாகாது.

# சுதந்திரக் கட்சி பணக்காரர் கட்சியா?

வேறு வழியைக் காணாமல் 'இது பணக்காரர் கட்சி' என்று சொல்லிச் சுதந்திரக் கட்சியின் மதிப்பைக் குறைக்கப் பார்க்கிறார்கள் காங்கிரஸ்காரர்கள். ஏழை மக்களின் நண்பர்களும் காவலர்களும் தாங்களே என்று வேஷம் போடுகிறார்கள். ஆனால் உண்மை என்ன? தங்கள் நண்பர்களாகவுள்ள ஒரு சில பணக்காரர்களுக்கு மட்டும் அளவுகடந்த சலுகைகளும், உதவிகளும், லைசென்சுகளும் வழங்கிவிட்டு, மற்றப் பணக்காரர்களையும் தொழில் அதிபர்களையும் தலையெடுக்க விடாமல் செய்து, நாட்டின் செல்வப் பெருக்கைத் தடுத்து ஏழைகளை இன்னும் ஏழைகளாக்கி வருகிறார்கள் என்பது மக்கள் சொல்லி வரும் குறை. முந்திராவிடம் இரண்டரை லட்சம் பெற்றுக் கொண்டது பெரிய விஷயமல்ல. இன்னும் அநேக முதலாளிகளிடமும் பெற்றிருக்கிறோம் என்று பெருமை பேசுகிறார்கள் அல்லவா? ஏன் அவர்கள் கொடுத்தார்கள்? என்ன ஆசையின் பேரில் கொடுத்தார்கள்? காங்கிரஸ் கட்சியினுடைய தேர்தல் செலவுகள் எந்தப் பணத்தில் நடைபெறுகின்றன?

சுதந்திரக் கட்சியினர் இந்தவிதமான தகிடுதத்த வியாபாரத்துக்குத் தயாராக இல்லை. செல்வத்தைக் கொண்டுதான் நாட்டின் செல்வ வளத்தைப் பெருக்க முடியும் என்று நம்புகின்றனர். சர்க்காரே எல்லாத் தொழில்களையும் எடுத்து நடத்த முடியாது. தேசம் முழுதும் பரவலாகத் தொழில் வளம் பெருக வேண்டுமென்றால் பலப்பல முதலாளிகள் சேர்ந்து கிராமப் புறங்களில் எல்லாம் தொழில்களைப் பெருக்க வசதியும் உற்சாகமும் அளிக்க வேண்டுமென நம்புகின்றனர். தொழில் வளம் ஏன் பெருக வேண்டும்? கிராமப்புறங்களிலுள்ள கிராமவாசிகளுக்கு வேலைசெய்து பிழைக்கத் தொழில் வாய்ப்பு ஏற்படுத்துவதற்குத்தான். அப்போதுதான் பாட்டாளி மக்கள், பட்டினியால் பரிதவிக்கும் நிலைமை மாறி தாம் உடல் உழைத்துச் சம்பாதிக்கலாம் என்ற நம்பிக்கை அவர்களுக்கு ஏற்படும்.

சுதந்திரக் கட்சிக்குப் பணம் படைத்தவர்கள் ஆதரவு தந்தால், அவர்களைக் கொண்டு நாட்டின்நிலை மேன்மையடையச் செய்வதற்கே சுதந்திரக் கட்சி பாடுபடும். ஏழைகளை ஆட்சியாளரின் அடிமையாக்குவதைத் தடுக்கத்தான் சுதந்திரக் கட்சி தோற்றுவிக்கப்பட்டது. தேசத்தில் சுதந்திர உணர்ச்சியே இல்லாமல் போய்விடும் என்று கண்டுதான்

# வேண்டாம், அந்தப் பணம்!



இந்தக் கட்சி தோற்றுவிக்கப்பட்டது. கம்யூனிஸ்ட் முறையைக் காங்கிரஸே எடுத்துக்கொண்டுவிட்டபடியால் இந்தக் கட்சி தோற்றுவிக்கப்பட்டது.

கூட்டுறவு விவசாயத்தைக் கட்டாயம் கொண்டுவந்தே தீருவோம் என்று ஆளும் கட்சியினர் கச்சை கட்டிவிட்டபடியால் இனியும் பொறுத்துக் கொண்டே யிருப்பதில் பயனில்லை என்று சுதந்திரக் கட்சியை ராஜாஜி துவக்கினார்.

உச்சவரம்பு கட்டி ஏழைகளுக்கெல்லாம் நிலம் கொடுக்கப்படும் என்று ஆசையைக் காட்டி, மக்களை மயக்கி அது முடியாத காரியம் என்று அனைவருக்கும் தெரிந்துவிட்டபின், வரம்புக்கு மேற்பட்ட நிலங்களைக் கூட்டுறவு விவசாயத்தில் அடைப்போம் என்று காங்கிரஸ் சர்க்கார் இப்போது சொல்லுகிறார்கள்.

கூட்டுறவு விவசாயமும் வந்ததானால், நிலத்தில் உழுது பயிர் செய்யும் உழவன் சர்க்காரின் கூலிக்காரனாகப் போவான்! சர்க்கார் உத்தியோகஸ்தரின் அடிமையாக வேலைசெய்ய வேண்டி வரும். கம்யூனிஸ்ட் நாடுகளில் நிலவும் பயங்கர-சர்க்கார் கொடுமைக்கு இந்திய விவசாயியும் உட்படுத்தப்படுவான் என்றுதான் ராஜாஜி இப்புதிய கட்சியைத் துவக்கியிருக்கிறார்! பாரதநாட்டு ஏழை விவசாயி, அரை வயிறு பட்டினியாகக் கிடந்து வாழ்ந்திருக்கலாம். ஆனாலும் அவன் தன் சுயமரியாதையை இழக்காமல், கூலிக்காரனாகப் போகாமல் கௌரவமாகவும் சுதந்திரமாகவும் வாழ்ந்து வந்தான். ஆனால் இன்று சுதேச ஆட்சியில் அவனை அடிமையாக்குவதற்கு முயற்சிகள் நடைபெறுகின்றன. இதனால் உணவு உற்பத்தி பெருகும் என்ற பிராந்தியைக் கொண்டு இப்படி நடைபெறுகிறது. அனைவருடைய சுதந்திரத்தையும் காப்பதற்குத்தான் இந்தச் சுதந்திரக் கட்சி ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அரசாங்கம் பிசாசு பலம் பெறுவதைத் தடுத்து மக்களின் சுதந்திரத்தைக் காப்பதற்காக ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.

நாம் அடிமையாகப் போனாலும் சரி, பணக்காரர்களைத் துன்பப்படுத்தினால் போதும் என்று பாரத மக்கள் அடிமை நிலையை ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.

காந்தி மகானையும், ராஜாஜியையும் வல்லபாயையும் பணக்காரர்கள் ஏமாற்றினார்கள் என்று எப்பொழுதாவது கேள்விப்பட்டது உண்டா? அதற்கு மாறாக இம்மூவரும் பணக்காரர்களின் செல்வத்தை ஏழைகளுக்கு வாங்கித் தருவதிலேதான் வெற்றி பெற்றிருக்கிறார்கள். சரித்திரம் இப்படியிருக்க, ராஜாஜியின் தலைமையிலுள்ள கட்சி பணக்காரர்கள் கட்சி என்று கூறுவது எவ்வளவு பேதமை!

சுதந்திரக் கட்சி பாடுபட்டு வேலை செய்யும் பாட்டாளிகளின் கட்சி, உழவர்களின் கட்சி, சிறு முதல் போட்டு சுதந்திரமாக வாழவிரும்பும் சிறு வியாபாரிகள் கட்சி. அரசியல் கட்சிகளின் பேரில் மக்களுக்கு ஏற்பட்டுள்ள அதிருப்தியைக் குறைத்து, அரசியலுக்கு யோக்யதையையும் கௌரவத்தையும் உண்டாக்க வேண்டி ஏற்படுத்தப்பட்ட கட்சி.

# குடந்தை மகாநாடு

சுதந்திரக் கட்சிக்கு ஆதரவு பெருகி வருகிறது. சென்ற மாதம் 23ந் தேதி குடந்தை டவுன் ஹாலில் கன்ஸர்வேடிவ் சங்கத்தின் பொதுக் கூட்டம் ஒன்று நடந்தது.

இந்த விசேஷக் கூட்டத்தில் வர்த்தகர்கள், விவசாயத்தில் ஈடுபட்டுள்ளவர்கள், கல்வியாளர்கள் ஆகியோர் கலந்து கொண்டார்கள்.

சென்னை, மேல் சட்டசபை அங்கத்தினர் ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யர் அவர்கள் இந்த விசேஷக் கூட்டத்துக்குத் தலைமை வகித்தார். ஸ்ரீ ஆர். கிருஷ்ணமூர்த்தி அனைவரையும் வரவேற்றார்.

ஸ்ரீ ஆர். கந்தசாமி மூப்பனார் அவர்கள் சுதந்திரக் கட்சியின் அவசியத்தைக் குறித்துப் பேசும்போது, "தேச அரசியல் சரித்திரத்தில் நெருக்கடியான நிலைமை தோன்றியுள்ள இந்தச் சமயத்தில், ராஜாஜி, இந்தச் சுதந்திரக் கட்சி மூலம் வழிகாட்ட முன் வந்தது நமது பெரும் பாக்கியம்" என்று கூறினார்.

"ஜனநாயக ஆட்சியில் தகுந்த எதிர்க்கட்சி இல்லாமல், சென்ற பன்னிரு ஆண்டுகளாகக் காங்கிரஸ் ஏகபோகமாகச் செயல் புரிந்து வருவதால் நாட்டில் பல விதமான குழப்பங்களும் கொடுமைகளும் தலைவிரித்தாடி வருகின்றன. நிலைமை இன்னும் மோசமாவதற்கு முன், பாரத மக்களின் அதிர்ஷ்டம்தான், சிலம் மிகுந்த தலைவர்களால் தகுந்த எதிர்க்கட்சியாகச் சுதந்திரக் கட்சி உதயமாகி யிருக்கிறது. அதற்குத் தமிழ் மக்கள் பூரண ஆதரவு அளிப்பார்கள் என்பது நிச்சயம்!" என்று ஸ்ரீமூப்பனார் அவர்கள் தமது உரையில் அறிவித்தார்.

தலைவர் ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யர் அவர்கள் பேசும்போது, காங்கிரஸ் அரசாங்கத்தின் போக்கு எவ்வாறு தனி மனிதர்களின் சுதந்திரத்தை அடியோடு பறித்து வருகிறது என்பதை விளக்கி, அடியோடு அழிந்து விடக் கூடிய நிலைமையிலுள்ள நடுத்தர வகுப்பு மக்களைக் காங்கிரஸ் கொடுமைகளிலிருந்து காப்பாற்ற வேண்டுமானால், அது சுதந்திரக் கட்சியினால்தான் சாத்தியமாகும் என்று உரைத்தார். சுதந்திரக் கட்சி வலுவாக அனைவரும் பாடுபடும்படி கேட்டுக் கொண்டார்.

ராஜாஜி அவர்கள் இந்தக் கூட்டத்துக்கு அனுப்பியிருந்த செய்தியில் "நிமைகளை எதிர்த்து நிற்பவர்களுக்கு, தெய்வம் துணை நின்று தைரியத்தை அளித்து வரும். தொன்றுதொட்டு இருந்து வரும் உரிமைகளை, செருக்குற்ற கொடுங்கோன்மை பறிக்கும்போது, அவற்றைப் பாதுகாத்துக் கொள்வதில் பயத்துக்கும் தயக்கத்துக்கும் இடமேது?" என்று கூறியிருந்தார்.

மளிகை வர்த்தகர் ஜனாப் மகமது இப்ராஹிம், ஸ்ரீரங்கம் ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடு, ஸ்ரீ கே. கனகசபை, ஸ்ரீ ஏ. என். சபாபதி முதலியார், டாக்டர் பி. வி. முத்துகிருஷ்ணய்யர் முதலியவர்களும் இன்னும் பலரும் பேசியபின், பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அவற்றுள் காங்கிரஸின் விவசாயக் கொள்கையினால் விளையும் கேடுகளை விளக்கும் தீர்மானத்தைக் குறிப்பிட வேண்டும்.

அதன் விவரம் வருமாறு:—"காங்கிரஸின் நாகபுரி தீர்மானமும், அதைத் தொடர்ந்து அரசாங்கம் வெளியிட்டு வரும் கொள்கைப் பிரகடனங்களும் கண்டிக்கத் தக்கனவாகும். ஏனெனில், இந்தக் கொள்கைகளினால் நாட்டில் பொருளாதாரச் சீர்கேடு இன்னும் அதிகமாகும். சமூக மனஸ்தாபங்கள் இன்னும் வளரும். நிர்வாகத்தில் ஊழல்கள் அதிகரிக்கும். இவ்விதத் தீமைகளினின்று நாடு காப்பாற்றப்பட வேண்டுமானால், தகுந்த எதிர்க்கட்சி வேண்டும்; அதுவும் மிக உடனடியாக வேண்டும். இந்தத் தேவையைப் பூர்த்தி செய்ய உதயமாகியிருக்கும் சுதந்திரக்கட்சிக்குக் குடந்தைப் பொது மக்கள் அடங்கிய இப் பொதுக் கூட்டம் பூரண ஆதரவளிக்கிறது. சுதந்திர உரிமைகள் விரும்பும் ஒவ்வொருவரும் இந்தக் கட்சிக்கு முழு ஆதரவு அளிக்கும்படி கேட்டுக் கொள்கிறது!"

தமிழ் நாட்டின் இதர ஜில்லாக்களில் சுற்றுப் பிரயாணம் செய்து, சுதந்திரக் கட்சியின் நோக்கங்களை எடுத்துரைக்க முடிவு செய்யப்பட்டது.

ஆகஸ்டு மாதம் 1, 2-ந்தேதிகளில் ஆமதாபாத்தில் கூட விருக்கும் சுதந்திரக் கட்சி ஆரம்ப மகாநாட்டுக்கு, சுமார் இருபத்தைந்து பேர் கொண்ட பிரதிநிதிகளை அனுப்புவதென்றும் கூட்டத்தில் முடிவு செய்து, பிரதிநிதிகளாகப் பிரமுகர்கள் பலர் அங்கேயே தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்கள்.

## வரவேற்பு

"சுதந்திரக் கட்சி தோன்றி நாட்டில் தக்க எதிர்க்கட்சி இல்லாத பெருங் குறையைப் போக்கியிருக்கிறது!"

"நேருஜியினாலே இந்த எதிர்க் கட்சி வரவேற்கப்பட்டிருக்கிறது. ஜயப்பிரகாஷ் நாராயணனின் ஆசியையும் இந்தக் கட்சி பெற்றிருக்கிறது. காந்தி மகானுடன் நெருங்கிப் பழகி, அவரது பாதையில் வழி காட்டிச் செல்லக் கூடிய தலைவர் ராஜாஜியினால் இந்தக் கட்சி துவக்கப்பட்டிருப்பது நமது பெரும் பாக்கியமாகும். இதை நான் முழு மனத்துடன் வரவேற்கிறேன்."

— பெனகால் ராமராவ்

# என்ன சேதி?

## கேரள நிலைமை!

கேரளத்துக்குப் பிரதமர் நேரு சென்று வந்தும், அமைதியை நிலைநாட்ட முடியவில்லை. ஆகவே இன்றுள்ள நிலையில், புதுத் தேர்தல்களுக்கு வழி செய்தாலன்றி அங்கு அமைதியை நிலை நிறுத்த முடியாது. இந்த முடிவுக்குக் கம்யூனிஸ்டுகளும் காங்கிரசாரும் மற்ற எல்லா கேரள வாசிகளும் விரைவில் வருவார்கள் என்று எதிர்பார்க்கலாம். அப்படிப் புது நிலை உருவானால் கேரளத்திலுள்ள கட்சிகள், வாக்காளர்களைப் பயமுறுத்தியோ, துன்புறுத்தியோ, லஞ்சம் கொடுத்தோ தங்களுக்கு வோட்டு செய்யத் தூண்டாமல், கட்சிகளின் கொள்கைகளின் அடிப்படையிலேயே வோட் செய்யும்படியான தக்கசூழ் நிலையை ஏற்படுத்த வேண்டும். அமைதியான முறையில் தேர்தல்கள் நடத்த ஏற்பாடு செய்ய வேண்டும். அப்போது தான் அங்கு ஜனநாயகம் பிழைக்கும். தேர்தலுக்கு வேண்டிய சூழ்நிலைக்கு விரோதமாகக் குழப்பங்கள் நடந்து வருவது வருந்தத் தக்கது.

## பஸ் கட்டணம் உயருமாம்!

சென்னை மாநில சர்க்கார் நடத்தும் பஸ் போக்குவரத்தில் வருமானம் அதிகரித்துக் கொண்டே வந்தாலும்கூட லாபம் கிடைக்கவில்லையாம். அதற்காகப் பஸ் கட்டணங்களை உயர்த்தலாமா என்பதைப் பற்றி ஆலோசித்து வருகிறார்களாம். இந்தத் திடுக்கிடும் செய்தியைச் சர்க்கார் பஸ் இலாக்கா அதிகாரி சமீபத்தில் அறிவித்தார்.

இதைக் கேட்டுப் பஸ் பிரயாணிகள் மூர்ச்சை போட்டு விழுந்தால் ஆச்சரியமில்லை. சர்க்கார் நடத்தும் எந்த வியாபாரமும் இப்படித்தானே நடக்கிறது? லாபகரமாகவும் பொதுமக்களுக்கு உபயோகமாகவும் ஏதாவது தொழில் நடந்தால், அதைச் சர்க்கார் சொந்தமாக நடத்த முன்வரும். அதற்குச் 'சமுதாய நலம்' என்ற பெயரில் பட்டம் கட்டி, சட்டமியற்றி அரசாங்கம் அத்தொழிலை ஏற்கும். உடனே அதிகாரவர்க்க விஸ்தரிப்பு, பராமரிப்புச் செலவு, பாதுகாப்புச் செலவு, மேற்பார்வைச் செலவு, வருமானக் குறைவினால் கட்டண உயர்வு, என்றெல்லாம் படிப்படியாக உயரும். முன்பு லாபம் கிடைத்துக் கொண்டிருந்த தொழில் நஷ்டத்தில் நடக்கும்.

இந்த லட்சணத்தில் நயாபைசா தகராறினால் கட்டண உயர்வு தானாகவே ஏற்பட்டுக் காலப் போக்கில் நிலைத்தே விட்டது. தானாக உயர்ந்தது கொஞ்சம்; காசுக்காகச் சுலப முறையில் கணக்கிடுவதற்காக உயர்த்தப்பட்டது கொஞ்சம். இந்த நிலையில் வருமானம் மட்டும் அதிகரிக்கிறதாம்; ஆனால் லாபமில்லையாம்! பஸ்களைப் பெட்ரோலுக்குப் பதில் ரூபாயைப் போட்டே ஓட்டுகிறார்களா என்று தெரியவில்லை!

அரசு புரிவதற்காக ஏற்பட்டது அரசாங்கம். அவர்கள் தொழில் நடத்தினால் என்ன ஆகும் என்பதற்கு இது ஒரு உதாரணம். மக்களுக்கு மேலும் கஷ்டத்தை உண்டாக்கி அவர்கள் மனத்தைப் புண்படுத்தும் இந்த அசட்டு யோசனையைக் கைவிடுவது மிக மிக அவசியம்.

# வெற்றி அல்லது வீரமரணம்

நிலவிலே அவன் பொற்சிலையாகச் சமைந்து தூணில் சாய்ந்தபடி அமர்ந்திருந்தான். இளவல் இளங்கோவை அவன் தந்தை போருக்கு அனுப்பிய முறை அவனை வருத்தியது. "வெற்றியோடு திரும்ப வேண்டும்; அல்லது வீரமரணம் எய்த வேண்டும்" என்றல்லவோ சொல்லி விட்டார் கொடும்பாளூர் பெரிய வேளார். முதன் முறையாகப் போருக்குப் புறப்படும் தனது ஒரே மகனிடம் இத்தனை கொடுமையான வார்த்தைகளா?

இது வரை அவன் அனுபவித்தறியாத அளவற்ற அனுதாப உணர்ச்சி இளங்கோவின் மீது உண்டாயிற்று அருள்மொழிக்கு. 'ஈழத்துக்குச் செல்லத் துடிக்கும் இளவல் இன்னல் ஏதும் இல்லாமல் திரும்ப வேண்டுமே' என்ற கவலையில் அவன் உருகினான்; கல்லாய்ச் சமைந்தான். அது அனுதாபம் மட்டும்தானா அல்லது அதில் வேறு உணர்ச்சிகளும் கலந்திருந்தனவா? அவற்றைக் கட்டுப் படுத்தி வைத்திருந்தானா?

இளங்கோவுக்கோ ஒரே உற்சாகம். போருக்குச் செல்ல அனுமதி கிடைத்ததும் அந்த வீர இளைஞனுக்குத் தரையில் நிற்பது போலவே தோன்றவில்லை. தான் பெற்ற பேற்றை யாரிடமாவது சொல்லி மகிழ எண்ணினான்.

நிலவிலே அமர்ந்திருந்த அந்தப் பொற்சிலை அவனைக் கண்டதும் அசைந்தது. "வெற்றி பெறவும் வேண்டும். வெற்றியுடன் திரும்பி வரவும் வேண்டும்" என்று கேட்டுக் கொண்டான் அவன். இராஜேந்திரச் சக்கரவர்த்தியின் மகனாகிய அருள்மொழி வேறென்ன கூற முடியும்? ஆனால் இளங்கோ அவனைப் புரிந்துகொண்டானா? அவன் உள்ளத்தை அறிந்து கொண்டானா?

நேயர்கள் ஆர்வத்துடன் எதிர்பார்த்து வந்த 'வேங்கையின் மைந்தன்' இந்த இதழில் ஆரம்பமாகிறது. பின்னால் கதையில் வரப்போகும் ஒரு ரசமான காட்சியை இவ்வார அட்டைச் சித்திரமாக அளிக்கிறார் ஓவியர் வினு.

# இளம் என்ஜினீயர் சம்பள உயர்வு பெறுகிறார்...










ASPRO

பெரியவர்களின் அளவு-2 வில்லைகள்

**'ஆஸ்ப்ரோ'**

வலி நோவு, ஜலதோஷம், ப்ளு, ஜுரம்போன்ற உணர்ச்சி, தொண்டைப்புண், பல்வலி முதலியவைகளுக்கும் நிவாரணம் அளிக்கிறது

## 'ஆஸ்ப்ரோ'வை நம்புங்கள்.

அது அபாயமில்லாமல் வலியைப் போக்குகிறது.

A.6/81 TM.

# திரையிடத் தயார்



காலம் மாறிப்போச்சு
படத்தை தொடர்ந்து

**சாரதி ஸ்டுடியோஸ்**
அளிக்கும் மற்றொரு

**மகத்தான**
**படம்.....**



# பாக்ய தேவதை

தமிழ்

உணர்ச்சி மிகுந்த சமூகசித்திரம்

நடிகர்கள்
ஜெமினி கணேசன் · சாவித்திரி · ராஜசுலோசனா
M.N.நம்பியார் · ராஜகோபால் மற்றும் பலர்

வசனம், பாடல் : தஞ்சை ராமையாதாஸ் · சங்கீதம் : M. வேணு

டைரக்ஷன் · சாணக்கியா



வெளியீட்டாளர்கள்
**சாம்ரியா பாக்கி டிஸ்டிரிபியூட்டர்ஸ்**
சென்னை-2.

## 89

ஆடம்பாவம் வேறு. தருமத்துக்கு விருத்தமில்லாத மானம் வேறு. மானத்தை எப்போதும் காத்துக் கொள்வது கடமை. இதைப் பற்றி வள்ளுவர் சொல்லுகிறார் :

பெருக்கத்து வேண்டும்
பணிதல் : சிறிய
சுருக்கத்து வேண்டும்
உயர்வு.

செல்வமோ செல்வாக்கோ பெருகிய காலத்தில் எல்லாரிடமும் பணிவோடு நடந்து கொள்ளவேண்டும். செல்வமும் செல்வாக்கும் சுருங்கின காலத்தில் தமது தன்மை குறைவுபடாமல் ஒழுகுதல் வேண்டும். தாழ்வு வராமல் பழைய உயர் நிலையிலேயே நின்று நடந்து கொள்ள வேண்டும்.

வெளித் தோற்றத்தில் இது விபரீதமாகத் தோன்றும். ஆயினும் இதுவே நெறி.

சிறிய சுருக்கத்து—மிகவும் குறைவான நிலையில்.

உன் செல்வம் சுருங்கச் சுருங்க நீ உயர வேண்டும் : உன் செல்வம் பெருகப் பெருக நீ பணிய வேண்டும் என்கிறார்.

* * *

மானத்தைக் காத்தலுக்கு ஒரு உவமை சொல்கிறார். தாம் இருக்க வேண்டிய நிலையில் இருந்தால் அழகு. அந்த நிலையை எந்தக் காரணத்திற்காவது விட்டு நீங்கிச் சிறுமையில் இறங்கினால் தலையிலிருந்து கொண்டு அழகு கொடுத்த கேசம் தன் இடத்திலிருந்து பிரிக்கப்பட்டுக் கீழே போடப்பட்டால் அவலட்சணமும் அழுக்குமாகி விடுவது போல், அவமான நிலை எய்துவார்

தலையின் இழிந்த
மயிர் அனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை.

தலையினின்று நீங்கின மயிரைப் போல் இகழப்படுவார் மாந்தர் தமக்குரிய நிலையினின்று நீங்கித் தாழ ஒழுகினால்

*

செல்வம் படைத்தவர்களிடம் சென்று மானத்தை மறந்து அவர்களை யண்டிப் பிழைப்பது வேண்டாம் என்று சொல்லும் குறள் பாட்டுக்கள் பல. அதைவிட உணவின்றிச் சாவதே மேல். அண்டிப் பிழைத்துச் சுகம் தேடப் பார்த்தால் அவமானமே அடைவோம்.

ஒட்டார்பின் சென்றுஒருவன்
வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று.

தன்னை இகழ்வார்பின் சென்று வாழும் வாழ்க்கையைக் காட்டிலும் தன் கஷ்ட நிலையிலே நின்று உலகம் அறியக் கெட்டுப் போவதே நலம்.

ஒட்டார் பின் சென்று-தன்னோடு சம நிலையில் நில்லாமல் தாம் மேலானவர்கள் என்று கருதும் பணக்காரர்களிடம் சென்று அவர்களிடம் பணிந்து உதவி பெற்று

* * *

இளிவரின் வாழாத
மானம் உடையார்
ஒளிதொழுது ஏத்தும் உலகு.

தமக்கு ஒரு இழிவு வந்தபோது தம் மானத்தைக் காப்பாற்றிக் கொண்டு இறந்தவரின் புகழுடம்பை உலகம் தொழுது துதிக்கும்.

உலகம் தொழுது துதிக்கும் எனறது அதுவே செய்யத் தக்கது என்று வற்புறுத்துவதற்காக. உலகம் என்பது மேலோர். அறம் தெரிந்து நடப்பவர்கள் மேலோர் மதிப்பார்கள். பாமரர்கள் ஏத்திப் பேசுவார் என்பதல்ல.

மானம் உடையார் ஒளி - மானம் உடையவருடைய புகழ் வடிவு. அதை மேலோர் தொழுது ஏத்துவார்கள்.

# யாழ்ப்பாணத்தில் வரவேற்பு

கொழும்பு, ஜூலை 26உ

இந்திய ஜனாதிபதி டாக்டர் ராஜேந்திரப் பிரசாத் தமது ஆறு நாள் இலங்கை விஜயத்தை முடித்துக் கொண்டு இந்தியாவுக்குத் திரும்பி விட்டார். அவரது இந்த விஜயம் இலங்கை இந்திய நல்லுறவை ஓரளவு பலப்படுத்தியுள்ளது என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இந்த நல்லெண்ணமும் நட்புறவும் பாமர மக்களிடம்தான் ஏற்பட்டுள்ளதேயன்றி, படித்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளும் அரசியல் வாதிகளிடையில் ஏற்பட்டிருப்பதாகச் சொல்ல முடியாது. காரணம் இந்தியப் பிரமுகர்கள் இலங்கைக்கு விஜயம் செய்யும்போதும் இலங்கைத் தலைவர்கள் இந்தியாவுக்கு விஜயம் செய்யும்போதும் இரு தேச உறவுகளைப் பற்றிப் பேசுவதும் பரஸ்பர ஒத்துழைப்பின் அவசியத்தை வலியுறுத்துவதும் வழக்கமாக இருந்து வருகிறதேயன்றி, சில தினங்களுக்குள் அதை அறவே மறந்து பழைய போக்கில் போவதுதான சகஜமாகக் காணக்கூடியதாயிருக்கிறது. பாபு ராஜேந்திரப் பிரசாத் பேராதனை பல்கலைக் கழக விசேஷ பட்டமளிப்பு விழாவில் சாஹித்திய கலாநிதி என்ற கௌரவப் பட்டத்தைப் பெற்றுக் கொண்டு பட்டமளிப்பு விழாப் பிரசங்கத்தை நிகழ்த்தியபோது இலங்கையும் இந்தியாவும் பரஸ்பரம் மாணவர்களைப் பரிமாறிக் கொண்டும் ஆராய்ச்சிகளுக்கு இரு தேச மாணவர்களுக்கும் இடமளித்தும் நெருங்கி ஒத்துழைக்கலாமென்று ஒரு அருமையான யோசனை கூறினார். ஏற்கனவே இந்தியப் பல்கலைக் கழகக் கல்லூரிகளில் பல ஆயிரம் மாணவர்கள் கல்வி பயில இந்தியா இடமளித்திருக்கிறது. இந்த மாணவர்கள் இந்தியா சென்று கல்வி பயில எவ்விதமான கட்டுப்பாடுகளுமில்லை. இலங்கையில் இந்திய மாணவர்கள் கல்வி பயிலுவதோ அத்தனை சுலபமானதல்ல. ஏற்கனவே இங்கு கல்வி பயின்று வரும் இந்திய மாணவர்களும் அவர்களது பெற்றோர்களின் வாச பர்மிட் முடிந்துவிட்ட காரணத்துக்காக நாடு கடத்தப்படுகிறார்கள். நிலைமை இவ்விதம் இருக்கையில் கல்வி விஷயத்தில் இரு நாடுகளும் ஒத்துழைப்பது எப்படி?

இலங்கைக்கும் இந்தியாவுக்குமிடையில் நட்பும் நல்லெண்ணமும் பரஸ்பர நம்பிக்கையும் காட்டாறு மாதிரி கரைபுரண்டு ஓடுவதைப்போல் ராஜன் பாபு விஜயத்தின்போது பலரும் பேசுவதைக் கேட்க முடிந்தது. ஆனால் இத்தனை அந்நியோன்யமாக இருக்கும் நாட்டு மக்களுக்கு ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டுக்கு விரும்பியபடி பிரயாணம் செய்யும் உரிமைகூட இல்லை. அதற்கு ஆயிரம் கட்டுப்பாடுகள். இந்தக் கட்டுப்பாடுகளையெல்லாம் தாண்டிக் கொண்டு ரயிலில் பிரயாணம் செய்பவர்கள் ஒரு திருட்டுக் கூட்டத்தைப் போல் மதித்துத் தலைமன்னார், தனுஷ்கோடி சுங்க அதிகாரிகளினால் கொடுமைப்படுத்தப் படுவதாகப் புகார் செய்யப்படுகிறது. கொஞ்சகாலமாக, சுங்க இலாகாவின் கொடுமையின் காரணமாகப் பிரயாணிகள் தனுஷ்கோடியில் போட்மெயிலைப் பிடிக்க முடியாமல் சுடுமணலில் பல மணிக் கணக்கில் காத்துக் கிடந்து தவியாய்த் தவிப்பதாயும், இந்த அநியாயத்தைக் கேட்பாரில்லையே யென்றும் அவர்கள் ஓலமிடுகிறார்கள். இதுதான் நல்லெண்ணத்துக்கும் நட்புறவுக்கும் அடையாளமா என்று துன்பங்களுக்கு உட்படும் பிரயாணிகள் கேட்கிறார்கள். இவ்விஷயத்தில் சென்னை அரசாங்கமும், இலங்கை அரசாங்கமும் தலையிட்டு, பிரயாணிகளின் துயரைத் துடைக்கவேண்டுமென்று கோரப்படுகிறது.

இலங்கை விஜயத்தில் பாபு ராஜேந்திரப் பிரசாத் கண்டியில் அளிக்கப்பட்ட வரவேற்பையும் யாழ்ப்பாணத் தமிழ் மக்கள் அளித்த வரவேற்பையும் என்றுமே மறக்க முடியாது. யாழ்ப்பாணத் தமிழ்ப் பெருமக்கள் ஆயிரமாயிரமாக அளவுகடந்த உற்சாகத்துடன் திரண்டு நின்று அன்புக்கடலில் ராஜன் பாபுவைத் திணற அடித்து விட்டார்கள். இதை ராஜன் பாபுவே, "உங்கள் அன்புக்கு எப்படிப் பதில் தெரிவிப்பதென்று தெரியாமல் தவிக்கிறேன்" என்று ரத்தினச் சுருக்கமாகக் கூறினது திரண்டிருந்த மக்களின் இதயங்களைத் தொடுவதாயிருந்தது.

வட இலங்கை மக்களுக்கும் தென்னிந்தியக் கலாசாரத்துக்கும் உள்ள நெருங்கிய தொடர்பை ராஜன்பாபு சுட்டிக் காட்டி, "யாழ்ப்பாணம் வாழட்டும். அங்குள்ள தமிழ்ப் பெருங்குடி மக்கள் வாழட்டும். அவர்களது மொழியும் கலாசாரமும் பன்னெடுங்காலம் வாழட்டும்" என்று வாயார வாழ்த்தினார்.

—ரஜனி

## டாக்டர் ஸ்ரீஹரி

கல்கியில் நாட்டுவைத்தியப் பகுதி எழுதி வரும் டாக்டர் ஸ்ரீஹரி அவர்கள் வருகிற 11-7-59 முதல் ஒரு மாத காலத்துக்குப் பாரத நாட்டில் பல ஊர்களில் சுற்றுப் பிரயாணம் செய்யப் போகிறார்கள். அவர் சுற்றுப் பிரயாணம் செய்யும் ஊர்களில் உள்ள கல்கி நேயர்களுக்கு டாக்டர் ஸ்ரீஹரி அவர்களின் வைத்திய ஆலோசனைகளை நேரில் கேட்கும் வாய்ப்பு கிடைக்கப் போகிறது. எனவே 11-7-59 முதல் சுமார் ஒருமாத காலத்துக்கு டாக்டர் ஸ்ரீஹரி அவர்கள் சென்னையில் இருக்க மாட்டார்கள். ஸ்ரீஹரி அவர்களின் சுற்றுப்பிரயாண விவரம் அடுத்த கல்கி இதழில் பிரசுரமாகும்.



பாகவதமாகிய

# பக்தி வயல்

பௌராணிகர்

## 44 ராஸக்ரீடை

வாய்விட்டு மனமுருகிக் கண்ணனை நினைந்து கோபிகள் பாடினார்கள். கண்ணனின் சித்தம் இரங்கியது. திடீரென்று தாமரைமுகம் திகழ, மஞ்சள் பட்டாடை உடுத்து வனமாலை மேல் அணிந்து மன்மதனுக்கோர் மன்மதனெனக் கண்ணன் அவர்கள் முன் தோன்றினான். கோபிகள் அனைவரும் திடீரென்று குதித்தெழுந்தனர். அவர்களுடைய முகம் மலர்ந்தது. ஆச்சரியத்தால் கண்கள் ஒளி வீசின. உயிர் திரும்பிய உடலென ஆயினர். ஒரு கோபி தன் இரு கைகளையும் கூப்பிக் கண்ணனுடைய மலர்க் கரத்தைப் பிடித்தாள். மற்றொருத்தி களபம் கலந்த கண்ணன் கையைத் தன் தோள் மீது வைத்தாள். பிரிவாற்றாமை பொறுக்காத பேதை ஒருத்தி தன் உதட்டைக் கடித்துச் சினத்துடன் சிறுவனை நோக்கினாள். இமை கொட்டாது மற்றொருத்தி கண்ணனுடைய முகத்தைக் கண்களால் பருகினாள். ஒரு கோபி கண் வழியாய்க் கண்ணனை மனத்தினுள் அழைத்துச் சென்று திருவுருவம் திரும்பவும் வெளியேறா வண்ணம் கண்களை மூடிக் கொண்டாள். கண்ணனைக் கண்ட விருந்தில், பிரிந்ததால் வந்த துயரத்தை மறந்தனர். குணங்களால் சூழப்பட்ட பரம்பொருளெனக் கண்ணன் அவர்கள் நடுவே நாயகனாய் நின்றான்.

கண்ணனும் கோபிகளும் யமுனையின் கரையை அடைந்தார்கள். நறுமணம் வீசும் மல்லிகையையும் மந்தாரத்தையும் முகரக் கருவண்டுகள் அங்கு கூடியிருந்தன. சரத்காலச் சந்திரன் தனது வெண்கிரணங்களால் இருள் நீக்கி ஒளியாக்கி நின்றான். யமுனையின் அலைகள் கரை மணலையும் அலை போல் பரப்பியிருந்தன. அவ்விடத்தில் கண்ணன் வீற்றிருக்கக் கோபிகள் தங்கள் மேலாடையைத் தரை மீது விரித்தனர். யோகிகள் மனத்திலே கோயில் கொண்ட கண்ணன் மூவுலகும் வியப்புறும் அழகுடன் அங்கு அமர்ந்தான். கோபிகள் கண்ணனுடன் சினம் கலந்து கேலியாகப் பேசினார்கள். "பெரியவரே! சிலர் அன்பரிடம் அன்பைக் காண்பிக்கின்றனர். சிலர் அன்பற்றவரிடமும் அன்பைக் காண்பிக்கின்றனர். மற்றும் சிலர் அன்பருக்கும் அன்பளிப்பதில்லை. இதன் காரணம் என்ன?" என்றனர். அதற்குக் கண்ணன் அழகான பதில் அளித்தான்.

"ஒருவரை யொருவர் நாடி அன்புறுவது சுயநலத்துக்கே யாகும்; இதில் காணும் மனப்பான்மை மேலானதன்று. தன்னை மதிக்காதவரிடமும் அன்புறுவது, தாய் தந்தையரைப் போல் கருணையினால் என்று அறிவீர். அன்புறாது தனித்திருப்பவர் தன்னுள்ளே தானே இன்புறும் முனிவர்களாவர்; இல்லையேல் ஆசைகளைத் தீர்த்துச் சலித்த பெரியோராவர்; மூளையில்லா மூடருமாவர்; தீது நினைக்கும் செய்நன்றி இல்லாத் தீயவருமாவர். நான் இவை ஒன்றிலும் அடங்காதவன். அன்பரை விட்டு ஏன் அகன்றேன்? தனம் கிடைத்த ஏழை அத்தனம் இழந்தால் எவ்வாறு அதையே நினைத்து மனம் உருகுவானோ, அது போலவே என்னிடம் உங்கள் சித்தம் நிலைக்க வேண்டுமென்பதற்காகவே மறைந்தேன். மறைந்திருந்தும் என் பொருட்டு, வீட்டையும் சுற்றத்தையும் மனம் சொன்ன வழியையும் சற்றேனும் மதியாது ஓடி வந்த மாதரை நான் மறக்கவும் முடியுமோ? அன்பனை என்னிடம் அருமை என்பது அடுக்காது. களங்கமற்ற உங்களுடைய அன்புக்குக் கைம்மாறு செய்ய ஒரு தேவனின் ஆயுட்காலம் போதாதே" என்றுரைத்தான்.

மதியை மயக்கும் இம்மொழியைக் கேட்ட மங்கையர் பிரிந்ததினால் பிறந்த துயரை மறந்தனர். ஆயர்குல மாதர் மணிகள் சூழ வட்டமாகக் கைகோத்து நின்றான் கண்ணன். அனைவரும் கூடி "ராஸம்" * என்ற நடனம் ஆடினார்கள்.

கோபாலன் ஒவ்வொரு கோபியின் அருகிலும் தனியாக உருவெடுத்து நின்று கொண்டு அவள் மீது தன் கரத்தை வைத்துக் கொண்டான். ஒவ்வொரு கோபியும் கண்ணன் தன்னருகிலேதான் இருக்கிறான் என்று எண்ணினாள். இந்த

* பரத முனிவர் எழுதிய நாட்டிய சாஸ்திரத்தில் ராஸம் என்பது ஆண்களும் பெண்களும் கூடிக் கை கோத்தும் ஒரு கை தோள் மீது வைத்தும் ஆடும் ஆட்டம் என்று கூறியிருக்கிறது.

வைபவத்தைப் பார்க்க ஆகாயத்தில் விண்ணவர் விமானங்களில் வந்து நின்றனர். பேரிகை முழங்கியது. மலர் மாரி பொழிந்தது. கந்தர்வர்கள் கண்ணனுடைய பெருமையை ஒன்றுகூடிப் பாடினர். மங்கையரின் மேகலை மணி ஓசையும் காற்சலங்கைச் சத்தமும் கை வளையின் சிற்றொலியும் கலந்திருக்கத் தேவகியின் திருமகன் கோபிகள் நடுவே பொன்மணி இரண்டிடையே இழைத்த மரகதமென விளங்கினன். தாளத்துடன் அடி வைத்து, கை அசைய, புருவமிரண்டசைய, மருங்கசைய, வடிவதனம் புன்முறுவலுடன் திகழ, உடல் குலுங்க, ஆடை சலசலக்க, குண்டலம் கன்னத்தைச் சென்றடிக்க முத்தென முகம் வேர்க்க, கூந்தல் கலைய, ஆடை நழுவக் கண்ணனைப் பாடிக் கொண்டு ஆடிய ஆயர்குல மங்கையர், முகில் நடுவே விளங்கும் மின்னலெனத் தோன்றினர். அன்பினால் அவர் குரலுக்கு இனிமை அதிகரித்தது. உயர் குரலில் பாடினார்கள். விசாகை என்ற கோபி கண்ணனோடு கலந்து பாடினாள். அவள் குரலினிமையைக் கேட்டுக் கண்ணன் "சபாஷ்" என்று மெச்சினான். லலிதா என்ற கோபி "த்ருபத்" என்ற மெட்டில் அந்தப் பாட்டைப் பாடவே கண்ணன் அவளையும் ஆமோதித்தான். ராதை என்பவள் ஆட்டம் கொண்டு மெய்தளர்ந்து கண்ணன் மீது கையை வைத்து ஓய்வெடுத்தனள். சண்பகமும் ஆம்பலும் கலந்ததெனக் கமழும் திருக்கையைச் சியாமளா தழுவி நின்றாள். கன்னத்துடன் கன்னம் தொட்டு சைப்யா கண்ணனை அண்டி நின்றாள். பாடியும் ஆடியும் சோர்வுற்ற பத்ரா கண்ணனின் கையைத் தன் மீது வைத்து மகிழ்ந்தாள்.

இவ்விதம் வண்டினம் இசை பாட, கை வளைகள் தாளம் போட ஆயர்குலக் கோபிமார் கண்ணனோடு ஆடினார்கள். சிறு குழந்தை கண்ணாடியில் கண்ட தன்னுருவத்தோடு விளையாடுவது போல் கண்ணனும் கோபியருடன் விளையாடினன். மெய்மறந்த கோபியரோ, கூந்தல் கலைந்ததையும், மேலாடை நழுவியதையும், மாலையும் நகையும் நகர்ந்ததையும் அறியவில்லை. வானத்தில் வந்திருந்த விண்ணுலக மாதர்கள் நிலைவற்று நிலைத்து நின்றனர்.

ஆட்டத்தால் சோர்வுற்ற கண்ணன் அச்சமயம் யமுனையில் இறங்கினான். கோபிகளும் நட்டாற்றில் நின்று கொண்டு கண்ணன் மீது நீரை வாரி இறைத்தனர். நீராடிக் கரை ஏறி எல்லோரும் கானகத்தில் திரிந்தனர். இவ்வாறு பல இரவுகள் கோபாலன் கட்டளையால் கடந்தன.

இக்கதையைக் கேட்ட பரீக்ஷித்து மன்னன், "அறத்தை நிறுத்தி அநீதியை ஒழிக்கவன்றோ கண்ணன் அவதாரம் எடுத்தான்? அப்படியிருக்க ஆயர் மாதருடன் ஏன் இரவெல்லாம் ஆடிக் களித்தான்? இது தர்மமாகுமா?" என்று சுகரை வினவினார்.

சுகர் இந்தக் கேள்விக்குச் சமாதானம் கூறினார். "நெருப்பானது எதையும் வாங்கிக் கொண்டு விழுங்கி விடுகிறது. அதற்கு நல்லது கெட்டது என்ற வேற்றுமை கிடையாது. ருத்ரன் விஷத்தை உண்டான். மற்றவர் விஷம் அருந்த முடியுமா? கர்மத்தினால் கட்டுண்டவருக்கு விதிக்கப்படும் வழிகள் இறைவனுக்கு விதிக்கலாகுமா? மாயையைத் தன் வசமாக்கி அவதாரம் செய்த பரமனுக்கு பந்தமும் இல்லை; செயற்கைப் பயனும் இல்லை. தன்னை நாடியவருடைய கோரிக்கையை நிறைவேற்ற வேண்டும் என்ற கருணையும் அருளும் மட்டுமே உண்டு. ஆயர் மாதரின் மனத்திலிருக்கும் ஆத்மாவும் அவனேயன்றோ? கண்ணன் காண்பித்தது ஒரு மாயா விலாஸம். பிருந்தாவனத்தில் கோபிகள் கண்ணனுடன் களிக்குங் கால் கோபிகள் தம்முடன் இருப்பதாகவே ஆயர்பாடி

ஆடவர் கருதினர். அதிகாலையில் கோபிகள் வீடு திரும்பியதை அவர்கள் அறியவில்லை" என்றார்.

## சங்கசூடன் வதம்

ஒரு நாள் கோபாலர்கள் அனைவரும் ஒரு நோன்பு நோற்க வேண்டி, தத்தம் மாட்டு வண்டிகளில் ஏறிக்கொண்டு 'அம்பிகாவனம்" என்ற பெயர் பூண்ட, அன்னை பார்வதிக்குப் பிரியமான ஒரு காட்டுக்குச் சென்றார்கள். அங்கு ஸரஸ்வதி நதியில் நீராடி விட்டுச் சிவனையும் பார்வதியையும் பூஜை செய்தனர். அந்தணருக்குப் பசுவும், பொன்னும் தானம் செய்தார்கள். "இறைவன் நம்மைக் காப்பானாக!" என்று வேண்டிக் கொண்டனர். விதியினால் தூண்டப்பட்டு ஒரு பாம்பு அந்த வனத்தை அடைந்தது. நந்தன் படுத்திருந்த இடத்தை அணுகி நந்தனை மெதுவாக விழுங்க ஆரம்பித்தது. நந்தன் 'கண்ணா' வென்று கதறினான். அங்கிருந்த இடையர்கள் பரபரத்து எழுந்து கொள்ளிக் கட்டைகளால் பாம்பைப் புடைத்தனர். ஆயினும் அந்தப் பாம்பு நந்தனை விடவில்லை. கண்ணன் பாம்பை அணுகி அதைத் தன் காலால் தொட்டான். பரமன் அடிபட்டதும் அதற்குப் பாபங்கள் விலகி விட்டன. வித்யாதர உருவுடன் ஒரு அழகன் தோன்றினான். "நீ யார்? ஏன் இந்தப் பாம்புப் பிறவியை அடைந்தாய்?" என்றான் கண்ணன்.

"அண்ணலே! நான் சுதர்சனன் என்று பெயர் கொண்ட வித்தியாதரன். செல்வமும் அழகும் நிறைந்தவனாய் வானத்தில் விமானத்தில் திரிந்து வந்தேன். செருக்குண்டு முனிவர்களைப் பழித்தேன். அவர்களுடைய அழகற்ற மேனியைக் கண்டு நகைத்தேன். அதன் பயனாக, எனக்கு இந்த ஈனப் பதவி கிடைத்தது. அதுவும் எனது நன்மைக்கே. இல்லையேல் நின் பாதம் என் மீது படுமா?" என்றான்.

மற்றொரு நாள் இரவில் கண்ணனும் பலராமனும் ஆயர் மங்கையருடன் பிருந்தாவனத்தில் விளையாடிக் கொண்டிருந்தனர். இருவரும் ஆனந்தமாய்த் தாமே பாடினார்கள். அச்சமயம் குபேரனுடைய சேவகன் ஒருவன், சங்கசூடன் என்ற பெயர் வாய்ந்தவன், அங்கு வந்தான். கோபிகளை வடக்கு திசை நோக்கித் துரத்தினான். "கண்ணா! காப்பாற்ற வேண்டும்" என்று கோபிகள் அலறினார்கள். கண்ணனையும் பலராமனையும் கண்டு சங்கசூடன் பயந்தான். கோபியரை விட்டு விட்டுத் தன்னுயிரைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டி ஓடினான். பலராமன் மங்கையரைக் காத்து நிற்க, சங்கசூடன் தலையில் அணிந்திருந்த ரத்தினத்தைப் பறிப்பதற்காகக் கண்ணன் அவனைத் துரத்திச் சென்றான்! சங்கசூடனைப் பிடித்துத் தலை வேறு உடல் வேறாய் வகுத்து வதம் செய்தான். அவன் தலையில் அணிந்திருந்த ரத்தினத்தை பலராமனுக்கு அளித்தான்.

## கண்ணன் குழலிசையின் பெருமை

கண்ணன் காட்டுக்குச் சென்ற பொழுது கோபிகள் வீட்டில் தங்கிப் பிரிவாற்றாமை தாங்காது மனம் கலங்கிக் கண்ணனை நினைத்து உரக்கப் பாடி நாளைக் கழித்தனர்.

"கோபியே கேளம்மா, குழலூதும் கண்ணனைக் கண்ணுற்ற விண்ணுலக மங்கையர் கானம் கேட்டுப் பரவசமாகிக் கண்மூடி, நழுவும் ஆடையையும் அறியாது மெய் மறந்தனர். இதென்ன விந்தையம்மா பெண்ணே! மார்பிலே வாழும் ரமையுடன் ரமிக்கும் நந்தகோபன் திருமகன் குழலூதும் வேளையிலே மாடுகளும் ஓவியமாய் மாறினாற் போல், காதிரண்டும் தூக்கி

ஆடாது அசையாது நிற்கின்றன! மயிற் பீலி அணிந்து மல்லனைப் போல் வேடம் பூண்டு பசுக்களை அழைக்கிறான். ஓடும் ஆற்று நீர் குளமெனத் தேங்கி நிற்கிறது. அலைகளால் கண்ணனை ஆலிங்கனம் செய்ய முயன்று முடியாமல் கால் புழுதியேனும் கிடைக்குமா என்று ஏங்கிச் செயலற்று ஓய்ந்ததா, என்ன? நம்மைப் போல அதுவும் புண்ணியம் செய்யவில்லை போலும்! குழலைக் கேட்ட மரங்களும் செடிகளும் பூவாலும் கனியாலும் தலை குனிந்து ஆனந்தக் களிப்பு மிகுந்து தேன் சொரிகின்றன. கண்ணனுடைய குழலிசை கேட்டுத் துளசியின் தேனருந்தி மயங்கிய வண்டுகளும் அன்னமும் நாரையும், நீர் வாழும் மற்றப் பறவைகளும், கண்ணனை அணுகிக் கண் மூடி நிற்கின்றன. மலைமீது குழல் கேட்டுக் கார் மேகம் மெதுவாகக் கர்ஜிக்கின்றது; கூடப் பாட ஆசையுற்றதுபோலும்! கோவைக் கனி அதரத்தில் புல்லாங்குழல் ஊதுங்கால், இசை அமுதைப் பருகவே இந்திரனும் முக்கண்ணப் பெருமானும் படைக்கும் பிரமனும் கவனித்துக் கேட்டும், புத்திசையின் மர்மங்கள் தெரியாது தயங்குகின்றனர்! புல்லாங்குழல் ஊதிக் கொண்டு அடிமேல் அடி வைத்து நடக்கிறான் கண்ணன். மாடுகள் விரைவதால் வந்த வேதனையைப் பூமிக்குத் தணிக்கவே இவ்வாறு செல்கின்றனவோ? ஆனால் அந்த நடையைக் கண்டு மையல் மிகுந்து நாம் நடையற்று நின்றோம்! கண்ணன் குழலிசையைக் கேட்டுப் பெண் மான்கள் அங்கு ஓர் [illegible]ன்று நம்மைப்போல் இனத்தை விட்டுப் பிரிந்து கண்ணனோடு கூடி நிற்கின்றன. மல்லிகை மாலையை மார்பிலே அணிந்து கொண்டு, ஆயர் மைந்தர் பலர் சூழ யமுனைக்கரையில் கண்ணன் விளையாடுங்கால், மெல்லிய பூங்காற்று களபமெனக் குளிர்ந்து அவன்மீது வீசுகிறது. கந்தர்வர் தமது இசை வாத்தியங்களுடனும் அவனைச் சுற்றிக் காத்திருக்கின்றனர். இதோ, மாலையில் மாடுகளோடு, அலைச்சலால் சோர்ந்து சுற்றி இருப்பவர் துதி பாட, அணிந்த மாலை புழுதி படிந்து கண்ணன் வீடு திரும்புகிறான். கண் சற்றே சிவந்திருக்கிறது: பழுத்த இலந்தைப் பழமென முகம் சிறிது வெளுப்பு தட்டியிருக்கிறது. தங்கக் குண்டலங்களின் ஒளி வீசிக் கன்னம் இரண்டும் மின்னுகிறது; வனமாலை அணிந்திருக்கிறான்; முகத்தில் புன்னகை; பகல் முடிய வானத்தில் தோன்றும் திங்களெனத் திகழ்கின்றான்; யானைக் கூட்டத்தின் தனித் தலைவனென வருகின்றான்; நாமெல்லாம் காத்திருந்த எம்மைக் காக்க வந்த கண்ணா, வருக, வருகவே!"

# இப்பொழுது நடைபெறுகிறது

சென்னை

காமதேனு ★ மகாலக்ஷ்மி

பிரைட்டன் ★ திருமகள்

மற்றும் தென்னாடெங்கும்



ஸ்ரீ சேஷாசலம் பிக்சர்ஸ்

அளிக்கும்...

ஸ்ரீ கஜலக்ஷ்மி பிக்சர்ஸ்...

# புதுமைப்பெண்

கதை-வசனம்...

P.A.குமார்....

சங்கீதம்...

T.G.லிங்கப்பா....

ஸ்டுடியோ...

பாரமவுண்ட்....





டைரக்ஷன்

M.திருவேங்கடம்

# பெண் என்னும் நாவல்

வாசவன்

வருத்து எடுக்கும் வெய்யில் சிவசங்கரம் பிள்ளையை வடகமாகப் பொரித்தது. குழைத்துக் கட்டுக் கட்டாக இட்டுக் கொண்ட திருநீற்றுப் பூச்சில் அரித்துக் கொண்டு ஓடியது வியர்வை. 'திருச்சிற்றம்பலம்' என்று ஓயாது முணுமுணுக்கும் அவ் வாய், உதடுகளை விரிக்காமல் அசைந்தது. வெளிக் கிளம்பாத திருச்சிற்றம்பலம், வெய்யிலில் உலராமல் அவர் மனத் தடாகத்தில் நீராடிக் கொண்டிருந்தார்!

ஒரு வழியாக வெய்யிலுக்குத் தம் நிழலைக் கொடுத்து விட்டுத் தாமும் திருசிற்றம்பலமுமாக வீட்டுத் திண்ணையில் வந்து உட்கார்ந்தார். தலையில் போட்டுக் கொண்டிருந்த துண்டை எடுத்து வேர்வைக் காடாகி விட்டிருந்த மேனியைத் துவட்டினார். வாசலில் இருந்த வேப்ப மரத்தின் காற்று, அவர் திருமேனியைத் தீண்டியது.

உடல் சிலிர்ப்பதற்குப் பதிலாக உள்ளம் சிலிர்த்தது. "திருச்சிற்றம்பலம்..."

வாய் குளிர ஒரு தடவை சொல்லிய பிறகு வாசற்படிப் பக்கம் பார்த்தார்.

காமாட்சி நின்று கொண்டிருந்தாள்.

"தாகத்துக்குக் கொண்டு வரட்டுமா, அப்பா?" காமாட்சிதான் கேட்டாள். இன்றைக்கெல்லாம் இருந்தால் அவளுக்கு இருபது வயதிருக்குமா? அதற்குள் அந்தக் குரலில் ஏன் அத்தனை ஆயாசம் வந்து விட்டது?

நாலைந்து வருஷங்களுக்கு முன்னர் காமாட்சி எப்படி இருந்தாள்? அங்கங்கள் ஒவ்வொன்றும் இரட்டி இரட்டியாய், பெண்மையின் புதைந்து கிடக்கும் இரகசியங்களை ஊடுருவிக் காட்டும் பளிங்குக் கண்ணாடிகளாய் இருந்தன. தாமரை மொட்டுகளாக இருந்த கண்கள் கருங்குவளைகளாய் மலர்ந்தன. தாமரை கருங்குவளையாக மாறும் விந்தைக் கனவு தானே பெண்மையின் 'விழிப்பு'?

காமாட்சி பாவாடைக்கு மேலே தாவணி போட்டுக் கொண்டாள். பின்னைக்கு அப்பொழுது ஆச்சரியமாக இருந்தது. 'இந்தப் பெண் தன்னை ஏன் ஒளித்து வைத்துக் கொள்கிறாள்?'

காமாட்சி புத்தம் புதியவளாக, வித்தை தெரிந்தவளாக வளர்ந்து விட்டாளா? எதையும் குழந்தைத்தனமாய்ப் பரபரப்புடன் செய்யாமல், உடைக்காமல், கொட்டாமல், பிறகு அழுது கொண்டு நிற்காமல் பாட்டியைப் போல் நிதானமாய்ச் செய்கிறாளே! இருபது வயதுக்குள் ஒரு பாட்டி எப்படி அவளுள் நுழைந்து கொண்டாள்?

எதிரே நின்ற காமாட்சியினுள் மூக்கு வழியச் சிணுங்கியபடி தம் மடியில் முகத்தைப் புதைத்துக் கொள்ளும் குழந்தைக் காமாட்சியைத் தேடி அலைந்தார் சிவசங்கரம் பிள்ளை. அந்தக் குழந்தை காலத்தோடு கரைந்து மறைந்து விட்டாள். இப்பொழுது நிற்பவள் பெரிய மனுஷிக் காமாட்சி. மூக்கைச் சிந்தத் தெரிந்த, அப்பாவின் மடியில் விழுந்து சிணுங்க வெட்கப்படும் புத்திசாலிக் காமாட்சி.

'யாருக்கு வேண்டும், இந்தப் பெரிய மனுஷி? எங்கே என் குழந்தை? எங்கே அந்தச் சிரிப்பு?'

"ஏனப்பா இப்படிப் பார்க்கிறீர்கள்! இருபது வருஷங்களாகத்தான் என்னைப் பார்த்துக் கொண்டே இருக்கிறீர்களே?" என்று சிரித்தாள் காமாட்சி.

"உனக்குள் உன்னைத் தேடுகிறேன் காமாட்சி."

"எனக்குள் நான் இருக்கிறேனே, அப்பா?" என்றாள் அவள்.

"உனக்குள் நீ வேற்றுருவத்துடன் இருக்கிறாய். ஆனால் உனக்குள்ளிருந்து என்னைத்தான் காணவில்லை."

"ஏன்?"

"நான் உள்ளிருந்து விலக்கப்பட்டு விட்டேன், காமாட்சி!"

"எதற்காக?"

"நீ ஒரு பெண்ணாக இருப்பதால்..."

"என்னுடைய சதையும், ரத்தமும், உயிரும் நீங்களாக இருக்கும்போது என்னில் இருக்கும் உங்களை நான் எப்படி விலக்குவது?"

காமாட்சி தன்னைப் பெரிய மனுஷி என்பதை இந்தக் கேள்வியின் மூலமும் காட்டிக் கொண்டாள். பெரிய மனுஷரான சிவசங்கரம் பிள்ளை சிறு குழந்தையைப் போலக் கலங்கினார். "போம்மா, கொஞ்சம் தாகத்துக்குக் கொண்டு வா!" அவளை அனுப்பிவிட்டுக் கண்களை இலேசாக மூடினார். மனத்துள் அடைபட்டிருந்த திருச்சிற்றம்பலக் கதவம் மீண்டும் திறந்து கொண்டது.

**'எங்கே னும்இருந்துன் அடியேன் உனைநினைந்தால்**
**அங்கே வந்தென்னொடும் உடனாகி நின்றருளி**
**இங்கே என்வினையை அறுத்திட் டெனையாளும்**
**கங்காநாயகனே கழிப்பாலை மேயானே!'**

"என்ன, தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுகிறீர்களா? நீங்கள் போன காரியம் பழம் தானே?"

குரல் கேட்டு நேரடியாகத் திரும்பவில்லை பிள்ளை. ஊற்றுக் கண்களை உள்ளங் கையால் தேய்த்து விட்டுக் கொண்டு திரும்பினார்.

தண்ணீர்த் தம்ளரை அவரிடம் நீட்டிக் கொண்டு அவர் முகத்தை ஆவலுடன் பார்த்தாள் பாக்கியம்.



"பழம்தான்." தண்ணீர் தாகத்தைத் துரத்தியது. 'பழம்' அவரைத் துரத்தியது. பெருமூச்சில் கனல் பறந்தது.

"எப்பொழுது பெண் பார்க்க வருகிறார்களாம்?"

"நாளைக்கு."

"என்னவோ காமாட்சி தபஸ் செய்து கொண்டிருந்ததற்குத் தெய்வம் அனுக்ரஹித்து விட்டது. அந்த இடமே முடிந்து விட்டால் நான் உங்கள் சிற்றம்பலத்தானுக்குப் பால் அபிஷேகம் செய்யலாம் என்றிருக்கேன். ஜாதகம் பொருந்தி இருக்கிறது. நம் காமாட்சியைப் பார்த்ததும் பையன் அடுத்த முகூர்த்தத்திலேயே திருமணத்தை வைத்துக் கொள்ளலாம் என்று சொல்லப் போகிறான்..." என்று உற்சாகத்துடன் பேசிக் கொண்டு போன பாக்கியம், கதவுப் பக்கம் திரும்பிப் பார்த்தாள்.

கதவுக்குள் உடலை மறைத்துக் கொண்டு, வெளியே தலையை மட்டும் நீட்டிக் கொண்டிருந்த காமாட்சியின் முகத்தில் எத்தனை உற்சாகம்? அவள் கண்களில்தான் எத்தனை விந்தைக் கனவுகளின் சதிராட்டம்? வெளுத்துப் போன அந்த முகத்தில் எங்கிருந்து கலையான குங்கும வண்ணம் பாய்ந்து பரவுகிறது?

சிவசங்கரம் பிள்ளைக்கு அப்பொழுது தான் காமாட்சி ஏன் குழந்தையாக இருக்கவில்லை என்பது புரிந்தது. வாழ்க்கை என்ற இறக்கையை நீட்டி வேற்று இடத்துக்குப் பறந்து போக விரும்புகிறாள்!

வஞ்சகி! இப்படிப் பறந்து போகவா குழந்தையாகப் பிறந்து, அவர் உயிரோடு உள்ளத்தோடு, ரத்தத்தோடு கலந்தாள்? அவருடைய மூச்சின் ஓர் இழையை இருபது வருஷங்களுக்குப் பிறகு பறி கொடுக்கவா 'என் செல்வம், என் செல்வம்!' என்று பித்தாய் அலைந்தார்? பெற்றவர்களை, பிறந்த மண்ணை உதறி விட்டுப் போகத்தானா இந்த நாலைந்து வருஷங்களாக வேதனையால் மெலிந்தாள்? 'கல்யாணம்' என்றதும் எவ்வளவு உற்சாகம்?

சிவசங்கரம் பிள்ளை ஆழ்ந்த பெருமூச்சொன்றை எழுப்பினார்.

"ஏன் இப்படி உட்கார்ந்து விட்டீர்கள்? இப்படி உட்கார்ந்து உட்கார்ந்து தான் வாழ வேண்டிய பெண்ணை இத்தனை காலமாக வதைத்துக் கொண்டிருந்தீர்கள். எழுந்திருங்கள். சம்பந்தம் அண்ணாவிடம் போய் உடனே பணத்தைத் தயார் பண்ணச் சொல்லுங்கள். அப்படியே நாகரத்தினை அக்காளுடையவில் வண்டிக்கும் சொல்லி வையுங்கள். எங்கேயும் அஜமந்தமாக நின்று கொண்டிருக்காதீர்கள். சந்தைக்குப் போய் விட்டு வரவேண்டும்" என்று பாக்கியம் படபடத்தாள்.

அவளுக்கு அவர் எப்பொழுதுமே அஜமந்தம்தான். அவரோடு வாழ்க்கை நடத்

திய இருபத்தைந்து வருஷ காலத்தில் அவர் புத்திசாலித்தனமாய் நடந்து கொண்டதாக ஒரு சந்தர்ப்பத்தைக் கூடச் சொல்வதற்கில்லை என்பது பாக்கியத்தின் அபிப்பிராயம். முட்ட முட்டப் பசுவின் மடி சுரப்பதைப் போல, பாக்கியம் மோத மோதத்தான் சிவசங்கரம் பிள்ளையின் அறிவு சுரந்து வழியும்.

இப்பொழுது பாக்கியம் மோதியவுடன் பிள்ளையின் அறிவு சுரக்கவில்லை; வயிறுதான் சுருண்டு கொண்டது. "ஏன் பாக்கியம், மதியம் ஆகி விட்டதே! சமையலாகி விட்டதோ?"



"சதா சமையலிலே ஞாபகமாக இருங்கள்! காமாட்சி கல்யாணம் நடந்து, அவள் புருஷன் வீட்டுக்குப் போகும் வரை, சமையலையும் உங்கள் திருச்சிற்றம்பலத்தையும் மறந்து விட வேண்டும். தெரிகிறதா? ஊம்; கிளம்புங்கள்." பாக்கியம் அடிக்காத தோஷம்தான்.

சிவசங்கரம் பிள்ளை, "திருச்சிற்றம்பலம்!" என்று கூறிக் கொண்டே எழுந்தார். எரிக்கும் வெய்யிலில் தலையில் துண்டைப் போட்டுக் கொண்டு நடந்தார்.

வெய்யிலைவிட இப்போது அவர் மனம்தான் அதிகமாக எரிந்தது.

'இந்தப் பாக்கியம்கூட அல்லவா காமாட்சியை விரட்டத் துடிக்கிறாள்? கைகுளிர வளர்த்து விட்டு, கண்ணுக்கு எதிரே பறி கொடுத்து நிற்க எத்தனைமகிழ்ச்சியாக அலைகிறாள்? காமாட்சி ஆடிக் களித்த வீட்டில் அவள் இல்லாமல் ஒரு நிமிஷம் வாழ்வதா? 'திருச்சிற்றம்பலம்! நாளைக்கு வரும் மாப்பிள்ளைக்கு என் காமாட்சியைப் பிடிக்காமல் செய்து விடு. அவளைப் பிரிந்து என்னால் இருக்கவே முடியாது! அவள் என்னில் வளர்ந்தவள். அவளுடைய அன்பை என்னிடமிருந்து பறித்துப் போக நாளைக்கு ஒரு திருடன் வருகிறான். அவனிடமிருந்து அவளைக் காப்பாற்று!'

மறுநாள். மாப்பிள்ளை வருகையால் வீடே கலகலப்பாக இருந்தது. சிவசங்கரம் பிள்ளை மட்டும் கலகலப்பில்லாமல் இருந்தார். தம்முடைய ஐசுவர்யக் குவியலை அபகரித்துக் கொள்ளப் போகும் கள்ளனுக்குத் தம் வீட்டிலேயே விருந்தும் உபசரிப்பும்! ஊர் அறிய நடக்கும் இந்தத் திருட்டில், சொத்தை இழக்கப் போகிறவர் கூச்சலோ கூப்பாடோ போட முடியவில்லை.

ஒப்புக்குச் சிரித்த வாயும், உண்மைக்கு அழுத மனமும் மாப்பிள்ளையின் முடிவை ஆவலோடு எதிர்பார்த்தன.

"பெண்ணை எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. அடுத்த வாரமே முகூர்த்தத்துக்கு ஏற்பாடு செய்யுங்கள்!" மாப்பிள்ளைப் பையன் கூறிவிட்டான்.

சிவசங்கரனின் உள்ளத்திலே இடி இறங்கி விட்டதா? அழுகையை அடக்க அவர் பட்ட பாடு!...நீர் அரும்பிய விழிகளால் சமையல் அறைப் பக்கம் பார்த்தார். பாக்கியத்தின் முகத்தில் தான் எத்தனை மலர்ச்சி! பால் அபிஷேகத்துக்கு ஆசைப்பட்டு அவள் பங்கில் வேலை செய்து விட்டானே அந்தத் திருச்சிற்றம்பலத்தான்!

காமாட்சிகூட வெட்கத்தை விட்டுப் புன்னகை புரிகிறாளே! பயல் மயக்கி விட்டான். நேற்று இருந்த கொத்தவரங்காய்க் காமாட்சி அல்லவே இவள்! எழில் பொங்கும் வன தேவதையாய் எத்தனை பொலிவுடன் இருக்கிறாள்? இந்தக் கல்யாண ஏக்கத்தால் தான் அப்படி நாலைந்து வருஷங்களாக அவள் உலர்ந்து போயிருந்தாளா? பெற்றவர்களை உதறிச் செல்லத்தான் இந்தத் திருடனின் துணைக்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்தாளா?

# ராம்தீர்த் யோகாஷ்ரமத்தின் சில செயல்கள்


SHRI YOGIRAJ UMESHCHANDRAJI



## ராம்தீர்த் பிராமி ஆயில் - ஸ்பெஷல் நெ. 1

கூந்தல் தைலம், மூளைக்கு ஔஷதம் கண்களுக்கும் ஞாபக சக்திக்கும் ஆழ்ந்த நித்திரைக்கும் உடல் வலியைப் போக்குவதிலும், ராம்தீர்த் பிராமி ஆயில் யாவருக்கும் எக்காலத்தும் உகந்தது. பெறுதற்கரிய பலவித மூலிகைகளினால் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட ராம்தீர்த் பிராமி ஆயில் இப்பொழுது எல்லா இடங்களிலும் புதிய பாட்டிலில் கிடைக்கிறது.

**பெரிய பாட்டில் விலை ரூ. 4/-: சிறியது ரூ. 2/-**

எங்கும் கிடைக்கும்

பலவித உன்னத மூலிகைகளினால் ராம்தீர்த் பிராமி எண்ணெய் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது

### யோகாசன வரைவு படம்

ஆரோக்யமாகவும் திடமாகவும் திகழ யோகாசனங்களை விவரிக்கும் எமது அழகான ஆசனப் படத்திற்கு எழுதுங்கள். ரூ. 2-50 மணியார்டர் அனுப்பி இப்படத்தைப் பெற்றுக்கொள்ளலாம். வீட்டிலிருந்தே ஆசனங்களைச் சுலபமாகப் பழகலாம்.

யோகாசன வகுப்புகள் காலை 7-30லிருந்து 9-30 மணி வரையிலும், மாலையில் 6-லிருந்து 7-30 மணி வரையிலும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. பிரதி ஞாயிறுதோறும் காலை 10 மணிக்கு யோகாசன சொற்பொழிவுகள் உண்டு.

## ஸ்ரீ ராம்தீர்த் யோகாஷ்ரமம்

Phone: 6289 தாதர் - சென்ட்ரல் ரயில்வே - பம்பாய் -14 Grams: PRANAYAM, Dadar - Bombay

ராம்தீர்த் பிராமி டெப்போ: 257, தங்கசாலைத் தெரு, சென்னை - 1




'' சரி' என்று சொல்லுங்களேன் '' உள்ளிருந்து சிறினாள் பாக்கியம்.

'' சரி...'' மோதிச் சுரந்த வார்த்தை மூளைப்பின்றி வந்தது.

'' பிள்ளைவாளுக்கு ஆனந்தம். அதனால் தான் கண்ணும் குரலும் தளும்புகின்றன '' என்று கூட்டத்தில் யாரோ ஒருவர் சொன்னார்.

பிள்ளைவாளுக்கு அப்பொழுது இருந்தது என்ன என்பதை வெளியிட்டுச் சொல்ல முடியுமா ? பந்த பாசத்தால் சுழல்கிற உலகத்துக்கு, பாசத்தின் நழுவலை உணர்ந்து கொள்ள அறிவு இருக்கிறதா, என்ன?

அடுத்த முகூர்த்தத்தில் சௌ. காமாட்சியைச் சிரஞ்சீவி சிதம்பரத்துக்கு மனம் எரியக் கன்னிகாதானம் செய்து கொடுத்தார் சிவசங்கரம் பிள்ளை.

பிள்ளையும் பெண்ணும் ஓரக் கண்களால் பார்த்து உள்ளத்தைப் பரிமாறிக் கொண்டார்கள். கைகளைப் பற்றி அக்னியை வலம் வந்தார்கள். அருந்ததியைப் பார்த்தார்கள்.

தகப்பன் மகளைத் திருட்டுக் கொடுக்கும் இந்தத் துக்கத்துக்கா அக்னியும் அருந்ததியும் சாட்சிகள் ? 'முப்பத்து முக்கோடி தேவர்களே, ஏன் இத்தனை ஆனந்தத்துடன் அட்சதையோடு ஓடி வந்திருக்கிறீர்கள் ? நீங்கள் பெண்ணைப் பெறவில்லையா ? கன்னிப் பருவத்தில் அவளை நீங்கள் பறி கொடுத்து விட்டுக் கண் கலங்கி நின்றதில்லையா ? மனித சமுதாய வளர்ச்சியில் ஒரு தகப்பனுக்குக் கிடைப்பது கண்ணீர்தானா ?'

பொங்கி வந்த அழுகையுடன் மூலையில் போய்ப் படுத்துக் கொண்டவர்தான். பந்தி விசாரணை, உபசரிப்பு என்று எதையும் கவனிக்காமல், உற்சாகத்துடன் இன்று வந்தவளை மனத்தில் ஏந்திக் கொண்டு திரிந்த காமாட்சியை எண்ணி எண்ணி வெந்தார்.

வந்தவர்கள் பேசிக் கொண்டார்கள். '' பிள்ளைவாள் ஒற்றைக் கை மனுஷர் தானே? பெரிய விஷயத்தை ஓடி ஓடிச் செய்து இப்பொழுது விழுந்து விட்டார் !'' என்றார்கள்.

அவர் செய்த பெரிய விஷயம் எது ? ஒரு பெண்ணைப் பெற்றது ; அவளிடத்தில் அன்பு வைத்தது. 'திருச்சிற்றம்பலம், நீ பிள்ளைகளை மட்டும் பெற்றவன். அதனால்தான் பெண்ணின் பிரிவை உணராமல் என்னை வாட்டி எடுக்கிறாயா ?'

இரவு ஒன்பது மணி வரை அவர் பல்லில் பச்சைத் தண்ணீர் படவில்லை. வெளிச்சத்தில் நடக்கும் வித்தைத் திருட்டு நிகழ்ச்சியைப் பார்க்கப் பிடிக்காமல் இருளுக்குள் முகத்தைப் புதைத்துக் கொண்டு கிடந்தார். பந்தபாசம் என்பதெல்லாம் மனிதன் ஏமாற்றிக் கொள்கிற விஷயங்கள். அந்த ஏமாற்றம் ஐம்பதாவது வயதில்தானா அவருக்குப் புரிய வேண்டும் ?

ஏமாற்றத்தைப் புரிந்து கொண்டவர் இனியும் ஏமாறுவரா ? குடும்பப் பொறியில் சிக்கி மீண்டும் மீண்டும் இந்த ஏமாற்றத்துக்காகக் காத்துக் கொண்டிருப்பதா ?

முடியாது ! காமாட்சிக்கு முளைத்த இறக்கை அவருக்கும் முளைத்து விட்டது. அவள் குடும்பத்தை விட்டுப் பறந்து போக இருப்பதைப் போல் அவரும் குடும்பத்தை விட்டுப் பறந்தோட முடியும்.

கழுத்தில் கட்டிப் போட்ட கல்லைப் போல் இனி அவரைப் பாக்கியம் அழுத்திக்கொண்டிருக்க முடியாது. இந்த

வீட்டை விட்டுக் கிளம்பி விட்டால் அந்தக் ‘கல்’ நழுவி விழுந்து விடும்.

மெதுவாக எழுந்தவரின் தோளை, ஒரு மெல்லிய கரம் அழுத்தியது.

ஏறிட்டு நோக்கினார். மங்கிய வெளிச்சத்தில் பாக்கியம் புன்னகையுடன் நின்று கொண்டிருந்தாள். கல் இன்னும் அவர் கழுத்தை வளைக்கிறதா?

"உடம்பு எப்படி இருக்கிறது?"

"உடம்போடு இருக்கிறது."

"நீங்கள் வந்து படுத்து விட்டீர்கள். எல்லாப் பொறுப்புகளையும் முடித்துக் கொண்டு உங்களிடம் வர இவ்வளவு நேரமாகி விட்டது."

"அதனால் என்ன? இன்னும் காரியம் இருக்குமே, போய்ப் பார்."

"அந்தக் காரியத்தைச் செய்ய நீங்களும் வேண்டும்."

"நான் எதற்கு?"

"பெண்ணைப் பெற்றிருக்கிறீர்களே, அதற்கு! பெண்ணைச் சாந்தி முகூர்த்த அறைக்கு அனுப்ப வேண்டும். நாமிருவரும் அவளை ஆசிர்வதித்து, பெற்றுப் பெருகிப் பெருவாழ்வு வாழ நிறைவோடு அனுப்ப வேண்டும். காமாட்சி காத்துக் கொண்டிருக்கிறாள். வாருங்கள்."

"நான் வரவில்லை."

"அவள் மங்கள வாழ்வு வாழ்வதில் உங்களுக்கு விருப்பமில்லையா?"

"அவளுடைய மகிழ்ச்சியை அவளே அநுபவித்துக் கொள்ளட்டும். என்னை விட்டு விடு; போ."

"புரிகிறது உங்கள் நோய்க்குக் காரணம்" என்று சிரித்த பாக்கியம், சிறிது நேரத்துக்குப் பிறகு இளங் காற்றுக் குரலில் பேசினாள். "அன்றிலிருந்தே உங்களைக் கவனித்து வருகிறேன். ஏன் இப்படி அன்பால் ஓர் அரக்கராக மாறி விட்டீர்கள்? காமாட்சியைத் துரோகி என்று நினைக்கிறீர்கள். அவள் கணவனைக் கள்ளன் என்று எண்ணுகிறீர்கள்."

"ஆமாம்."

"அப்படியானால் நானும் ஒரு துரோகி தான். நீங்களும் ஒரு திருடர்தான். என் பெற்றோரிடமிருந்து என்னைத் திருடி வந்தபோது அவர்களுக்காக நீங்கள் கலங்கினீர்களா? நான்தான் கலங்கினேனா? பல ஜன்மங்களின் தொடர்பை இந்த ஜன்மத்திலும் தொட்டுக் கொண்டதாகப் பேசிப் பேசி நாம் மகிழவில்லையா?"

"மகிழ்ந்தோம்."

"அதே மகிழ்ச்சி இந்தத் தம்பதிகளுக்கும் இருக்கிறது. இது நியாயந்தானே? மண்ணுக்குள் வேர் விட்டு ஆகாயத்தில் பலன் விளைவிக்கும் மரத்தைப் போலத்தான் ஒரு பெண்ணுடைய வாழ்க்கையும். பிறந்த இடத்தில் சேகரித்துக் கொண்ட வட்டத்தைப் புகுந்த இடத்தில் பலனுக்கு விளைந்து நிற்பதுவே பெண்ணின் வாழ்க்கை. திருமணத்தைத் திருட்டு என்று நினைக்க உங்களுக்கு வெட்கமாக இல்லையா? அவளுடைய வாழ்க்கையைத் தேடிக் கொள்வதற்கு, நம் அன்புப் பொக்கிஷத்தைத் தியாகம் செய்து, கடவுளால் நிர்மாணிக்கப்பட்ட ஒருவனிடம் மாற்றி விடுகிறோம். இந்த உயர்ந்த லட்சியத்தைக் களவு என்று களங்கப்படுத்தலாமா?"

சிவசங்கரம் பிள்ளையின் அறிவு மோத மோதக் கூர்ப்பதுதானே? பாக்கியம் அறிவில் மோதிப் பொறி பறக்க வைத்ததும், அவர் மூளையில் தெளிவு தெளிந்தது.

"அப்படித்தானா பாக்கியம்?"

"அப்படியேதான்! பெற்றோர்களின் இந்த உயர்ந்த தியாகத்தால்தான் திருமண மேடைக்கு முப்பத்து முக்கோடி தேவர்களும், அக்கினியும், அருந்ததியும் வருகிறார்கள். அவர்களையெல்லாம் அலட்சியப்படுத்தி விட்டு இந்த மூலைக்கு ஓடி வந்து விட்டீர்களே!"

தம் தோளை விட்டு விலகாத பாக்கியத்தின் கையைப் பற்றிக் கொண்டார் பிள்ளை. "உண்மைதான் பாக்கியம்! உன்னைப் போல் நானும் தன் தியாக சீலத்தை ரசித்துக் கொண்டிராமல், இருளில் என்னைப் புதைத்துக் கொண்டேன். வா. குழந்தையை ஆசிர்வதிக்கலாம்!"

பிடித்த பிடியை விடாமல் பாக்கியத்தைப் புது உற்சாகத்துடன் இழுத்துக் கொண்டு ஓடினார்.

தீபச் சுடர் போல் ஒளி மயமான வாழ்க்கையை ஏந்திக் கொண்டு நின்ற காமாட்சி, பெற்றோர்களின் காலில் விழுந்து நமஸ்கரித்தாள்.

தன் பூங்கொடிப் பெண்ணைத் தூக்கி நிறுத்தி, உள்ள நிறைவோடு திருநீற்றைப் பூசி விட்டார் பிள்ளை. அவள் கையில் பாலும் பழமும் கொடுத்தாள் பாக்கியம். குமரிப் பெண்கள் குறும்புத் தனமாய்க் கொட்டம் அடித்தனர்.

மாடிப் படியில் சீரடி பதித்து, நாணம் கலந்து மகிழ்வுடன் போய்க் கொண்டிருந்தாள் காமாட்சி பெண் என்ற சுவாரஸ்யமான நாவலின் முதல்பாகம் நிறைவுற்று, இரண்டாவது பாகம் தொடங்கியதன் ஒலியை, அவளது கை வளையல்கள் கலகலத்துக் காட்டின.

சிவசங்கரம் பிள்ளையின் கண்கள் நீரால் நனைந்தன. அது அவருக்காக விட்ட துக்கக் கண்ணீரல்ல; தன் உயிரின் உயிரான காமாட்சிக்காக அன்புப் பெருக்கிலே விட்ட ஆனந்தக் கண்ணீர்.

# வேங்கையின்




## முன்னுரை

"எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந்நாடே—அதன்
முந்தைய ராயிரம் ஆண்டுகள் வாழ்ந்து
முடிந்ததும் இந்நாடே... —இதை
வந்தனை செய்து மனதிலிருத்தி என்
வாயுற வாழ்த்தேனே!"
—பாரதி.

ஆம்; ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இந்தத் தமிழ்த் திருநாடு பெற்றிருந்த பேற்றை நினைக்கும்போது நம்முடைய மனம் பொங்கிப் பூரிக்கின்றது. நெஞ்சு பெருமிதத்தால் விம்முகின்றது. "எந்தாய் வாழ்க! எந்தாய் வாழ்க!" என்று உள்ளம் குளிர வாய் வாழ்த்தத் துடிக்கின்றது.

கங்கை வள நாட்டிலே தமிழரின் புகழ் மண்டி வளர்ந்தது. கடல் கடந்த கடாரத்திலும், ஸ்ரீவிஜயத்திலும், பழந்தீவு பன்னீராயிரத்திலும், ஈழத்தின் எண் திசையிலும் அவர் பெருமையே பேசப் பெற்றது. தமிழகத்தின் தனிக் கொடியாகச் சோழர்களின் புலிக்கொடி இந்தப் பாரெங்கும் பட்டொளி வீசிப் பறந்த நம்முடைய மாபெரும் பொற்காலம் அது.

பிற்காலச் சோழர்களில் தனித்தன்மை பெற்றுத் தன்னிகரில்லாமல் திகழ்ந்த மாவீரர் இராஜராஜ சோழர்! வீரத்தில் வேங்கையாகவும் அரசியல் பெருந்தன்மையில் சிங்கமாகவும் விளங்கியவர் அவர். அந்த வேங்கையின் மைந்தன் இராஜேந்திரரோ தம் தந்தை அமைத்துக் கொடுத்த அடித்தளத்தில் மிக உயர்ந்த மாளிகையை எழுப்பியவர்.

அந்தத் தமிழ் சாம்ராஜ்ய மாளிகைக் கோபுரங்களில் எண்ணற்ற வெற்றிப் பொற்கலசங்களை ஏற்றி வைத்தவர்.

தமிழ்ச் சாதி இந்தத் தரணி எங்கும் செருக்கோடு மிடுக்கு நடை போட்ட உன்னதமான காலம் அது.

நான் கவிஞனாகப் பிறக்கவில்லையே! மாமன்னர் இராஜேந்திரரையும் அவரைப் பெற்றெடுத்த தமிழ்ப் பெருமகனையும் போற்றி ஆயிரம் ஆயிரம் கவிதைகள் புனைந்திருப்பேனே! ஓர் காவிய மாளிகை உருவாக்கும் செயலில் என் ஒவ்வொரு மூச்சையும் செலவிட்டிருப்பேனே!! தமிழ் நாட்டுக் கவிப் பெரு மக்களுக்கு இதை இப்போது நினைவூட்ட விரும்புகிறேன்.



மாமன்னர் இராஜேந்திரரின் வாழ்க்கையும் அவர் உருவாக்கியபொற் காலமும் எனக்கு இந்தக் கதையை எழுதுவதற்கு உற்சாகம் தருகின்றன. அந்தப் பேரரசர்தாம் இந்தக் கதையின் நடுநாயகமாக விளங்குகிறார். என்றாலும் இதன் கதாநாயகன் சரித்திரச் சான்றுகளின் இடைவெளிக்குள் மறைந்து கொண்டிருக்கும் ஒரு வீர இளைஞன். கொடும்பாளூர் வேளிர் குலக் கொழுந்தான தென்னவன் இளங்கோ வேள்.

சரித்திரச் சான்றுகள், இராஜேந்திரர் தம் தந்தையிடமிருந்து ஆட்சிப் பொறுப்பேற்று மணிமகுடம் புனைந்து கொண்ட காலத்தில் அவருக்குச் சுமார் ஐம்பது வயதென்று கூறுகின்றன. அவர் ஆட்சியின் மாபெரும் வரலாற்று நிகழ்ச்சிகள் இன்னும் சில ஆண்டுகள் சென்றே நடைபெற்றிருக்கின்றன. ஆகவே அந்த மன்னர் பெருமகனை இளம் கதைத் தலைவராக வைத்துக் கொண்டு கற்பனைகளைச் சூழவிட்டால், அவருடைய பெருமைக்கு மாசாகுமே என்று அஞ்சுகிறேன். எனினும் இந்தச் சரித்திரக் கற்பனையின் பின்னணியில் தமக்கே இயல்பான இமயத்தின் கம்பீரத்துடன் அந்த வேங்கையின் மைந்தன் பவனி வருகிறார்.

சோழர்களின் புலிக்கொடியைத் தமிழகத்தின் பொதுக் கொடியாக ஏந்திக் கொண்டு இக்கெட்டிலும் பாய்ந்து சென்றனர் லட்சக் கணக்கான மாவீரர்கள். அத்தகைய வீரர்களில் ஒருவனே இளைஞன் தென்னவன் இளங்கோவேள். சோழர்களுக்காகவே வாழ்ந்து சோழர்களுக்காகவே போராடித் தியாகம் புரிந்த கொடும்பாளூர்ப் பரம்பரையின் வழித்தோன்றல் அவன். இராஜேந்திரரைப் பெற்றெடுத்த வீரத் தாய் வானவன்மாதேவியை எந்தக் கொடும்பாளூர் வேளிர் குலம் பெற்றெடுத்ததோ அதே குலம்தான் இளங்கோவையும் பெற்றெடுத்தது.

இளங்கோ வேளின் லட்சியக் கனவுகள், அவன் புகுந்த போர்க்களங்கள், அவனது வீரம், காதல் முதலிய அகப் புறப் போராட்டங்கள்- இவற்றையே நான் இங்கு சொல்ல விரும்புகின்றேன். இராஜேந்திரரின்



மூதத் புதல்வி அருள்மொழி நங்கை அவனுக்கு முறைப் பெண்தான். ஆனால் உறவு முறையும் அரச முறையும் ஒன்றுகுமா? மற்றொரு பெண் சோழர் குலத்தையும் அவர்களைச் சார்ந்தவர்களையும் வெறுத்து ஒதுக்கும் குலத்தில் பிறந்த ரோகிணி. அப்படி யிருந்தும் ஏன் அவனால் இளங்கோவை வெறுக்க முடியவில்லை? ஏன் ஒதுக்க முடியவில்லை?

சிலப்பதிகாரக் காலத்துக்கு முன்பிருந்தே பெருமையுடன் திகழ்ந்த பெரும் நகரம் கொடும்பாளூர். சோழ நாட்டிலிருந்து பாண்டி நாடு செல்லும் சாலையில், இரண்டு நாடுகளுக்கும் எல்லையை வகுத்துவிட்டு, இடையில் வளர்ந்த சிற்றரசின் தலைநகரம் அது. காலங்காலமாக அதை ஆண்டுவந்த வேளிர்குல மக்கள் எத்தனை எத்தனையோ வெற்றி தோல்விகளைக் கண்டிருக்கிறார்கள். அவர்கள் நன்றாக வாழ்ந்தபோதெல்லாம் தமிழ் மொழியும் வாழ்ந்தது; வள்ளல் தன்மையும் வளர்ந்தது; புலவர் பெருமக்களும் பெருகினர்.

சங்க காலம் தொட்டு இலக்கியத்திலும் பிற்காலத்தின் வரலாற்றிலும் அழியாப் பெயர் பெற்ற கொடும்பை மாநகரையும் இராஜேந்திரனின் வெற்றிச் சின்னமான கங்கைகொண்ட சோழபுரத்தையும் சரித்திரக் கற்பனைகளைக் கிளறும் வேறு சில இடங்களையும் நேரில் சென்று பார்க்க விரும்பினேன்.

'கல்கி' ஆசிரியர் திரு சதாசிவம் அவர்கள் சுற்றுப் பிரயாணத்துக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தார்கள்.

கொடும்பாளூரில் வேளிர்குல வீரர்கள் உலவிய இடங்களில் உலவினேன். கங்கை கொண்ட சோழபுரத்தில் இராஜேந்திர மாமன்னர் மிதித்த தமிழ் மண்ணை மிதித்தேன். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அந்த நகரங்கள் எப்படியிருந்திருக்கக் கூடும் என்று கற்பனை செய்து பார்த்தேன். எங்கோ வானத்தின் உச்சியில் நான் மிதப்பது போல் தோன்றியது. இன்றைய நிலையை உற்று நோக்கினேன். இரண்டு சொட்டுக் கண்ணீர் மணிகள் என் விழிகளில் திரண்டன. அவற்றை அரும்பாடுபட்டு என் இதயத்திலேயே தேக்கிவைத்துக்கொண்டேன். அந்தக் கண்ணீர் சொல்லும் கதையே இந்த 'வேங்கையின் மைந்தன்'.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த கதையாக இதை எழுதப் புகுந்தாலும் இன்

றைய வாசகர்களுக்காக எழுதுவதை நான் மறந்து விடவில்லை. முற்றிலும் வரலாற்றுப் பாத்திரங்களையும் நிகழ்ச்சிகளையும்மட்டுமே கொண்ட சரித்திரக்கதையல்ல இது. வரலாறு தழுவிய கற்பனைக் கதை. கதாபாத்திரங்களில் சிலரே வரலாற்று நூல்களில் வாழ்பவர்கள்; இன்னும் சிலர் இக்கதையில் மட்டும் வாழ வந்திருப்பவர்கள். சரித்திரச் சான்றுகளை என் கற்பனைக்குத் தேவையான அளவுக்கே ஏற்றுக் கொண்டிருக்கிறேன். மேலும் சரித்திர ஆராய்ச்சியாளர்கள் தக்க சான்றுகள் கிடைக்காமையால் சிற்சில இடைவெளிகளை இன்னும் விட்டு வைத்திருக்கிறார்களல்லவா? அந்த இடைவெளிகளின் வழியே இக்கற்பனையின் சில கொடிகளைப் படரச் செய்திருக்கிறேன். வரலாற்று ஆசிரியர்களும் மாணவர்களும் கதாசிரியனின் மனோதர்மத்துக்கு மதிப்பளித்து இதை வரவேற்பார்கள் என்றே நம்புகிறேன்.

தமிழ்த் திரு நாட்டை மீண்டும் பொன் விளையும் பூமியாக, புகழ் பெருக்கும் தாயகமாக, அன்பும் அறிவும் அருளும் மலரும் கலைச் சோலையாக உருவாக்க வேண்டுமென்ற ஆவலை வாசகர்களில் சிலரிடமாவது இந்தக் கதை தூண்டி விடுமானால் அதுவே எனது நோக்கத்தின் பயனாகும்.

## முதல் அத்தியாயம்

# சோலைமலைச் சாலை

ஒரு நூறாயிரத்து நாற்பத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்பு சித்திரை மாதத்தில் ஒரு நாள் முற்பகல் பொழுது.

கிளையோடு கிளை பின்னிப் பிணைந்து காட்டு மரங்கள் நிழலும் மலரும் உதிர்த்திருந்த சோலைமலைச்சாலையில் குதிரைகள் இரண்டு விரைந்து சென்று கொண்டிருந்தன. பாதை கரடுமுரடான மலையடிப் பாதை; குதிரைகளும் அரபு நாட்டு முரட்டுக் குதிரைகள். அந்தக் குதிரைகளைச் சோழ வள நாட்டின் காவேரித் தண்ணீரும், காவேரிக் கரையை ஒட்டி மண்டிக் கிடந்த பசும் புல்லும் நன்றாகக் கொழுக்க வைத்திருந்தன. குழந்தைகளை வளர்ப்பது போலவே குதிரைகளை வளர்த்தார்கள் சோழ நாட்டினர். மனிதர்களுக்காக அங்கு நெல் விளைந்தது; குதிரைகளுக்காகக் கொள் குவிந்தது.

ஏறக்குறைய ஒரு மாதத்துக்கு முன்னால் தஞ்சைமாநகரை விட்டுக் கிளம்பிய அந்தப் புரவிகள், சேரநாட்டிலும் தென் பாண்டிய நாட்டிலும் சுற்றி அலைந்து விட்டு, இப்போது மதுரைக்கு அருகே உள்ள சோலை மலைக்கு வந்திருக்கின்றன. வைகறையில் வைகையாற்றங்கரை மண்டபத்தை விட்டுப் புறப்பட்டவை. இன்னும் எங்கெல்லாம் சுற்றியலைய வேண்டுமோ? அவைகளுக்குக் காவேரிக் கரைப் பசும் புல்லின் நினைவு அடிக்கடி எழுவதுண்டு.

"எப்படியும் இன்றைக்கு நாம் கொடும்பாளூர் அரண்மனைக்குப் போய் விட வேண்டும்" என்றான் முதற் குதிரையின் மேல் வீற்றிருந்த இளைஞன்.

"என்ன சொன்னாய், இளங்கோ? கொடும்பாளூருக்கா? சொந்த ஊரின் நினைவு வந்து விட்டது போலிருக்கிறது."

"வந்தவேலையெல்லாம் ஒரு வழியாய் முடிந்து விட்டதே! சோலைமலைப் பகுதிகளில் கண்ணோட்டம் விட்டு விட்டு, குதிரைகளை வேகமாகத் தட்டிவிட வேண்டியதுதான்."

"அடடா! இந்தச் சோலை எவ்வளவு செழிப்பாயிருக்கிறது, பார்த்தாயா? பாண்டிய நாட்டுக்குள்ளேயும் இப்படி ஒரு அழகு பதுங்கியிருக்கிறதே!"

"பாண்டிய நாடு என்று சொல்லாதே, வீரமல்லா!" என்றான் முதற் குதிரையில் சென்ற இளங்கோவேள். "குமரியிலிருந்து வேங்கி வரையில் இப்போது நம் புலிக்கொடி பறப்பதை மறந்து போய் விட்டாயா? தென்சோழ மண்டலம் என்று சொல்."

வீரமல்லன் சிரித்தான்.

"என்ன சிரிக்கிறாய்?" என்று சினந்து கேட்டான் இளங்கோ.

"பாண்டிய நாடு என்ற பெயரைக் கேட்டவுடன் உனக்குக் கோபம் வருகிறதே. ஆனால் பாண்டிய நாடு இன்னும் நம்மோடு ஒட்டவில்லையே என்று சிரித்தேன்" என்றான் வீரமல்லன். "பாண்டியர்கள் நம்மோடு ஒட்டிக் கொள்வதற்குப் பதிலாக வெட்டிக் கொள்ள முயல்கிறார்கள். இதைத்தானே நாம் இவ்வளவு நாட்களாகப் பார்த்துக் கொண்டு வருகிறோம்? சேரனும் பாண்டியர்களோடு சேர்ந்து நம்மைப் பதுங்கித் தாக்க நினைக்கிறான்."

இளங்கோவேள் அலட்சியமாகச் சிரித்து விட்டுக் கூறினான்: "சோழர்களின் தயவால் நாடாளும் உரிமை பெற்ற இந்தப் பாண்டிய மீன்கள் புலியிடம் துள்ளப் பார்க்கின்றன. சேரனின் ஒடிந்து போன வில் தன்னை நிமிர்த்துக் கொண்டு புலியின் மீது அம்பெய்யப் பார்க்கிறது. வீரமல்லா! மீன்களால் புலியை விழுங்கவும் முடியாது. ஒடிந்த வில் இனி என்றுமே நிமிரப் போவதும்

இல்லை. இவற்றைக் கண்டு அஞ்சும் அள வுக்கு நீ கோழையாகி விட்டாயா ?''

''வீரமல்லன் ஒருபோதும் கோழை யாக மாட்டான்'' என்று தன்னைப் பற்றிக் கூறிக் கொண்டான் அவன். ''இளங்கோ! நமக்கு வீரமும் வேண்டும்; ராஜதந்திரமும் வேண்டும். எனக் கென்னவோ சோழர்களின் ராஜதந்திரத் தில் அவ்வளவு நம்பிக்கையில்லை. வீரத் தால் வெற்றிக்கு மேல் வெற்றி பெறு கிறார்கள். வென்ற நாடுகளைக் கட்டி ஆளத் தெரிவதில்லை.''

''சோழ சாம்ராஜ்யத்தின் ஆட்சி யையே குறை கூறும் அளவுக்கு உன் அறிவு வளர்ந்து விட்டதா, வீரமல்லா? இதுபோன்ற நினைவுகளை நீ முளையிலேயே கிள்ளி விடுவது நல்லது. பெருந்தன்மை யோடு கூடிய பரந்த மனப்பாங்குள்ள ராஜ தந்திரம் நம்முடையது. வென்ற நாடுகளையெல்லாம் அழித்து அடிமைப் படுத்த வேண்டுமென்ற எண்ணம் நம் மன்னர்களுக்கு இல்லை. தாங்களே உலகத்தைக் கட்டி ஆள வேண்டுமென்ற பேராசையும் அவர்களுக்குக் கிடையாது. பாண்டியர்களை அவர்களுடைய பகுதி களில் ஆள விட்டிருப்பதும், சேரனுக்கு அவன் நாட்டைக் கொடுத்திருப்பதும் ராஜதந்திரமல்லவென்று நீ நினைக்கிறாய்? நம்முடைய தலைமையை ஏற்றுக் கொண்டு அவர்கள் திறை செலுத்து கிறார்கள். அங்கங்கே உள்ள நமது **தெரிந்த படைகள்** அவர்களைக் கண்கா ணித்து வருகின்றன.''

''தெரிந்த படையினருக்கே தெரியா மல் நடைபெறும் ரகசிய ஏற்பாடுகளைப் பற்றி நீ என்ன சொல்லுகிறாய்?'' என்று கேட்டான் வீரமல்லன். ''தெரிந்த படைகள் இருக்கும்போது ஏன் நம்மை அனுப்புகிறார் சக்கரவர்த்தி?''

''தெரிந்த படைகள் தெரிந்து சொல் லியதால்தான் நம்மை அனுப்பியிருக் கிறார். இன்னும் நம்மைப்போல் பலர் பல இடங்களுக்குப் புறப்பட்டிருக்கிறார்கள். விரைவில் இந்தப் பாண்டியர்களின் கதி அதோகதியாகப் போகிறது, பார்!''

''பாண்டியர்கள் என்ற பெயரே உனக்கு வேம்பாயிருக்கிறது, இளங்கோ!'' - வீரமல்லன் சிரித்தான்.

''முற்காலப் பாண்டியர்கள் இந்த நாட்டின் பண்பைக் காத்தவர்கள். நெறி முறை தவறாமல் செங்கோலோச்சிய வர்கள். கண்ணகிக்குத் தீங்கிழைத்த தால் தன்னுயிரையே மாய்த்துக் கொண்ட நெடுஞ்செழியனும் பாண்டி யன்தான். இப்போது தங்கள் மணி முடியை ஈழத்தவர்களிடம் விட்டு விட்டு, தமிழ் மன்னருக்கெதிராகச் சதி செய் கிறார்களே இவர்களும் பாண்டியர்கள் தாம்! தமிழ் நாட்டின் மூவேந்தர்களுக் குள் ஒற்றுமை மட்டும் இருந்திருந்தால் நாம் இந்த உலகத்தையே வென்றிருப் போம். ஒற்றுமை கெட்ட குலம் நம் தமிழ்க் குலம்.''

''ஈழத்து மன்னர் மகிந்தனைச் சோழ நாட்டின்மீது சேரரும் பாண்டியர்களும் ஏவி விடுவார்கள் போலிருக்கிறதே!'' என்றான் வீர மல்லன்.

''பாவம்! ஈழ மன்னர் ஐந்தாம் மகிந்தன் ஒரு கோழை. தம்முடைய படைவீரர்களைப் பராமரிக்க முடியாமல் அவர்களுக்கு அஞ்சி ரோகணத்தில் ஓடி ஒளிந்தவர் அவர். சேரரும் பாண்டி யர்களும் சேர்ந்து அவரை வீரராக்கப் பார்க்கிறார்கள். தமிழர்களான சோழர் களிடம் என்றைக்குமே பாண்டியர்க ளுக்கு நம்பிக்கை இருந்ததில்லை. நெடு நாட்களாக ஈழத்து மன்னர்களோடு ஒட்டி உறவாடிக் கட்டிப் புரண்டு வரு கிறார்கள். தாங்கள் பெற்றெடுத்த பெண் மணிகளை அனுப்பி ஈழத்து மன்னர்க ளின் அந்தப்புரங்களை அலங்கரிக்கும் மகிஷிகளாக்குகிறார்கள். இவ்வளவு தூரம் அவர்கள் உறவாடிய பிறகும் ராஜசிம்ம பாண்டியன் காலத்தில் ஈழத்துக்கு அவன் எடுத்துச் சென்ற மணிமுடியை இன்னும் ஈழத்து மன்னர்கள் பாண்டியர்களிடம் திருப்பிக் கொடுக்கவில்லை. அந்த முடி யைப் பெறுவதற்காகச் சோழர்கள் நடத் திய போர்கள் எத்தனை தெரியுமா?''

பேசிக்கொண்டிருக்கும் போதே இளங்கோவேளின் முகம் கோபத்தால் சிவந்தது. வியர்வைத் துளிகள் முத்து முத்தாக அவன் முகத்தில் அரும்பின. கூரிய வாள் முனைகள் போல் கோடிட் டிருந்த மீசை மெல்லத் துடித்தது.

தன் முகத்தைத் துடைத்துக்கொண்டு, கோபத்தை அடக்கிக் கொண்டு, அவன் மேலே தொடர்ந்து பேசினான்:

''சுமார் எழுபது ஆண்டுகளுக்கு முன்பு முதற் பராந்தக சோழர் ஈழத்துக்குத் தூது அனுப்பி அந்த முடியைத் திருப்பித் தரும்படி நட்பு முறையில் கேட்டனுப்பி னார். ஈழத்து மன்னன் நான்காம் உதயன் அதை மறுத்து விடவே, சோழப் பெரும் படை ஈழத்துக்குள் புகுந்தது. மன்னன் உதயன் நாட்டை விட்டு ரோகணத்துக் காட்டுக்குள் ஓடி ஒளிந் தானே தவிர, முடியைத் தரவில்லை. அடுத் தாற்போல் இருபது ஆண்டுகள் கழித்து இரண்டாம் பராந்தக சுந்தர சோழர் அதற்காகவே படையெடுத்தார். அந்தப் போரில் வீரமரணம் எய்திய என் பெரிய தாத்தா கொடும்பாளூர்ச் சிறிய வேளாரைப் பற்றி நீ கேள்விப்பட்டிருக் கிறாயா? சுந்தரசோழரின் வலது கை அவர். தமது வலது கை ஈழத்தில் இப்படி

முறிந்துவிடவே, சுந்தர சோழரும் மனமுடைந்து திரும்பினார். மூன்றாம் முறையாக, நான் பிறப்பதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்னால் ராஜராஜர் காலத்தில் இதே ஐந்தாம் மகிந்தன் மீது ராஜேந்திரரே படை திரட்டிச் சென்றார். மகிந்தனும் தம் முன்னோர்களைப் போலவே, நாட்டை விட்டு விட்டுக் காட்டுக்குள் ஓடி ஒளிந்தாரே தவிர, பாண்டியரின் தமிழ் முடியைத் திருப்பிக் கொடுக்கவில்லை.''

''மூன்று முறை போர் தொடுத்தும் முடியைத் திரும்பப் பெற முடியவில்லையா?''

''ஆமாம், வீரமல்லா! பாண்டியன் ஒருவன் தன் அறியாமையால் செய்த பெரும் பழியைத் துடைக்க மூன்று போர்கள் போதவில்லை. நண்பா! கொடும்பாளூர்ச் சிறிய வேளாரின் ரத்தத்தையும், ஆயிரக் கணக்கான சோழ வீரர்களின் உயிரையும் குடித்த முடி அது. இன்னும் அது அங்கேதான் இருக்கிறது.''

''நீ சொல்வதெல்லாம் சரி, இளங்கோ! ஆனால் சோழர்கள் ஏன் பாண்டியர்களுடைய மணிமுடியைப் பற்றி இவ்வளவு அதிகமாகக் கவலைப்படுகிறார்கள்? பாண்டியர்களுக்கே இல்லாத அவமானம் இவர்களுக்கு என்ன வந்து விட்டது? எதற்கு இத்தனை போர்கள்?'' என்று கேட்டான் வீரமல்லன்.

''வீரமல்லா! நீ நம்முடைய அரசரின் தந்தை வீரவேங்கையான ராஜராஜரின் மரணத்தறுவாயில் அவருக்குப் பக்கத்தில் இருந்திருக்கிறாயா? இருந்திருந்தால் இப்படி ஒரு கேள்வியை இவ்வளவு அலட்சியமாகக் கேட்டிருக்க மாட்டாய். ஆ! அந்தக் காட்சியை நினைத்துப் பார்க்கும்போதெல்லாம் என் நெஞ்சு விம்மித் தொண்டையை அடைத்துக் கொள்ளுகிறது, நண்பா!''

இளங்கோவின் கண்கள் கொவ்வைக் கனிகளாகச் சிவந்தன. ''அது தமிழ் முடி வீரமல்லா! தமிழ் மன்னனின் முடி!'' என்று உறுமினான். ''தமிழ் நாட்டுக்குள்ளே வேண்டுமானால் நாம் சோழர், சேரர், பாண்டியர் என்று பிரித்துப் பேசிக் கொள்ளலாம். தமிழ் நாட்டுக்கு வெளியே நாமெல்லோரும் தமிழர்தாம். யாருக்கு அவமானம் நேர்ந்தாலும் அது தமிழ்க் குலத்துக்கு நேர்ந்த அவமானம். - இதைத்தான் ராஜராஜர் தம் மைந்தரிடம் வற்புறுத்திக் கூறிவிட்டு, அவரிடம் வாக்குறுதி பெற்றுக் கொண்டு, தம் ஆட்சிக் காலத்தில் அந்தப் பெரும் பழியைத் துடைக்க முடியவில்லையே என்ற ஏக்கத்தோடு கண்களை மூடினார். மூன்று ஆண்டுகளுக்கு முன்பு, ராஜேந்திர மாமன்னர் தம் தந்தைக்குக் கையடித்துக் கொடுத்த அதே நேரத்தில், நானும் என் கொள்ளுப் பாட்டனார் கொடும்பாளூர் சிறிய வேளாரின் ஆவியிடம் கையடித்துக் கொடுத்தேன். 'மன்னருடன் நானும் ஈழத்துக்கு வருவேன். முடியைக் கொண்டு வர முடியாவிட்டால், நானும் உங்களைப் போலவே, போர்க்களத்தில் வீர மரணம் எய்துவேன்' என்று கூறிச் சபதம் செய்தேன். பாண்டியர் முடியென்றா நீ அதைச் சொல்கிறாய்? இன்னொருமுறை அப்படிச் சொல்லாதே! அது தமிழ் முடி!'' என்றான் உறுதியான குரலில்.

இளங்கோவின் துடிப்பு மிக்க பேச்சு வீரமல்ல முத்தரையனுக்கு வியப்பையும் பிரமிப்பையும் தந்தது. இந்த இளம் வயதில் எவ்வளவு விஷயங்களை அவன் தெரிந்து வைத்திருக்கிறான்! சோழர்களுக்கென்றே வாழும் தியாக உணர்ச்சி எப்படியெல்லாம் அவனிடம் கொழுந்து விட்டெரிகிறது! அவனுடைய தந்தை மதுராந்தக வேளார் வளர்த்த வளர்ப்பின் பலனா இது? கொடும்பாளூர் வேளிர் குலத்தின் மீதே வீரமல்லனுக்கு ஓர் பெருமதிப்பு உண்டாயிற்று. அதோடு அவனுக்கே விளங்காத ஓர் அசூயையும் திடீரென்று இளங்கோவின் மீது ஏற்பட்டது.

இளங்கோவைக் கிளறி விட்டு வேடிக்கை பார்க்க வேண்டுமென்பதற்காகவே, ''நண்பா! இன்னொரு விஷயம்...'' என்று மெல்ல இழுத்தான் வீரமல்லன்.

''என்ன வீரமல்லா?'' என்று வினவினான் இளங்கோ.

"பாண்டியர்கள் ஈழத்து மன்னர்களுக்குப் பெண் கொடுத்திருப்பதைப் போலவே, சோழர்களும் வேங்கி மன்னனுக்குப் பெண் கொடுத்திருக்கிறார்கள். ராஜேந்திரரின் தங்கை சிறிய குந்தவை தான் வேங்கி மன்னன் விமலாதித்தனின் பட்டத்தரசி என்பதை மறந்து விடாதே! அரசர்கள் ஒருவருக்கொருவர் அரசியல் உறவுக்காகப் பெண் கொடுத்துக் கொள்ளுவதும் எடுத்துக் கொள்ளுவதும் எப்போதும் உள்ள பழக்கம்தான். வேங்கி மன்னர்களைச் சோழர்களுக்குப் பிடித்திருக்கிறது; ஈழத்து மன்னர்களைப் பாண்டியர்களுக்குப் பிடித்திருக்கிறது. அது அவரவர்கள் சொந்த விஷயம்."

"பாண்டியர்களுடைய உறவுமுறையில் உண்மையிருந்தால் ஏன் பாண்டியர்களாலேயே தங்கள் முடியைத் திரும்பப் பெற முடியவில்லை? சோழர்களை எதிரிகளாக நினைக்கும் ஈழத்தவர்கள், தங்கள் உறவினர்களான பாண்டியர்களிடமாவது அதைக் கொடுத்திருக்கலாமே?" என்று கேட்டான் இளங்கோ.

"பாண்டியர்களிடமிருந்து சோழர்கள் மணி முடியைக் கைப்பற்றிக் கொண்டால் என்ன செய்வதென்று ஈழத்தவர்கள் நினைத்திருக்கலாம்."

"நன்றாகப் பேசுகிறாய், வீரமல்லா! அதிலும் பாண்டியர்களுக்காக நீ பரிந்து பேசுவதைப் பார்த்தால் மிகவும் நன்றாக இருக்கிறது. விளையாட்டாக என்னிடம் பேசியதைப் போல் நம் வீரர்கள் வேறு யாரிடமும் பேசி விடாதே. நான் உன் வாதத் திறமையைக் கண்டு நகைத்து விட்டுச் சும்மா இருப்பேன். மற்றவர்கள் தவறாக நினைத்துக் கொள்வார்கள்."

வீரமல்லன் இதற்கு எந்தவிதமான பதிலும் அளிக்கவில்லை.

பிறகு இருவரும் சிறுபொழுது மௌனமாகவே குதிரைகளை அவற்றின் போக்கில் விட்டுவிட்டு இயற்கையழகை ரசித்த வாறு சென்றனர். இரண்டு குதிரைகள் ஒன்றி நடக்கும் அளவுக்கு விசாலமாகச் சென்றுகொண்டிருந்த பாதை, ஒரு திருப்பத்துக்கு வந்தவுடன் குறுகலாக மாறியது. குதிரைகள் முன்னும் பின்னுமாகச் சென்றன. அடுத்தாற்போல் பாதை இன்னும் குறுகியது. நெருக்கமான செடி கொடிகள் பாதையை அடைத்துக் கொள்ளும் அளவுக்கு மண்டிக் கிடந்தன. இருவரும் கீழே இறங்கிக் குதிரைகளைப் புதர்களுக்குள்ளே அழைத்துச் சென்று ஒரு சரக்கொன்றை மரத்தில் கட்டி விட்டு நடக்கத் தொடங்கினார்கள்.

உயர்ந்து சென்ற ஒற்றையடிப் பாதையில் இளங்கோவேள் முன்னே சென்றான். போகும்போதே அவனுடைய கூர்மையான விழிகள் இரு புறங்களிலும் இருந்த புதர்களை ஊடுருவிக் கொண்டு சென்றன. குதிரை மீது அவன் பேசிக்கொண்டு வந்தபோதுகூட அவன் கண்கள் இந்த வேலையில்தான் முனைந்திருந்தன. அதை அப்போதும் வீரமல்லன் கவனிக்கவில்லை; இப்போதும் கவனிக்கவில்லை.

## இரண்டாம் அத்தியாயம்

# இரு விழிகள்

மதுரைமா நகருக்கு வடமேற்கே பன்னிரண்டு கல் தொலைவில் உள்ளது அழகர் மலை. அந்த மலைக்குப் பற்பல பெயரிட்டு அழைத்திருக்கிறார்கள் தமிழர்கள். சோலைமலை, தண்டலைமலை, இடபகிரி, திருமால்குன்றம், திருமாலிருஞ்சோலை — இப்படி அதற்கு எத்தனையோ பெயர்கள்.

புத்த பிக்ஷுக்களுக்கு அது புகலிடம் அளித்திருக்கிறது. சமணத் துறவிகள் அங்கே வாழ்ந்திருக்கிறார்கள். சைவர்களும் வைணவர்களும் அங்கே வந்து தத்தமக்குப் பிடித்தபெயர்களை அதற்குச் சூட்டி மகிழ்ந்திருக்கிறார்கள். பல்வேறு கால மாறுதல்களையும், சமய மாறுதல்களையும், பெயர் மாறுதல்களையும் கண்ட மலை அது.

அந்த மலைச்சாரலின் அழகு கொழிக்கும் சோலையில்தான் இப்போது தென்னவன் இளங்கோவேளும் வீரமல்ல முத்தரையனும் மெல்ல நடந்து சென்றனர். வேகமாக விரைந்து செல்ல வேண்டிய வேலையும் அவர்களுக்கு இருந்தது. உடலிலும் தெம்பிருந்தது. என்றாலும் இயற்கைக் கன்னி அந்த இளைஞர்களை முற்றிலும் மயக்கி விட்டாள்.

மனிதர்களின் சந்தடியே இல்லாத பிரதேசம் போல் தென்பட்டது அது. மலைப் பாம்புகளைப் போல் வளைந்து சுருண்டிருந்த கிளுவை மரங்களின் வனப்பைக் கண்டு வியந்தான் இளங்கோ. பல்வகைப் பறவைகள் பாட்டிசைத்துப் பறந்தன; வண்டினங்கள் பறவைகளின் பாட்டுக்குச் சுருதி கூட்டின.

கூட்டம் கூட்டமாக வண்ணத்திப் பூச்சிகள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குக் காற்றில் மிதந்து சென்ற காட்சி, பலநிற மலரிதழ்கள் ஒன்று கூடிச் சிறகடிப்பதைப் போல் தோன்றியது. மலை உச்சியிலிருந்து இழிந்து வரும் அருவிக்



சென்னை சுங்க இலாகா பொழுது போக்கு சங்கத்தினர் தங்கள் ஆண்டு விழாவை மே 30-ந் தேதி சிறப்பாகக் கொண்டாடினர். திரு ச. எஸ். கிருஷ்ணமூர்த்தி விழாவுக்குத் தலைமைதாங்கிப் பரிசுகளை வழங்கினார். சென்னை சுங்க இலாகா கலெக்டர் தலைவருக்கு மலர்மாலை சூட்டுகிறார்.

கன்னியொருத்தி, எதிர்ப்படும் இளைஞர்களைக் காண வெட்கியவள் போல், நாணிக் கோணிக்கொண்டு ஒருபுறமாகக் குதித்தோடி ஒதுங்கினாள். அவளுடைய நடையின் வேகத்தில் ஓர் சாகசப் பரபரப்பு தெரிந்ததே தவிர, உண்மையான வேகமில்லை அது. விரைந்து செல்வதைப் போல் ஒரு பாவனை. அவ்வளவு தான்! விரைந்தோடினால் அவர்கள் கண்களிலிருந்து மறைந்து விடக் கூடுமே என்ற அச்சமா அவளுக்கு?

கலகலவென்று சில இடங்களில் அவள் சிரித்தாள். சில இடங்களில் அவள் மலர்களிடம் ரகசியம் பேசினாள். இன்னும் சில இடங்களில் சதங்கையொலி குலுங்க அவள் குதித்தாள். இளைஞர்கள் இருவரும் தங்கள் வழியில் ஓரிடத்தில் அவள் குறுக்கிட்டது கண்டு, தங்கள் மனங் கொண்ட மட்டும் அவளை இரு கரங்களாலும் அள்ளி அள்ளிப் பருகி விட்டு மேலே சென்றனர். வயிறு இடங் கொடுத்திருந்தால் ஒரு சொட்டுத் தண்ணீரைக்கூட அவர்கள் அதற்கு மேல் உருண்டோட விட்டிருக்க மாட்டார்கள்!

நீருண்ட மயக்கத்தில் மதுவருந்திய வண்டைப் போல், "இளங்கோ!" என்று தன் நண்பனை அழைத்தான் வீரமல்லன்.

அதே மயக்கத்துடன் இளங்கோ அவனைத் திரும்பிப் பார்த்தான்.

"இந்தச் சோலைமலை அருவித் தண்ணீரைக் குடித்து விட்டு, இப்படிச் சாலை நிழலில் நடந்து செல்லும்போது, உன் மனத்தில் என்ன ஆசை எழுகிறது, இளங்கோ?"

"சொல்லட்டுமா?"

"உடனே சொல்!"

"உலகத்தில் எங்கெங்கே இப்படி அழகான இடங்கள் இருக்கின்றனவோ, அங்கெல்லாம் சென்று புலிக்கொடி நாட்ட வேண்டுமென்று தோன்றுகிறது. இதற்காகவே கடல் கடந்து, மலை கடந்து, வீரப் படைகளைத் திரட்டிச் செல்லவேண்டுமென்று தோன்றுகிறது. மார்பகத்தின் மயிர்க்கால்களெங்கும் எதிரிகளின் வேல்கள் பாய்ந்தாலும், இறுதியில் வெற்றித் திருமகளைச் சோழ நாட்டுக்கே கொண்டு வந்து சேர்க்க வேண்டுமென்று தோன்றுகிறது!"

"முட்டாள்!" - விழுந்து விழுந்து சிரித்தான் வீரமல்லன். "இளங்கோ! உனக்காக நான் அநுதாபப்படுகிறேன். உன்னிடம் வயதுக்குத் தக்க உணர்ச்சியே கிடையாது."

"வீர உணர்ச்சியைக் கிழவர்களுடைய உணர்ச்சி யென்கிறாயா?"

"போர்க்களம் புகும்போது வீரமும், பூஞ்சோலையைக் காணும்போது காதலும் தோன்ற வேண்டும் நண்பா! இதோ பார், இதைப் போன்ற இடங்களுக்கு நம்மைப் போன்றவர்கள் தனியாகவே வரக் கூடாது! காதலியின் கரம் பற்றி, துவளும் அவள் இடை தாங்கி, மெல்ல அவளை அழைத்து வர வேண்டிய அழகுச் சோலையல்லவா இது?"

"காதல்!" பரிகாசத்துடன் சிரித்தான் இளங்கோ. "இங்கெல்லாம் என் காதலி வரமாட்டாள். அவள் போர்க்களங்களில் எனக்காகக் காத்திருக்கிறாள்."

"அவளை நம்புவதில் பயனில்லை, நண்பா! உன்னைவிட உன் எதிரி வீரம் உள்ளவனாக இருந்தால் அவன் தோளில் சாய்ந்துவிடும் மாயக்காரி அவள்.- இளங்கோ! உன்னைப் பற்றி எனக்கொன்றும் தெரியாதென்று நினைத்துக் கொள்ளாதே. நான் உன்னுடைய உண்மைக் காதலியை நினைவூட்டுகிறேன். நீ தஞ்சை மாநகர் திரும்பப் போகும் நன்னாளை எதிர்பார்த்து வழி மீது விழி வைத்திருக்கிறாள் பார், அவளை..."

கூர்மையாக வீரமல்லனின் முகத்தில் தன் விழிகளைச் சொருகினான் இளங்கோ. "என்ன சொல்கிறாய்?"- அவன் குரலில் கடுமை தொனித்தது.

"அரண்மனையின் அந்தப்புரத்தில் உலவும் அருள்மொழி உன் முறைப் பெண்தானே? சோழப் பேரரசர் தம் புதல்வியை உனக்குக் கொடுக்காமல் வேறு யாருக்குக் கொடுக்கப் போகிறார்? உன் சொந்த அத்தை வீரமாதேவியை

மணந்த மாமன் ராஜேந்திரர். அவருடைய தாயார் வானவன்மாதேவியும் உங்கள் குலத்தில் பிறந்தவர். பரம்பரை பரம்பரையாக நடந்து கொண்டு வரும் உறவைத்தானே நானும் சொல்கிறேன்? இதைக் கேட்டு மகிழ்ச்சியடைவதற்குப் பதிலாக ஏன் ஆத்திரப்படுகிறாய்?''

''வீரமல்லா!'' என்று கத்தி விட்டு, ''அரண்மனை விஷயங்களைப் பற்றிப் பேசும்போது சற்று அடக்கமாகவே பேசு; அதிலும் பெண்களைப் பற்றி நீ வாயைத் திறவாமல் இருப்பதே நல்லது'' என்று கூறினான் இளங்கோ.

''நாளைக்கு எது நடக்கப் போகிறதோ அதை இன்றைக்கே சொன்னேன். நாம் நட்பு முறையில் பழகுகிறோமே தவிர, உன்னைக் கொடும்பாளூர் இளவரசன் என்று நானோ, என்னை நாடற்று வாடும் முத்தரையர் குலத்தவன் என்று நீயோ நினைக்கவில்லை. அப்படி நீ நினைக்கிறாயா, சொல்? உன்னுடன் பழகுவதையே நிறுத்திக் கொள்கிறேன்.''

இதைக்கேட்ட இளங்கோவின் கண்கள் கலங்கின. ஐந்தாறு ஆண்டுகளாகவே இருவரும் ஒன்றாகப் பழகியவர்கள். அதிலும் 'நாடற்று வாடும் முத்தரையர் குலத்தவன்' என்ற சொல்லை அவன் வாயிலிருந்து கேட்ட பிறகு இளங்கோவின் மனம் பாகாய் உருகி விட்டது.

சோழ சாம்ராஜ்யத்தின் தலைநகராக அன்று விளங்கிய தஞ்சை மாநகர் ஒரு காலத்தில் முத்தரையர்களுடைய ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. முத்தரையர்களும் கொடும்பாளூர் வேளிரும் பல்லவர்களுடன் உறவு பூண்டு சிற்றரசர்களாகத் திகழ்ந்த காலம் அது. சோழர்களுக்கும் கொடும்பாளூர் வேளிருக்கும் எப்படித் திருமண முறையால் உறவு ஏற்பட்டிருந்ததோ, அதே போல் வேளிரும் முத்தரையர்களும் அந்தக்காலத்தில் உறவு பூண்டொழுகினார்கள்.

இவ்வளவையும் நினைத்துப் பார்த்த இளங்கோ, தங்களுடைய வளர்ச்சியையும், தங்களுடைய முன்னாள் உறவினர்களான முத்தரையர்களின் வீழ்ச்சியையும் ஒரு கணம் ஒப்பிட்டுப் பார்த்தான்.

''வீரமல்லா! நாடற்று வாடுபவன் என்று மட்டும் இனிமேல் நீ சொல்லக் கூடாது. மேலைச் சளுக்கப் போரில் சத்தியாசிரய மன்னன் ஏறியிருந்த யானையைக் குத்தி வீழ்த்தும் முயற்சியில் உன் தமையன் ராஜமல்ல முத்தரையர் உயிர் இழந்ததை நம்முடைய மன்னர் மறந்து விட்டாரென்று நினைக்கிறாயா? அதனால் தானே உன்னிடம் தனிப் பரிவு காட்டி உன்னைச் சேனையில் சேர்த்துக் கொண்டிருக்கிறார். காலம் வரும்; பொறுத்துக்

# சிரிக்காதே!

### அறுவடை!

''பிடில் வாங்கித் தரச்சொல்லி உன் மனைவி உன் கழுத்தை அறுத்துக் கொண்டிருப்பதாகச் சொன்னாயே, இப்ப என்ன பண்ணுகிறாள்?''

''இப்ப பிடிலை அறுத்துக்கொண்டிருக்கிறாள்!''

### என்ன, என்ன, என்ன?

''வடை இருக்கா!''

''இல்லை.''

''இட்டிலி இருக்கா?''

''ஆகிவிட்டது!''

''போண்டா இருக்கா?''

''தீர்ந்து விட்டது.''

''காப்பி இருக்கா?''

''எல்லாம் விற்றுப்போய் விட்டது. சார்!''

''அப்போ ஹோட்டல் ஒண்ணு தான் இருக்குன்னு சொல்லு!''

''இல்லை, சார்! அதையும் முதலாளி இன்னொருவருக்கு விற்று விட்டார்!''

### அம்மா பெரிதென்று...

''என்னை என்னவென்று நினைத்துக் கொண்டாய். மரியாதையாக நடந்து கொள்......!''

''நான் என்ன அப்பா செய்தேன்?''

''அட, சும்மா இருடா... உங்கம்மாவிடம் போய்ச் சண்டை போட வேண்டியிருக்கு! அதுக்கு ஒத்திகை பார்த்துக் கொண்டிருக்கிறேன்!''

### கடிகாரம் ஒழிக!

மானேஜர் அறையை நோக்கிக் கந்தசாமி ஓடி வந்தார். ''மன்னிக்க வேண்டும் ஸார், நேரமாகி விட்டது! கொஞ்சம் அதிக நேரம் தூங்கிவிட்டேன்'' என்றார்.

அப்பொழுது காரியாலயச் சிப்பந்திகள் வீட்டுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார்கள். கடிகாரம் மாலை ஐந்தரை மணியைக் காட்டிக் கொண்டிருந்தது!

### சோம்பேறி வளர்ப்பு!

''மிஷின் வந்து நம்மைச் சோம்பேறிகளாக ஆக்குகிறது. 'பட்டனை' அழுத்தினாலே எல்லா வேலையையும் மெஷின் செய்து விடுகிறது!''

''அந்த வேலையும் நமக்கு வைக்காமல் தானே தன்னை அமுக்கிக் கொள்ளும் பட்டனை எவனோ கண்டுபிடித்துக் கொண்டிருக்கிறானாம்!''

கொள், வீரமல்லா! நீயும் ஒரு நாட்டின் தலைவனாகத்தான் விளங்தப் போகிறாய்.''

வீரமல்ல முத்தரையனுக்கு அவன் நண்பனின் சொற்கள் ஆறுதலளித்தன. ஆனால் அத்துடன் அவன் அமைதி பெற வில்லை. இராஜேந்திரரின் மகள் அருள் மொழி நங்கை பற்றி வேண்டுமென்றே இளங்கோ தன்னிடம் மறைத்துப் பேசுவ தாக நினைத்தான். எப்படியும் தன் நண்ப னின் வாயால் அதைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவல் வீரமல்ல முத்தரையனை உந்தித் தள்ளியது.

"இளங்கோ! இந்தச் சோலையையும் காதலையும் பற்றிப் பேசத் தொடங்கிய நாம் வேறெங்கோ போய் விட்டோம். உண்மையை என்னிடம் மறைக்காமல் சொல்லிவிடு. இளவரசி அருள்மொழி யின் கரம் உனக்குத்தானே?''

"இதை மட்டும் நீ கேட்காதே! உண்மையில் நான் பெண்களைப் பற்றியே இன்னும் நினைக்கத் தொடங்கவில்லை. அதிலும் தஞ்சை அரண்மனைக்கும் எங்க ளுக்கும் எவ்வளவுதான் உறவிருந்தாலும் நாங்கள் அவர்களோடு பழகும் முறை யில் ஒரு எல்லை வகுத்துக் கொண்டிருக் கிறோம். அவர்களின் கீழ் உள்ள எத் தனையோ சிற்றரசர்களில் கொடும்பாளூ ரும் ஒன்று. இதை நாங்கள் மறந்துவிட வில்லை. இளவரசி அருள்மொழியோடு எப்போதாவது நான் பேச நேர்ந்தால் என்னையறியாத மதிப்பும் அச்சமுமே என் முன் வந்து நிற்கின்றன. நீ என் நிலையைப் புரிந்து கொண்டாயா?''

"அரண்மனைப் பெருந்தேவிகள், உன் அத்தைகள் ஏதும் பேசுவதில்லையா? ராஜேந்திரரின் எண்ணம் என்னவென்று யாருக்கும் தெரியாதா?''

"அவருடைய எண்ணத்தை யாராலும் அவ்வளவு எளிதாகக் கண்டு கொள்ள முடியாது. அதைக் கண்டு கொள்ளாத வரை அரண்மனைப் பெண்களும் வாய் தவறிக்கூட எதையும் பேசிவிட மாட் டார்கள். உலகத்தை ஆண்டவர்களில் பலர் அந்தப்புரங்களில் அடிமைகளாக உழன்றிருக்கிறார்கள். ராஜேந்திர மாமன்னர் இருக்கிறாரே, அவரை அறி யாமல் அந்தப்புரத்தில் ஒரு துரும்புகூட அசைவதில்லை.''

இதைக் கேள்வியுற்றவுடன் வீரமல்ல னுக்கே என்னவோ போல் இருந்தது. என்றாலும் தன்னுடைய நண்பனைவிவரம் தெரியாத குழந்தை என்ற அளவுக்கு மதிக்கத் தொடங்கினான். 'காதலுக்கு வேலி போட யாரால் முடியும்? இளங் கோவை அருள்மொழி விரும்பினால் அவ னைத் தடுக்க ராஜேந்திரர் ஏன் முற்படு கிறார்? அவருக்கு இது போன்ற குடும்ப விஷயங்களைக் கவனிக்கப் பொழுது ஏது? இளங்கோவோ உருவெளித் தோற்றத் தில் அழகன், உள்ளத்தில் வீரன், வயது வந்த கட்டிளம் காளை, நாடாளப் பிறந்த இளவரசன்,-ஏன் இன்னும் தனக்குரிய பெண்ணின் மனத்தைத் தெரிந்துகொள் ளாதவனாக இருக்கிறான்?'

நீண்ட பெருமூச்சு விட்டான் வீர மல்லன். நண்பனுடைய நிலையில் தான் இருந்தால் எப்படி சொல்லாம் நடந்து கொண்டிருக்க முடியும் என்ற விபரீதக் கற்பனை அவனிடம் எழுந்தது. அதை அடக்க முடியாமல் வாய் விட்டுக் கூறத் தொடங்கினான்.

"இளங்கோ! உன்னைப் போல் நான் இருந்தால், உனக்குள்ள உறவும், உரிமை யும், வாய்ப்பும் எனக்குக் கிடைத்திருந் தால், நான் அந்த அருள்மொழியை....''

"நிறுத்து, வீரமல்லா!'' என்று குமுறி னான் இளங்கோவேள். "என்னுடைய நிலையில் நீ இருந்தால், இப்படி ஒரு மனிதன் சோழ நாட்டு இளவரசியைப் பற்றித் தாழ்வாகப் பேசியதற்காக, உன் உடைவாளால் அவன் நாவைத் துண் டித்திருப்பாய்!'' என்றான்.

வீரமல்லனின் நாக்கு இதைக் கேட்ட வுடன் அவன் தொண்டைக்குள் ஒட்டிக் கொண்டது.

மலையின் உச்சியை அடைவதற்கு முன்னால், அதன் கீழ்ச்சரிவை ஒட்டி, குகையைப் போல் தெரிந்த ஒரு பாறை யின் பிளவுக்கு எதிரில் அவர்கள் வந் தார்கள். அத்துடன் பாதை முடிந்துவிட் டதுபோல் தோன்றியது. சந்தடிசெய்யா மல் இளங்கோவும் வீரமல்லனும் அதற் குள் எட்டிப் பார்த்தார்கள். இருண்டு கிடந்த அந்தக் குகைக்குள் முதலில் எதுவுமே புலப்படவில்லை. பிறகு கண்கள் இருட்டுக்குப் பழகியவுடன், உட்கார்ந் திருக்கும் நிலையில் ஒரு சிலையைக் கண் டார்கள் அவர்கள். சிலை அசைவதைப் போல் தோன்றியதால் இருவருடைய கண்களும் கூர்மையாகின. அருகே ஒரு சிறு பாய், மயிற்பீலி, கமண்டலம் இவ் வளவும் இருந்தன.

"அருகா போற்றி! அருகா போற்றி!'' என்று முணுமுணுத்துக் கொண்டிருந் தது, சிலை வடிவிலிருந்த அந்த மனித உருவம். வீரமல்லன் ஒன்றும் விளங்காத வன் போல் தன் நண்பனின் முகத்தைப் பயத்துடன் பார்த்தான்.

"அடிகளே போற்றி!'' என்று உரக்கக் கூவினான் இளங்கோ. தன் பயத்தைப் போக்கிக் கொள்வதற்காக அவன் அப் படிக் கூவுவது போல் தோன்றியது. உடனே நெருப்புத் துண்டங்களைப் போன்ற தன் விழிகள் இரண்டையும் திறந்து அந்த இருவரையும் மாறி மாறிப் பார்த்தது அந்த உருவம். (தொடரும்)






# சாம்ப்பியன்

(ரெஜிஸ்டர்ட்)

மை கசிந்தும், தடைப்பட்டும் எழுதி
காகிதத்தை ஊழலாக்கும் பேனா
வினால் எழுதுவதே ஒரு கடினமான
சோதனைதான். ஆனால்,
சாம்ப்பியன் பேனா அதற்கோர்
விதிவிலக்கு. நுட்பம் வாய்ந்த
அதிநூதன உத்திகளுக்கேற்பத்
தயாரிக்கப்பட்டுள்ள அப்
பேனாவினால் லாகவமாக எழுதும்
இன்பமே இன்பம்! எவ்வெவருக்கும்
கிட்டக்கூடிய விலைகளில்,
நானாவிதமான நிபுகளிலும்
வர்ணங்களிலும் கிடைக்கிறது.





குஜராத்
இண்டஸ்ட்ரீஸ்
ப்ரைவேட்
லிமிடெட்

லால்ஜீ மான்ஸிங்க் பில்டிங்.,
லோகார் சால், பம்பாய்-2.

C1.2

## 109. மூலம்




"மூலம் என்பது ஒரு வியாதி. இதில் பல தரமுண்டு. உள்மூலம், வெளிமூலம்... ரத்த மூலம்..."

"சித்திர மூலம், ஆதி மூலம், நதி மூலம், ரிஷி மூலம் என்பது போல வாக்கும் !"

"ஐயா! தயவுசெய்து குதர்க்கம் பேசாதீர்கள். அகடவிகடமும் வேண்டாம்."

"தயவுசெய்யாமலே நிறுத்திக் கொள்கிறேன். ஆனால் ஒன்று...மட்டும் சொல்லத் தயவுசெய்து அனுமதிக்க வேணுமாய்த் தங்கள் மேலான கனத்தைத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்!"

"பார்த்தீர்களா ! மறுபடியும் அகடவிகடந்தானே ! என்ன அந்த ஒரு விஷயம் ?"

"சொல்லப் போவது வைத்திய விஷயம். அதில் சிறிதளவு நகைச்சுவை இல்லாவிட்டால், படிக்கும் பாமரருக்குத் தலைவலியாக இருக்கும்."

"இது ஒரு புதிய வகைத் தலைவலி. இது உண்டாவதற்கு நான் ஒரு காரணமாக இருக்க விரும்பவில்லை."

"ஆமாம் ! மேலும் இந்த நவீனத் தலைவலிக்குச் சிகிச்சை எழுத வேண்டிய தலைவலி உமக்கே வந்து தீரும் !"

"ஐயோ ! அப்படியொரு மற்றொரு வகைத் தலைவலியை ஸ்வயம்-விருதானர்த்தமாக நானே ஏன் எனக்குத் தேடிக் கொள்ள வேணும் ?"

"மேலும் ஒரு விஷயம்......"

இந்த மூல வியாதியோ நோயாளிக்குச் சகிக்க முடியாத நரக வேதனையைக் கொடுப்பது. நிற்கவும் முடியாத, நடக்கவும் முடியாத, உட்காரவும் முடியாத, படுக்கவும் முடியாத நிலையில் சிலர் தவழும் குழந்தையைப் போல், நாற்கால் பிராணியையொத்ததொரு நூதன யோகாசனத்தில் அமர்ந்திருப்பதைக் கண்டிருக்கிறேன். அது மட்டுமா ?

இன்னும் என்ன ?

இந்த மூல வியாதிக்காரரில் ஒருவர் எனக்குத் தெரிந்தவர் இருக்கிறார். வியாதியுடன் பட்டுப்பட்டு இவருக்கு ஏற்பட்டுள்ள குணக்கேடு சொல்லி முடியாதது. எந்த நேரத்திலும் ஒரு சிடுசிடுப்பு, யாரைக் கண்டாலும் எரிந்து விழும் ஒரு சுபாவம் பிறரிடத்தில் எப்போதும் குற்றத்தையே சொல்லும், ஒரு பழக்கம். நின்றால் 'ஏன் அங்கே நிற்கிறாய்?' என்று கூச்சல் போடுவார். உட்கார்ந்தா 'எப்பப் பார்த்தாலும் கல்லுப்பிள்ளையார் மாதிரி உட்கார்ந்து கொண்டே இருப்பதா ?' என்றுஎரிந்து விழுவார். 'கிட்ட வந்தால் கிள்ளுவேன், தூரப்போனால் துப்புவேன். ஆனால் என்னுடன் கூட விளையாடிக் கொண்டும் இருக்கவும் வேணுமென்று பிடிவாதம் பிடிக்கும் குழந்தைகளின் போக்கில் வீட்டில் இருப்பவருக்கெல்லாம் உபத்திரவம் கொடுப்பார். இதே வகையில்தான் ஊரில் இருக்கும் மற்றையோரிடமும் பழகுவது.

ஒருநாள் இவருக்கு அறுபது ஆண்டு நிறைந்து அறுபத்தோராம் ஆண்டு பிறப்பதையொட்டி வீட்டில் விசேஷம். அது சித்திரை மாதத்தில், திருமூலம் நக்ஷத்திரத்தன்று வந்தது. அன்றையதினமும் நண்பர் வழக்கப்படியே ஆயிரம் துர்வாஸ முனிவருடன் ஆயிரம் விசுவாமித்திரர்களும் சேர்ந்த கணக்கில் வந்தவரோடு பரிமாறிக் கொண்டிருந்தார். வந்திருந்த விருந்தினருள் நகைச்சுவைமிக்க ஒருவர் நண்பரைப் பார்த்து "ஐயா ! சித்திர மூலமே !" என்று அழைத்தார். எல்லோரும் கொல்லென்று சிரித்தனர். சித்திர மூலமென்றால் தெரியுமோ ? தெரியுமா என்று கேட்கிறீர்கள்? அக்னி, நெருப்பு என்று அதற்கு வேறு பெயரிட்டு அழைக்கிறார்களே !

ஆமாம், அதே குணந்தான் நண்பருக்கு. இவ்வித குணக்கேட்டுக்கு மூல காரணம் இவருடைய மூல வியாதிதான் என்பது பலருக்குத் தெரியாது. இப்படியாக வியாதிக்காரனுக்கும் தொல்லை. அவன் மூலம் மற்றும் பலருக்குத் தொல்லை தரும் இயல்பு பெற்ற இந்த மூல வியாதியைப் பற்றி நீங்கள் ஆரம்பித்தபோது எனது நண்பர் [சித்திரை மாதத்தில் மூல நக்ஷத்திரத்தன்று ஜனித்தவரான] சித்திர மூலத்தின் நினைவு வந்தது.

வாஸ்தவமான விஷயம். மூல வியாதியுள்ளவருக்கு நீங்கள் தெரிவித்தது போன்ற குணக்கேடு ஏற்படுவது சர்வ சகஜம். சிலரில் சில சந்தர்ப்பங்களில் மூலத்தின் முளைகளுள்ள பாகத்தில் ஒரு வித அழற்சி ஏற்படுவதுண்டு. இது அநேகமாக வெளி மூலம் உள்ளவருக்குத் தான் ஏற்படும். அழற்சியுற்ற வெளி மூலத்தின் காரணமாகத்தான் நோயாளி நீங்கள் தெரிவித்ததுபோல் நாற்கால்

பிராணி போலிருக்கும் ஒரு நூதன யோகாசனத்தை ஏற்றிருப்பான்.

"மூலம் என்பது என்ன வியாதி? அது ஏற்படுவதற்குக் காரணங்கள் என்ன? என்று ஒரு கோவையாக விஷயத்தைச் சொல்லாமல்......"

"அப்படித்தான் சொல்ல ஆரம்பித்தேன். அதற்குள் நீர் தான் இடை மறித்து ஒரு புராணத்தைப் புகுத்தி விட்டீர்!"

"சரி, சரி! போகட்டும். இனி மேல் தொடர்ந்து சொல்லும், ஐயா! நான் குறுக்கிடவே மாட்டேன்!"



"மூலம் என்பது ஒரு வியாதி. மஹா ரோகங்கள்—குணப்படுத்துவது சுலபமல்ல - என்ற எட்டு ரோகங்களில் அது ஒன்று."

"அதென்ன ஐயா, அந்த எட்டு ரோகங்கள்?"

"நானே சொல்ல மாட்டேனா? அதற்குள் குறுக்கிடுகிறீரே!"

"மன்னிக்கவும். இனிமேல் இடை மறிக்கவே மாட்டேன்!"

வாத வியாதி, அச்மரீ என்னும் கல்லடைப்பு, குஷ்டம், குல்மம், உதரம், பகந்தரமென்னும் பௌத்தரம், மூலம், கிரஹணி என்னும் இவைதான் அம் மகா ரோகங்கள்.

அன்னகோசத்தின் கடைசிப் பாகத்தை மலாசயம் என்பர். மலாசயத்தின் கடைசி 3 - 4 அங்குல தூரத்தைக் குதம் என்பர். இதில் சில காரணங்களின் விளைவாகச் சில அங்குரங்கள் அல்லது முளைகள் வளர ஆரம்பிக்கும். இம் முளைகள் குதத்தின் எதிர்ப்புறங்களில் வளர்வதும் உண்டு. முளைகள் மலத் துவாரத்துக்கு வெளியிலும் தெரியலாம். அப்படித் தெரியாமல் குதத்தின் உட்புறம் மட்டுமே வளர்வதாக இருக்கலாம். அல்லது இரண்டு வகையிலும் இருப்பதும் உண்டு. இம் முளைகள் வளர வளர மலம் வரும் மார்க்கம் அடைபடுகிறது. இதனால் மலம் போகும்போது வலியும் வேதனையும் ஏற்படும். மேலும் இந் நோய் உள்ளவருக்கு ஓரளவு மலபந்தமும் இருக்குமாதலால் கெட்டியாகக் கட்டிப் போன மலம், வெகு சிரமத்துடன் தான் வெளியாகும். அப்போது வழியை மறைத்து வளர்ந்துள்ள மூலாங்குரங்களின் மேல் உரசிக் கொண்டே போவதால் அவற்றைக் காயமுறச் செய்து அதிலின்றும் ரத்தமும் போகும் நிலையை ஏற்படுத்தும். இவ்விதம் ஏற்படும் காயம் - அல்லது விரணம் மேலும் அழற்சியுறுவது தவிர்க்க முடியாதது தானே? ஆகவே தான் மூலநோய் உள்ளவருக்கும் மலம் போனாலும் மலாசயத்தில் நோவு, எரிச்சல், கடுப்பு இவையுண்டாகும். மலம் போகாவிட்டாலும் இவை இருக்கும். இப்படியாக மலம் போவதற்கு முன்பாகவும் மலம் போகும் போதும் மலம் போன பிறகும் ஏற்படும் வேதனை ஒரு தினத்தில் கணிசமான நேரத்தை நோயாளிக்கு நரக வேதனையாக்கித் தீர்க்கும்.

விறகுக் கட்டையை எடுக்கிறோம். அஜாக்கிரதை காரணமாக, அல்லது 'போதாத வேளை' காரணமாக ஒரு மிகச் சிறிய 'சிலாம்பு' விரலில் பொத்துக் கொள்கிறது. அது எவ்வளவு வேதனையைத் தரும்! தைத்தவுடனே நாம் அவ்வளவாக லட்சியம் செய்ய நேரிடாது தான். ஆனால் மறுநாள்......?

விரலில் தைத்த சின்னஞ்சிறு சிலாம்பு இவ்வளவு வேதனையைத் தருமானால் - குதத்தில் (இது ஒரு முக்கியமான மர்ம ஸ்தானம்) ஏற்பட்டுள்ள முட்கள் போன்ற முளைகள் எவ்வளவு கஷ்டத்தைக் கொடுக்கும் என்று ஊகிப்பது கஷ்டமல்ல. அதிலும், வேறு சில அதிகப்படியான தாற்காலிகக் காரணங்களால் இம் முளைகள் அழற்சியுற நேரிடுமாயின்...? அந்த அனுபவம் தனது விரோதிக்கும் வரவேண்டாமென்று நோயாளி சொல்வான்.

மூலத்தின் முளைகள் வெளிப்புற முள்ளவைகளாயின், அம்முளைகளும் மேற் சொன்ன விதம் அழற்சியுறவும் நேரிடில்...? அப்பப்ப! சொல்லவே முடியாது. அந்நிலையில்தான் மனிதன் நாற்கால் பிராணிபோல் நின்ற வண்ணம் தவம் புரியும் நிலையை அடைகிறான்!

இது
ஜான்ஸன்ஸ்
# குழந்தைகள்
# மாதம்

# குழந்தைகளுக்கான
# ஜான்ஸனின் தயாரிப்புகளை வாங்கி
# உங்கள் குழந்தைக்கு
# இலவசப் பரிசை பெறுங்கள்

எப்பேற்பட்ட சீதோஷ்ண நிலையிலும் உங்கள் குழந்தையின் இளம் சருமத்திற்கு இதமும் பாதுகாப்பும் அளிக்கக்கூடியவை குழந்தைகளுக்கான ஜான்ஸனின் தயாரிப்புகள்: ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்; ஜான்ஸன்ஸ் பேபி சோப்; ஜான்ஸன்ஸ் பேபி க்ரீம் மற்றும் ஆயில்!

தற்போதைய கால நிலைப்படி அதிகமாக அவசியமான இந்த தயாரிப்புகளை இப்பொழுதே வாங்கி உங்கள் குழந்தைக்கு அருமையான இலவசப் பரிசைப் பெறுங்கள்!

**ரிசு பெறும் விதம் :**

- குழந்தைகளுக்கான ஜான்ஸனின் தயாரிப்புகளை வாங்கும் பொழுது கடைக்காரரிடம் 'பரிசு கூப்பனை' கேட்டு வாங்குங்கள்.
- ஜான்ஸன்ஸ் பேபி சோப், ஜான்ஸன்ஸ் பேபி க்ரீம், மற்றும் ஜான்ஸன்ஸ் பேபி ஆயில் இவைகளின் மொத்தம் ஆறு அட்டை உறைகளையோ அல்லது ஜான்ஸனின் தூ-இன்-ஒன் பேபி சோப் 'கிப்ட் பாக்'கின் இரண்டு அட்டை உறைகளையோ பரிசுக் கூப்பனுடன் சேர்த்து தபால் பெட்டி நெ. 1976, பம்பாய், என்ற விலாசத்திற்கு அனுப்பவும்.
- பதிலுக்கு தபால் செலவு இல்லாமல் இலவசமாக உங்களுக்குப் பரிசு வந்து சேரும்.

ஜான்ஸன்ஸ் குழந்தைகள் மாதம், ஜூலை 1 முதற்கொண்டு ஜூலை 31, 1959 வரை நீடித்திருக்கும். ஆகஸ்டு 22 தேதிக்குமுன் அல்லது ஆகஸ்டு 15 தேதி வரைக்கான தபால் சந்து முத்திரையுடன் வந்துசேரும் உறைகள் மட்டுமே எமது இலவசப் பரிசுக்கு தகுதியானவை. தேவைகளை சீக்கிரமே வாங்குங்கள்.

**ஜான்ஸன் அண்டு ஜான்ஸன்**

60 ஆண்டுகளுக்கு மேலாக குழந்தைகளுக்கான சிறந்த சாதனங்களை தயாரித்து வருபவர்கள்

ஜான்ஸன் அண்டு ஜான்ஸன் ஆப் இந்தியா பிரைவேட் லிமிடெட்





அவன் பட்டணத்துக்குப் புதிது.

பட்டிக்காடு வெறுத்ததில்லையோ, பட்டணம் அழைத்ததில்லையோ அவன் இங்கு வரவில்லை.

அவன் வெறும் பட்டிக்காட்டான் அல்ல; பட்டிக்காட்டு மைனர். அப்படி யென்றால்? ...பிடரியில் விழும் கிராப்பும், நீண்ட கிருதாவும், சற்றே பெரிய அளவுடைய மீசையும், மெல்லிய ஜிப்பாவும், பூவேலை செய்த பனியனும், இடையில் பட்டை பெல்ட்டும், அவனுடைய அந்தத் தோற்றத்தைப் பார்த்தால் பட்டணத்து 'ரௌடி'போல் தான் இருந்தது.

தோற்றம் எப்படி இருந்த போதிலும் பட்டணத்துப் பெரிய மனிதர்களுக்குக் கூட இல்லாத நல்ல வெள்ளை உள்ளம் மட்டும் அவனுக்கு இருந்தது.

வளர்ச்சிப் போக்கில் பலதும் வாழும் கற்றுக்கொண்டு, அடிபட்டு அழுக்கு ஏறி, நல்லதும் கெட்டதுமான அனுபவங்களை மடி நிறையக் கட்டிக் கொண்டு விஸ்தாரமாகக் கால்களை அகற்றி வைத்து, வான்முட்ட உயர்ந்து நிற்கும் பட்டணத்து நாகரிக மனிதனின் முன்னே, அப்பொழுதுதான் இருளிலிருந்து வெளிப்போந்து உலகின் வெளிச்சத்தைப் பார்க்கும் பச்சைக் குழந்தைபோல் கண்கள் கூசி நிற்கும் அந்தப் பட்டிக்காட்டு மனிதன்.

பட்டிக்காட்டில் வேலை இல்லாததினாலோ, பட்டணம் போய்ப் பிழைத்துக் கொள்ளலாம் என்ற பேராசையினாலோ, நாகரிகங்களினாலோ அவன் இங்கு வரவில்லை.

''ஏன் வந்தான்?....''

'ஏன் வந்தோம். எங்கு போகிறோம், எங்கு போவோம்?' என்ற விஷயங்கள் யாவும் அவன் மனதில் தெளிவாகி இருந்தன.

அவன் என்ன திரிகாலம் உணர்ந்த ஞானியா? அதொன்றுமில்லை. போட்ட திட்டப்படி வந்தான். அதன்படியே இருக்கிறான்; திட்டப்படியே திரும்பிப் போவானும்.

அதை நினைக்கும் போது அவனுக்குச் சிரிப்பு வந்தது. மனசுக்குள் மூண்டெழுந்த சிரிப்பு கொஞ்சம் எல்லைமீறி முகத்திலும் மலர்ந்தது.

''ஏ! தூக்கிப்போடும். மேலே ஏறுப்பா'' என்று ஒரு முரட்டு வண்டிக்காரனின் குரல், ஓடுகின்ற வண்டிச் சக்கரத்தின் குறுக்கே கொடுத்த சாட்டைக்கோல் சத்தத்துடன் சேர்ந்து ஒலிக்கவே அவன் மிரண்டு போய் ஓடிப் பிளாட்பாரத்தில் ஏறி நின்றான்.

அப்பொழுது அவன் நின்று கொண்டிருந்த இடம் சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு எதிர்ச்சாரியிலுள்ள பிளாட்பாரம். மாலை நேரமானதால் வழக்கமான நெரிசலும் இடிபாடுகளும் அதிகமாகவே இருந்தன.

நெளிந்தும் செல்லும் ஜனக் கும்பலையும், பெருகி வரும் கார்களின் அணிவகுப்பையும், நகரத்தின் ஆரவாரத்தையும் கண்டு பிரமைதட்டி நின்றான் அவன்.

திருவிழா நடப்பது போலவும், தேர் வர இருப்பது போலவும் ஜனக் கூட்டம் நெரிந்தது. ஊர்வலம் பார்க்கத் திரண்டிருப்பது போல் பிளாட்பாரத்தின் ஓரத்தில் ஜனங்கள் வரிசையாக நின்று கொண்டிருந்தனர். இதெல்லாம் ஏன் என்று அவனுக்கு விளங்கவே இல்லை.

''... ...வேடிக்கை இருக்கும் ...'' என்று அவனும் அந்த வரிசையில் நின்று கொண்டான். அவனைத் தொடர்ந்து இன்னும் பலர் நின்றனர்.

''... ...வதிரு...திரு...'' என்று கூச்சலிட்டவாறு சிறு பிள்ளைகள் விளையாடும் 'ரயிலாட்டம்' அவனுக்கு நினைவு வந்தது.

'அப்பாடி ... ...அதோ முன்னால் நிக்கிறாரே ஒரு கறுப்புக் கோட்டுக் கொனவரு... அவருதான் இஞ்சின்!'

அவனுக்குப் பட்டணத்து மனிதர்களின் காரியம் சிறுபிள்ளைத்தனமாகப் பட்டது. சிரிப்புத்தான் வந்தது.

# செக்ஷன் நம்பர் 54

## ஜெயகாந்தன்





"எங்கேப்பா போகணும்...?" - திரும்பிப் பார்த்தான். ஒரு காக்கிச் சட்டைக்காரன் நின்று கொண்டிருந்தான். அவன்தான் கேட்டான்.

"எங்கேப்பா போகணும்?"

"எங்கேயுமில்லே, சும்மா வேடிக்கை பார்க்கறேன்!"

"பின்னே ஏன் 'க்யூ'விலே நிக்கிறே? அப்பாலே ஒத்திப் போய் நில்லு."

"என்னாத்துலே நிக்கறேன்?"

"க்யூவிலே!"

காக்கிச் சட்டைக்காரனுக்கு முன் பற்களில் ஒன்றும் இல்லை. அவன் 'க்யூ' என்று உதடுகளைக் குவித்துச் சொல்லும்போது விசில் அடிக்கும் சத்தம் கேட்டது. அதை ரசித்துக்கொண்டே, பட்டிக்காட்டான் திரும்பத் திரும்பக் கேட்டான்.

"இந்தாய்யா! இது பஸ்ஸுக்குப் போறவங்க 'க்யூ'! அப்பாலே தள்ளி நின்னு வேடிக்கை பாரு!"

"க்யூவ்...க்யூவ்" என்று பட்டிக்காட்டான் மௌனமாகச் சொல்லிப் பார்த்துக் கொண்டான். அவன் உதடுகள் குவிந்து அசைந்தன.

"பட்டணமின்னு எல்லாமே விநோதமா யிருக்கு. ஊருக்குப் போயி இதையெல்லாம் கதை கதையாகச் சொல்லலாம். யார் கிட்டே?"

அந்த நினைப்புடன் ஒரு பெருமூச்சும் பிறந்தது.

அவன் ஏன் பட்டணம் வந்தான்?

அதை நினைக்கையில் அவன் மனசுக்குள் ஒரு சிரிப்பு பிறந்தது. கற்பனையில் சில காட்சிகள் விரிந்தன.

"ஐயோ..... என் மவனைக் காணோம். இரண்டு நாளு ஆச்சே! எங்கனே போய்த் தவிக்கிறானோ? அவன் இஷ்டப்படிக்கி அந்தச் சோமையாப் பிள்ளை மவ ருக்குமணியைப் பேசி முடிக்காம, நான் ஒரு புத்தி கெட்டவன். ஒன்னே ஒண்ணு கண்ணே கண்ணுன்னு வளர்த்த புள்ளையைப் பறி கொடுத்துட்டேனே" என்று அவன் தந்தை தலையில் கைவைத்துக் கொண்டு புலம்புகிறார்.

அண்டை அயலார்கள் கூடிச் சமாதானம் கூறுகிறார்கள்.

"கோவாலனைப் பார்த்தீங்களாய்யா, கோவாலனை!" என்று பெற்றவள் தலைவிரிகோலமாய்க் கிராமத்தில் திசையெல்லாம் ஓடித் திக்கெலாம் தேடுகிறாள்.

"இந்தா புள்ளே ருக்கு! சத்தியமாச் சொல்லு! ஒன் கிட்டே சொல்லிக்காமலா போயிருப்பான்? சொல்லு புள்ளே, எங்கே போனான்? எந்தத் தெசைக்கா போனான் சூச்சம் சொல்லு. தாயே! எங்க கொல தெய்வத்து மேலே ஆணையா ஒங்க ரெண்டு பேருக்கும் ஒங்க இஷ்டப்படியே கண்ணாலம் செஞ்சிடுவோம். சொல்லு புள்ளே!" என்று அவன் தாய் அவளிடம் கையைப் பிசைந்து கொண்டு கண்ணீர் விட்டுக் கெஞ்சுகிறாள்.

"அத்தே! நீங்க என்ன சொல்லுறீய! மச்சானைக் காணலியா? ஐயோ என் கிட்டே ஒண்ணும் சொல்லலியே!" என்று அவளும் அழுகிறாள்.



அவன் தாய்க்கு வருத்தமும் கோபமும் கணவன்மீது பாய்கிறது. நேரே வீட்டுக்கு வருகிறாள். '' நான் தான் புத்தியில்லாம என்னமும் சொன்னேன்னு, நீங்களும் கூடச் சேர்ந்து பேசாத பேச்செல்லாம் பேசி, என் ஆசைமவனைத் தொரத்திப்புட்டிங்களே. நான் எப்படி உசிரோட இருப்பேன்? எனக்கு வயத்தையெல்லாம் என்னமோ பண்ணுதே... பெத்தவயிறு எரியுதே...'' என்று வயிற்றில் அடித்துக் கொள்கிறாள். வெற்றிடங்களையும், வெறும் வானத்தையும் நோக்கிக் கைகளை விரித்துப் பிலாக்கணம் வைத்து அழுகிறாள்:

'தரை மொழுகிச் சோறுண்டு நான்
தவங்கெடந்து பெத்த மவன்
மறைஞ்ச எடம் தெரியாம தனி
மரமாக் நிக்கிறேனே'

சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு எதிரே ஜன நெரிசலில் நின்றிருந்த கோபாலனின் கண்கள் கலங்குகின்றன. பெற்றவர்களின் நினைவு மனதை வருத்தினாலும் அவர்கள் மீதுள்ள கோபம் முற்றிலும் தணியவில்லை.

'அழட்டும், நல்லா அழட்டும்!' என்று கறுவிக் கொள்கிறான். இரண்டு நாட்களுக்குப் பிறகு அவர்களைச் சிரிக்க வைக்கும் மந்திரமும் அவனிடம் இருக்கிறதே!

'' பேரிக்காய் அரையணா, பேரிக்காய் அரையணா!'' திப்பாவை மேலுக்கு உயர்த்தி இடுப்பில் கட்டியிருந்த பெல்டின் பர்ஸில் விரலை விட்டுத் துழாவினான்.

திரும்பிப் போவதற்கான டிக்கட் சார்ஜ் ஒன்பது ரூபாய் பதினாலணாவை ஒருபுறம் தனியே மடித்து வைத்தான். மீதி சில்லறையும் ஒரு நோட்டும் இருந்தது. நாளை இரவு ரயிலேறும் வரை செலவுக்குப் போதும்.

'' ஒரு பேரிக்காய் குடுய்யா!'' பேரிக்காயை வாங்கிக் கொண்டதும், பெல்டில் தொங்கும் சாவிக் கொத்தை எடுத்து அதில் இருந்த பேனாக் கத்தியால் சீவ ஆரம்பித்தான்.

அப்பொழுது 'க்யூ' வினருகே பஸ் வந்து நின்றது.

ஜனங்கள் முண்டியடித்துக் கொண்டு பஸ்ஸுக்குள் ஏறுவதை வேடிக்கை பார்த்தவாறு நின்றிருந்த கோபால் பட்டிக்காட்டில் பார்க்க முடியாத மற்றொரு செயலை அந்த நகரத்தில் பார்த்தான்.

தன் மடியிலேயோ சட்டைப் பையிலேயோ கையை விட்டுக் காசை எடுப்பதுதான் பட்டிக்காட்டு வழக்கம்.

'' இங்கே என்னடா வெள்ளம்?....''

'' ஒரு வேளை திருடனா யிருக்குமோ?''

'' ஐயா! திருடன்! திருடன்!'' என்று அலறினான் கோபால்.

'' எங்கே? எங்கே?'' என்று எல்லோரும் எங்கெங்கோ பார்த்தார்கள். பணத்தைப் பறிகொடுக்க இருந்தவன் பையோடு சேர்த்துத் திருடனின் கையைப் பிடித்துக் கொண்டான். பட்டணத்து மனிதர்கள் யாரும் திருடனைப் பிடிக்கவோ பிடித்தவனுக்கு உதவவோ முன் வரவில்லை. '' போலீஸ் போலீஸ்'' என்று கூவிக் கொண்டிருந்தனர். சற்றுத் தூரத்தில் நின்று கொண்டிருந்த கோபால் பாய்ந்தோடித் திருடனைப் பிடித்தான்.

ஆனால்?....

'சர்'ரென அவன் முகத்துக்கு நேரே கையை வீசினான் திருடன்.

'' ஆ! ரத்தம்!'' ஒரு கையால் முகத்தைத் துடைத்துக் கொண்டு மற்றொரு கையால் அவனைப் பிடித்திருந்தான் கோபால். அப்பொழுது கூட அவன் கையில் பேனாக் கத்தி இருந்தது. விரும்பினால் குத்தி இருக்க முடியும். கத்தியைக் கண்டதும் திருடன் திமிறிக் கொண்டு ஓடிக் கூட்டத்தில் கலந்து மறைந்து விட்டான்.

கோபால் மேல் துண்டால் முகத்தைத் துடைத்தான். வலது கன்னத்தில் ஒரு சிறு கீறல். அவ்வளவுதான்!

அவனைச் சுற்றிக் கூட்டம் கூடி நின்று அனுதாப வார்த்தைகளை அள்ளி வீசிக் கொண்டிருந்தது.

பஸ் வரவே எல்லோரும் அநுதாப வார்த்தைகளை அப்படியே மூட்டை கட்டி வைத்து விட்டு முண்டியடித்துக் கொண்டு ஓடினர்.

கோபால் பயந்து போனான். அவன் பலசாலிதான்; தைரியசாலிதான் என்றாலும் மடியில் இருந்த ரூபாயைத் தடவிப் பார்த்துக் கொண்டான். நல்ல வேளை! அது போய் விட்டால் அழுது கொண்டிருக்கும் அம்மாவையும் அப்பாவையும் சிரிக்கவைப்பதெப்படி? 'அவளி'டம் போய்த் தான் கண்ட விநோதங்களையெல்லாம் கூறி மகிழ்வது எப்படி?

'கன்னத்தில் காயம் ஒன்றும் பிரமாதமில்லை.' கன்னத்தைத் தடவி விட்டுக் கொண்டு அங்கிருந்து நடக்க ஆரம்பித்தான்.

• • •

பகலெல்லாம் நகரின் பல பாகங்களையும் சுற்றித் திரிந்து பார்த்த பின் இரண்டாவது ஆட்டம் சினிமா பார்த்து விட்டுத் தியேட்டரை விட்டு அவன் வெளியே வரும்போது மணி ஒன்று அடித்தது.

நாளெல்லாம் சுற்றிய களைப்பும் உறக்கமும் கண்களைக் கிறக்கின.

தெருக்களில் ஆளரவம் அடங்கி விட்டது. அவனுக்குப் பயமாகவும் இருந்தது. எங்காவது படுத்து அலுப்புத் தீரத் தூங்க வேண்டும். ஆனால் எங்கே படுப்பது?

மாலை நடந்த நிகழ்ச்சியும் மடியிலிருக்கும் கனமும், அறிமுகமில்லாத நகரும் அர்த்தசாமவேளையும் - அவன் நடுங்கினான்.

அவன் திருடர்களுக்காகப் பயப்படவில்லை. மடியிலிருக்கும் பணம் பறி போய் விட்டால்? அதனால் ஏற்படும் விளைவுகளை யெல்லாம் எண்ணியே அஞ்சினான்.

தெரு விளக்கின் வெளிச்சத்தில் நிழல்கள் அசையும்போதெல்லாம் தன் மடியிலிருக்கும் பணத்தை எவனோ தட்டிப் பறிக்க வருவது போல் தோன்றியது.

போகும் வழியில் குறுக்கிடும் ஒவ்வொரு சந்தின் முனையிலும் இவன் மடிப் பணத்தைக் கொள்ளையிட ஒரு திருடன் உருவிய கத்தியுடன், இவன் மேல் பாய்வதற்குச் சித்தமாய் வரிந்து கட்டிக் கொண்டு நின்றிருப்பது போல் தோன்றியது.

ஆம்; ஒவ்வொரு சந்திலும் ஒவ்வொரு திருடன் காட்சியளித்தான்!

'ஐயோ, பட்டணமே!' என்று பெருமூச் செறிந்தான்.

அதோ அந்தத் தெரு முனையில் ஒரு கட்டடத்தினுள் விளக்கு எரிகிறது. வெளியே கையில் துப்பாக்கியுடன் ஒருவன் காவல் புரிகிறான்.

அது போலீஸ் ஸ்டேஷன்.

போலீஸ்காரர்கள் திருடர்களைப் பிடிப்பவர்கள் என்ற உண்மையும் அவனுக்குத் தெரியும். அத்துடன் அவர்கள் திருடர்களிடமிருந்து ஜனங்களைக் காப்பாற்றுவார்கள் என்ற நம்பிக்கையும் இப்பொழுது பிறந்ததால் நேரே போலீஸ் ஸ்டேஷனை நோக்கி நடந்தான்.

"யாரது?"

"ஐயா! நான் அசலூரு. ராவுலே தங்க இடமில்லே. இங்கன கொஞ்சம் படுத்துக்கிட இடம் தாரீயளா?"

"இதென்ன சத்திரமாய்யா. போப்பா, போ" என்று விரட்டினார் போலீஸ்காரர்.

ஏமாற்றத்துடன் திரும்பிய கோபால் எங்கெங்கோ தெருத்தெருவாய்த் திரிந்தான். தூங்குவதற்கு ஆசையிருந்தும் தூங்கப் பயமாயிருந்தது.

சுமார் அரைமணி நேரம் சுற்றித் திரிந்த பிறகு அவனுக்கு 'லட்சிய இடம்' ஒன்று கிடைத்தது. தூக்க மயக்கம் தாங்க முடியாமல் தள்ளாடி வந்து கொண்டிருந்த அவனுக்கு எங்காவது கையையும் காலையும் அகட்டிப் போட்டு 'ஓஹோ' வென்று தூங்க வேண்டுமென்ற ஆசை, வெறியாகப் பரிணமித்துக் கொண்டிருந்தபோது அவன் மனம் குதூகலிக்கும்படி அந்த இடம் அமைந்தது.

அந்த வீட்டின் முன்புறக் கதவு பூட்டிக் கிடந்தது. எந்த மகராசனோ இரண்டு பக்கமும் நீளநீளமாய்த் திண்ணைகளைக் கட்டிப் போட்டிருந்தான். அவனை வாழ்த்திக் கொண்டே திண்ணையில் ஏறி உட்கார்ந்தான் கோபால். வீட்டின் முன்புறம் இருண்டிருந்ததால் அங்கு படுத்திருப்பதை யாரும் கண்டு பிடிக்க முடியாது.

துண்டை உதறித் தட்டி விரித்து, நீண்ட கொட்டாவியுடன் படுத்தான். பெல்ட்டிலிருந்த சாவிக் கொத்தும் பேனாக்கத்தியும் இடுப்பில் உறுத்தின. எழுந்து உட்கார்ந்து அவற்றைக் கழற்றினான். அந்த சமயத்தில்...

'டக்டக்' கென்று பூட்சின் சத்தம் ஒலித்தது. அதைத் தொடர்ந்து டார்ச் லைட்டின் ஒளி வட்டம் அவன் மீது விழுந்தது. "டேய், யார்ரா அவன்?"

மரியாதைக் குறைவான வார்த்தைகளைக் கேட்டு அவன் எழுந்து நின்றான்.

"ஓடாதே, நில்..." என்று குரல் கொடுத்துக் கொண்டு அந்த உருவம் பூட்ஸ் சத்தம் ஒலிக்க அவனருகில் ஓடி வந்தது. வந்தவர் போலீஸ்காரர்.

"யார்ரா நீ! இந்நேரத்திலே இங்கே என்ன பண்ணறே?" டார்ச் லைட்டின் வெளிச்சத்தில் கோபாலின் முகத்திலிருந்த வெட்டுக் காயமும், மீசையும் கிருதாவும் தெரிந்த தோற்றம் போலீஸ்காரரின் மனதில் 'எவனோ பெரிய கேடி.' என்ற எண்ணத்தை எழுப்பின.

டார்ச் லைட் மூடிய கதவில் பூட்டப்பெற்றுத் தொங்கிய பூட்டின் மீது விழுந்தது.

"சாவிக் கொத்து, பேனாக் கத்தி."

"இதை என்ன பண்றே இங்கே?"

"நான் வெளியூருங்க, படுத்துக்கிடலாமின்னு வந்தேனுங்க."

"ஆமாமா, வெளியூர் ஆசாமிங்கதான் இந்த மாதிரி ஆளுகளா வர்றாங்க. சரி, வா ஸ்டேஷனுக்கு."

"அங்கேதானுங்க போனேன். படுக்க இடம் தராமாட்டேன்னுட்டாங்க."

'ஏது பெரிய கெட்டியா இருப்பான் போல் இருக்கே.'

"அப்படிங்களா, நீங்க வாங்க. நான் இடம் தாரேன்" என்று போலீஸ்காரர் ஏளனமாய்ப் பதில் சொன்னார்.

"உங்களுக்கு ரொம்பப் புண்ணியமுங்க. இங்கே தனியா படுத்துக்க எனக்கும் பயமாத் தானுங்க இருந்தது."

"ஏய்! வாயை மூடிக்கிட்டு வா. இன்னு நக்கலா பண்றே?" என்று மிரட்டினார் போலீஸ்காரர்.

'நல்ல மனுசன்தான். கொஞ்சம் முசுடு போலிருக்கு' என்று மனதில் முனகிக் கொண்டான் கோபால்.

போலீஸ் ஸ்டேஷன் வந்தடைந்ததும் கோபால் ஆச்சரியமுற்றான்.

'அட இது வேற ஸ்டேஷன். இந்த ஊருலே தெருவுக்குத் தெரு ஸ்டேஷன் இருக்குதுங்களா?" என்று மேலும் கேட்டுப் பார்த்தான்.

"ஆமாய்யா. உங்களை மாதிரி வர்றவங்களுக்கும் படுக்க இடம் குடுக்கணுமில்லே. அதுக்குத்தான். சரி உன் பேரென்ன?"

"கோபால்."

"ஊரு."

"மாவிலம்பட்டி."

இத்தியாதி விஷயங்களைக் குறித்துக் கொண்ட போலீஸ்காரர் தம் மனதுக்குள் நினைத்தார்.

'ஒன்னும் தெரியாதவன் மாதிரிப் போடுற வேஷத்தைப் பார்த்தா பல பெரிய கேடியாத் தான் இருப்பான் போலிருக்கு. எதுக்கும் நாம்ப 'செக்ஷன் பீப்டி போர்'லே சந்தேகக் கேஸாலே புடிச்சு வைப்போம். அதுக்கு மேலே இன்ஸ்பெக்டரு ஐயா வந்து விசாரிச்சுக்கிடட்டும்.'

"சரி. உன் பெல்ட், சாவிக்கொத்து, பணம், எல்லாத்தையும் மேசைமேலே கழற்றி வைச்சிட்டு உள்ளே போ, காத்தாலே வாங்கிக்கலாம்" என்றார் போலீஸ்காரர்.

"அதுக்கென்னங்க. அப்படியே!" எல்லாவற்றையும் கழற்றி வைத்து விட்டு விளக்கு இல்லாத இருள் அறைக்குள் நுழைந்தான்.

"அங்கே கோணி இருக்கு. படுத்துக்க."

அவன் கோணியை உதறிப் போட்டுப் படுத்தான். போலீஸ்காரர் கம்பிக் கதவை இழுத்துப் பூட்டியதைக்கூட அவன் கவனிக்கவில்லை. தனக்குத் தூங்குவதற்கு இடம் தந்த 'வள்ளலை' மனதார வாழ்த்திக் கொண்டே கொட்டாவியுடன் புரண்டு படுத்தான்.

அந்தப் பட்டிக்காட்டானுக்குச் சட்டம் தெரியுமா, செக்ஷன் தெரியுமா? இருளில் தன்னை மறந்து தூங்குகிறான்.

விடிந்தால் வரும் வெளிச்சம்!



உங்கள்
கேசத்திற்கும்
தலைக்கும்
ஆரோக்கியத்தையும்
போஷாக்கையும் அளியுங்கள்!

கால்கேட் ஹேர் டானிக் லெனோலின் என்ற ஓர் அற்புதமான எண்ணெய்யுடன் சேர்த்துத் தயாரிக்கப்பட்டது. இது தலையில் இயற்கையாக உண்டாகும் எண்ணெய்களை வற்றுது புதுப்பித்து... கேசத்தை ஆரோக்கியத்துடனும், சேர்த்தியாகவும் இருக்க உதவுகிறது.






புதிய **கால்கேட்**
**ஹேர் டானிக்**
*லெனோலின் கலந்தது*

# தசமூலாரிஷ்டம்



**இரத்த விருத்தியும்**
**தாது புஷ்டியும் அளிக்கும்**
**சிறந்த டானிக்**

பல ஆண்டுகளாகப் புகழ் பெற்றது

# ஆரிய வைத்திய ஆசிரமம்

குமரன் வீதி — — — திருப்பூர்

✱

குறிப்பு: பிரதான வைத்தியர் **பி. ஜி. வாரியர்**
ஜூலை 5-ம் தேதி முக்கிய நோயாளிகளைப் பார்க்க
சேலம் செவ்வாய்பேட்டை பிராஞ்சக்கு விஜயம் செய்கிறார்

OSR

# வட வேங்கடவன்



# வேங்கடம் முதல்

ஒரு கூனன், ஒரு குருடன், ஒரு மூடவன், ஒரு ஊமை இப்படி நான்கு பேர்கள் ஒரு மலை ஏறுகிறார்கள். மலை என்றால் ஏதோ இமயத்தின் சிகரத்தைப் போன்று நீண்டு உயர்ந்த மலை அல்ல. ஒரு சின்னஞ் சிறிய மலை. அந்த மலைமீது ஒரு கோயில். அந்தக் கோயிலிலே ஒரு தெய்வம். அந்தத் தெய்வத்திடம் அசையாத நம்பிக்கை மக்களுக்கு. கேட்கும் வரத்தையெல்லாம் அளிக்கவல்லது என்று. ஆதலால் வாழ்க்கையில் இந்த ஊனுடம்பில் ஏற்பட்ட குறை காரணமாகத் துயருறுகிறவர்கள் நால்வர் மலை ஏறுகிறார்கள். இவர்களைப் போல் உடம்பில் குறை இல்லாவிட்டாலும், உள்ளத்தில் குறையுடையவர்கள் பலரும் மலை ஏறுகிறார்கள்.

திடீரென்று ஒரு அதிசயம் நிகழ்கிறது அங்கே. கூனிக் குறுகிக் கோலூன்றி நடக்கிறவன் கூன் நிமிர்ந்து ஓடவே ஆரம்பித்து விடுகிறான். குருடன் கண்கள் திறந்து விடுகிறது; அவன் கண்கள் ஒளிபெற்று நிமிர்ந்து வளர்ந்திருக்கும் கொம்பொன்றில் தொங்கிக் கொண்டிருக்கும் தேன் கூட்டைப் பார்த்து, 'அதோ தேன், அதோ தேன்' என்று மற்றவர்களுக்குக் காட்டுகிறான். இதுவரை கொண்டியாய் முடமாய்த் தட்டுத்தடுமாறி மலை ஏறிய முடவனே குருடன் காட்டிய தேன் கூட்டை எடுக்க மரத்தின்மேலேயே ஏற ஆரம்பித்து விடுகிறான். இவ்வளவுதான். இதுவரை வாய் பேசாது ஊமையாய்ப் பக்கத்தில் சென்றவனோ 'எடுக்கும் தேனில் எனக்கும் கொஞ்சம்' என்றே வாய் விட்டுக் கேட்கிறான். இப்படியே கூனன், குருடன், முடவன், ஊமை என இருந்த நால்வரும் தங்கள் தங்கள் குறை நீங்கியவர்களாய் ஓடுகிறார்கள், மலைமேல் நிற்கும் மாதவனின் திருவடிகளில் சென்று வீழ்ந்து வணங்கி எழுவதற்கு. இத்தனையையும் பார்த்துக் கொண்டிருக்கிறார் ஒரு கவிஞர். அவரும் மலை ஏறுகிறவர்களில் ஒருவர்தான். அவர் உள்ளத்திலும் ஏதோ குறை. அதற்குப் பிரார்த்தனை செய்து கொண்டே ஏறுகிறார் மலைமேலே. இவருக்கு இந்த நிகழ்ச்சியை, இந்த அற்புதத்தைக் கண்டு ஒரே வியப்பு, வியப்பைவிட மலைமேல் இருக்கும் மாதவனிடத்திலேயே ஒரு நம்பிக்கை. அந்த நம்பிக்கையிலே பிறக்கிறது ஒரு பாட்டு. பாட்டு இதுதான்:

கூன் கொண்டு சென்றவன்
 கூன் நிமிர்ந்து ஓட;
  குருடன் கொம்பில்த்

தேன் என்று காட்ட;
 முடவன் அத்தேனை
  எடுக்க; அயல்

தானின்ற ஊமை
 எனக் கென்று கேட்கத்
  தருவன் வரம்

வான் நின்ற சோலை
 வடமலை மேல் நின்ற
  மாதவனே.

'இத்தனையும் இப்படியே நடந்ததா? அதற்கு ஆதார பூர்வமான சாக்ஷியம் உண்டா?' என்று ஆராய வேண்டுவதில்லை. பக்தனுகிய கவிஞன் பாடிப் பல நூறுண்டுகள் கழிந்துவிட்டன. என்றாலும் மக்கள் உள்ளத்திலே, அதே அசையாத நம்பிக்கை இன்னும் சுடர் விட்டுக் கொண்டிருக்கிறது என்பது கண்கூடு. இன்றும் நான் நக்ஷத்திரம் என்று ஒன்றும் பார்க்காமலேயே தினசரி நூற்றுக் கணக்கான மக்கள் மலை ஏறியோ அல்லது காரிலோ, பஸ்ஸிலோ சவாரி பண்ணியோ திருமலை சென்று சேர்கிறார்கள். பணம் படைத்தவர்கள் எல்லாம் நிறையக் கட்டணம் செலுத்தி மலைமேல் நிற்கும் மாதவனைச் சேவிக்கிறார்கள். ஏழைகளும் 'கியூ' வரிசையிலே, மணிக்கணக்காக நின்று, நகர்ந்து, கர்ப்பக்கிருஹத்தில் நுழைந்து

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

# குமரி வரை

வேங்கடேசுவரனைத் தரிசிக்கிறார்கள். இத்துடன் அவரவர்கள் பிரார்த்தனை செய்து கொண்டபடி பணமாக, நோட்டாக, நகையாக எல்லாம் அந்தக் கோயிலில் வைத்திருக்கும் பெரிய உண்டியலில் போட்டுவிட்டு, உண்டியலைச் சுற்றிவந்து நமஸ்கரித்து விட்டு வீடு திரும்புகிறார்கள். உண்டியலில் சேர்வது மாதம் ஒன்றுக்கு மூன்று லட்சம் என்கிறார்கள்; நான்கு லட்சம் என்கிறார்கள். மக்களது இத்தனை நம்பிக்கைக்கும் பாத்திரமாக இருப்பவன் தான், திருப்பதியில், அந்தத்திருமலைமேல் நிற்கும் திருவேங்கடமுடையான். 'வடவேங்கடம் தென்குமரியாயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம்' என்று பண்டைத் தமிழர்கள் எல்லை கட்டினார்களே அந்தத் தமிழ் நாட்டின் வடஎல்லையில்வானுற ஓங்கிவளர்ந்த வடமாலவன் குன்றத்தின் மீதே, வான் நோக்கி நிமிர்ந்து நிற்கிறான் அவன்.

* * *

'கடன் வாங்கிக் கல்யாணம்' என்று ஒரு படம். படத்தில் வரும் நிகழ்ச்சிகளுக்கும் படத்தின் பெயருக்கும் பொருத்தம் இல்லை என்கிறார்கள் பார்த்தவர்கள். ஆனால் தமிழ் நாட்டில் கடன் வாங்கிக் கல்யாணம் பண்ணி அந்தக் கடனையும் அடைக்க முடியாமல் திணறிக் கொண்டிருக்கிற பெருமகன் ஒருவர் உண்டென்றால், அவர் திருப்பதி வேங்கடாசலபதி தான். கதை இதுதான்.

வைகுண்டவாசனாக இருந்த மகா விஷ்ணு வராக அவதாரம் எடுத்து இரணியாக்ஷனை சம்ஹரித்து பூதேவியை அவனுடைய பிடியிலிருந்து மீட்டவர் வைகுண்டத்துக்குத் திரும்பாமல் இப் பூவுலகிலேயே நிலைத்து விடுகிறார். ஸ்ரீதேவியும் இப் பூவுலகிலே ஒரு தாமரை மலரிலே குழந்தையாக அவதரிக்கிறாள். குழந்தையை ஆகாசராஜன் எடுத்துப் பத்மாவதி எனப் பெயரிட்டு வளர்க்கிறான். நாராயண வனத்திலே பத்மாவதி தேவியும், அந்த நாராயணனையே கணவனாக அடையத் தவமிருக்கிறாள். வேங்கடவனாக மலைமேல் நிலைத்து நின்ற நாராயணன், வகுளமாலிகையைத் தூதனுப்பி, பத்மாவதியை மணம் பேசித் திருமணம் செய்துகொள்ள முனைகிறார். கல்யாணச் செலவுக்குப் பணம் வேண்டுமே. அதற்காகக் குபேரனிடம் ஒரு கோடியே பதினொன்று லக்ஷம் பொன் கடன் வாங்குகிறார். இந்தக் கடனுக்கு வருஷந்தோறும் வட்டி கட்டுவதாகவும் கலியுக முடிவில் அசலைக் கொடுப்பதாகவும் ஒப்புக்கொண்டு பத்திரம் வேறே எழுதிக் கொடுக்கிறார். கடன் பத்திரத்தில் சங்கரனும், பிரம்மாவும் சாக்ஷிக் கையெழுத்து இடுகின்றனர். இப்படிக் கடன் வாங்கிய பணத்தைக் கொண்டு கல்யாணம் 'ஜாம் ஜாம்' என்று நடக்கிறது. கடன்தான் இன்னும் அடைத்தபாடாக இல்லை. அதற்காகவே வேங்கடேசன் இன்னும் பக்தர்களிடம் பிரார்த்தனை மூலம் வாங்கிக் கொண்டிருக்கிறார். வட்டிக்கு வட்டி வாங்கும் வட்டிக் காசுப் பெருமாள் என்ற பெயர் வாங்கியும், வட்டியையும் முதலையும் குபேரனுக்குக் கொடுக்காமலேயே 'மொங்கான்' வைக்கிறார் ஆசாமி. ஒரே ஒரு திருப்தி. வருகிற பணம் முழுவதையும் பள்ளிக்கூடம், கலாசாலை, ஆஸ்பத்திரி, அநாதை ஆசிரமம் என்று தானம் வழங்கி விடுகிறார். குபேரனது கடன் தீராவிட்டால் குபேரனுக்கு என்ன குறைந்துவிடப் போகிறது?

இந்தப் பெருமானைப் பற்றி மக்கள் பேசிக்கொள்ளும் கதைகளோ அனந்தம். ஸ்ரீ வேங்கடேசனோ திருமலைமீது நிற்கிறார். அங்கு அவர் பக்கத்திலோ துணைவி இருக்கவில்லை. அந்த அலர்மேல் மங்கையோ மலைஅடிவாரத்திலிருந்து மூன்று மைல் தூரத்தில் உள்ள திருச்சானூரில் குடியிருக்கிறாள். இப்படி இவர்கள் பிரிந்திருப்பானேன்? அது தெரியாதா? மணப் பெண்ணான அலர் மேல் மங்கை கணவன் வீட்டுக்கு வரும்போது நிறைந்த ஸ்ரீதனம் எல்லாம் கொண்டு வந்திருக்கிறாள். அவள் கொண்டுவராத பண்ட பாத்திரமோ, தட்டுமுட்டோ இல்லை. என்றாலும் ஒரே ஒரு பொருள்-மிகவும் அற்பமானதுதான்-அதுதான் கருவேப்பிலைக் கொத்து ஒன்று கொண்டுவர மறந்துவிட்டாள். அதற்காக மணமகன் அவளை விரட்டி அடித்து விட்டார். அவளும் வீம்பு குறையாமல் தன் பிறந்தகத்துக்கு வந்து அன்று தங்கியவள்தான் புருஷன் வீட்டுக்குத் திரும்பவே இல்லை. ஆனால் புருஷனுடைய வீராப்பு எத்தனை நாளைக்கு? இப்போதோ ஒவ்வொரு இரவிலும் ஆசாமி மலையி

ஆனந்த நிலைய விமானம்.



விருந்து இறங்கி மனைவி வீட்டுக்கே நடக்கிறார், நடக்கிறார். விடிவதற்குள் திரும்பியும் விடுகிறார் யதாஸ்தானத்துக்கு. மனைவியுடன் பிணங்கிக் கொண்டதன் பலன் வேங்கடேசனுக்குச் செருப்பு தேய்கிறது. இப்படியெல்லாம் பக்தர்கள், அதிலும் பெண்மணிகள் எல்லாம் பேசிக்கொள்வது நம் காதில் விழும் திருப்பதி திருமலை செல்லும் வழியில். ஆனால் இப்படி இருவரும் மலைமேல் ஒருவரும் நிலமேல் ஒருவருமாகத் தனித்திருப்பதற்கு ஒரு காரணம் தோன்றுகிறது எனக்கு. வேங்கடவனுக்கும் அலர்மேல் மங்கைக்கும் ஒரு போட்டி. பக்தர்களுக்கு அருள் புரிவதிலே, அப்பனை விட அன்னை அருள் மிகுந்தவள் அல்லவா? ஆதலால், அவள் அவசரம் அவசரமாக இறங்கி ஓடி வந்து பக்தர்களை எதிர்கொண்டு அருள்புரிவதிலே முந்திக்கொள்கிறாள் என்றுதான் எண்ணத் தோன்றுகிறது எனக்கு.

* * *

இந்தத் திருவேங்கடமுடையானது திருப்பதி இன்று மூன்று பிரிவாக இருக்கிறது. அலர்மேல் மங்கைத் தாயார் கோயில் கொண்டிருக்கும் திருச்சானூர்; கோவிந்தராஜன் திருக்கோயில் இருக்கும் கீழைத் திருப்பதி; வேங்கடவன் நின்ற திருக்கோலத்தில் காட்சி கொடுக்கும் திருமலை. ரயிலிலோ, காரிலோ போகிறவர்கள் எல்லாம் ஒன்று சேர்வது கீழைத் திருப்பதியில்தான். இங்குதான் ராமாநுஜரால் நிர்மாணிக்கப்பட்ட கோவிந்தராஜன் கோயில் இருக்கிறது. கோயிலைச் சுற்றியே திருப்பதி நகரம். தேவஸ்தானத்தார் நடத்தும் கீழ்த்திசைக் கல்லூரி, சர்வகலாசாலை, பெண்கள் பள்ளிக்கூடம், அநாத சரணாலயம் எல்லாம் இருப்பது இங்கேதான். வேங்கடேசுவரா விசுவவித்யாலயம், பாலி டெக்னிக் தொழிற் கல்விச்சாலை, யாத்திரிகர்கள் தங்கப் பிரும்மாண்டமாகக் கட்டப்பட்டுள்ள சத்திரங்கள் எல்லாம் இருக்கின்றன. இங்கிருந்து தென்கிழக்கே இரண்டு மைல் தூரத்தில் திருச்சானூர். அங்குள்ள பத்ம சரோவரம் என்ற குளத்தில் மலர்ந்த தாமரையிலேதான் பத்மாவதித் தாயார் தோன்றியிருக்கிறாள். குளத்துக்குக் கிழக்கே கோயில்.

இனி வேங்கடவாணனைத் தரிசிக்க மலை ஏறலாம். காலிலே வலுவுள்ளவர்கள், ஏழு மலை ஏறி, ஏழுமைல் நடந்து ஏழுமலையானிடம் ஒன்று சேரலாம். கால் கடுக்க நடக்க இயலாதவர்களுக்கு பஸ் வசதி செய்திருக்கிறார்கள். இன்னும் கொஞ்சம் வசதி செய்து கொள்ளக் கூடியவர்கள் 'ஜம்' என்று காரிலேயே பதினோரு மைல் தூரத்தில் ஏழுமலையையுமே கடந்து விடலாம். இந்தத் திருமலைத் தொடருக்கு சேஷாசலம் என்று பெயர். கீழே இருந்து பார்த்தால் இம் மலைத் தொடர் உடலை வளைத்துப் படுத்துக் கிடக்கிற பாம்பு போலவே இருக்கும். இப்படி எல்லாம் 'வான்கலந்த வண்ணன் வரை' கடந்து சென்றால், தேன்கலந்து நீட்டும் திருவேங்கடம் வந்து சேருவோம். மலை ஏறியதும் சுவாமி புஷ்கரணியில் ஒரு முழுக்குப் போட்டு, அக் குளத்தின் மேல் கரையில் உள்ள வராக மூர்த்தியைத் தரிசித்து விட வேண்டும். உருவிலே சிறிய மூர்த்தி என்றாலும் இவர்தானே ஆதி மூர்த்தி. இனி, கோயிலுக்குள் போகலாம். கோயில் மற்றைய தமிழ்நாட்டுக் கோயில் கட்டிடக் கலைக்கு எடுத்துக்காட்டாக அமைந்திருக்கிறது. கோயிலின் தலைவாயிலை-படிக்காவலி என்கிறார்கள். அந்த வாயிலை ஒரு கோபுரம் அணி செய்கிறது. இந்த வாயிலில் நுழைந்து முதற் பிராகாரத்தையும் கடந்தால் வெள்ளி வாயில் (வெண்டி வாகிலி) அதனுள் நுழைந்தால் விமானப் பிரதக்ஷிணம். இங்கு எங்கு திரும்பினாலும் ஒரே தங்கமயம். பங்காரு பாவி என்னும் தங்கக் கிணறு இருப்பது இங்கேதான். இந்தப் பிராகாரத்தைச் சுற்றினால் கர்ப்பக்கிருஹத்தின் மேல் கட்டப்பட்டிருக்கும் ஆனந்த நிலைய விமானம் ஒரே ஜோதிமயம். இரவிலும் பகலிலும் இந்தப் பொன்போர்த்த விமானத்தைப் புதுப்பிக்க முப்பத்திரண்டு லட்சம் ரூபாய் செலவாம். இந்தத் தங்க விமான தரிசனம் செய்த பின் தங்க வாயிலைக் (பங்காருவாகிலி) கடந்தால் கர்ப்பக்கிருஹம் வந்து சேரலாம். இந்தத் தங்க வாயிலில் இரண்டு தங்கமயமான துவார பாலகர்கள், தங்கச் சட்டங்களுக்குள்ளே நின்று கொண்டிருப்பார்கள். இவர்கள் கண் திறந்து பார்த்துவிடக் கூடாதே என்று கண்களை மறைத்து ஒரே பட்டையான இரு நாமம், இவர்கள் அனுமதி பெற்றே உள்ளே நுழைய வேண்டும்.

ஆம்! இந்த 'வேங்கடத்து மேவிய வேத நல்விளக்கை'க் கண்டுதொழ எவ்வளவோ வசதி. கட்டணங் கட்டி சேவை செய்கிறவர்களுக்குச் சலுகை அதிகம்தான். தரும தரிசனக்காரர்கள் எல்லாம் கியூ வரிசையிலே காத்துநின்றுதான் வேங்கடவனைக் காண வேண்டும். தரிசனத்திலே (ஆம், பிரசாதத்தில் அல்ல) கண்ணாயிருப்பவர்கள், ஒரு வியாழன் மாலை திருமலை சென்று இரவு ஏழு மணிக்கு ஒரு ரூபாய் கட்டணம் செலுத்தி 'ஆரத்தி' டிக்கட் பெற்று மலரால் அணி செய்திருக்கும் வேங்கடவனின் திருக்கோலத்தைக் கண்டு மகிழலாம். அன்றுதான் கண்களை மறைத்து எப்போதும் இட்டிருக்கும் நாமத்தை அகற்றி விட்டு, மெல்லியதான நாமம் ஒன்றை இட்டுக் கொண்டு அவனுமே கண் திறந்து குளிர்ந்த நோக்கோடு நம்மை அருள்பாலிப்பான். இதே பூலங்கி தரிசனத்தை விரும்பினால் மறுநாள் (வெள்ளிக்கிழமை) காலையிலும், சுப்ர பாதம், திருப்பள்ளி எழுச்சி எல்லாம் முடியும்வரை திருமாமணி மண்டபத்தில் காத்திருந்து, பின்னர் உள்ளே சென்று காணலாம்.

கலை ஆர்வம் கொண்டவர்கள் இந்தப் பூலங்கி சேவை, அல்லது தோமாலை சேவையினால் எல்லாம் திருப்தி அடைய

முடியாது. அணியும் பணியும் இல்லாமல், வேங்கடவனை அவனிருக்கும் வண்ணத்திலே கண்டு தொழ வெள்ளிக்கிழமை பகல் பத்து மணிக்குத் திரும்பவும் செல்ல வேணும். அன்றுதான் பணம் படைத்த பக்தர்கள் நூற்றுக் கணக்காகவும், ஆயிரக்கணக்காகவும் கட்டணங்கள் கட்டி, கர்ப்பூரக் கிண்ணி, கஸ்தூரிக் கிண்ணி என்றெல்லாம் ஏற்பாடுகள் செய்து திருமஞ்சனம் ஆட்டுவார்கள். அந்த பக்தர்கள் தயவால், அவர்களைச் சேர்ந்தவர்களில் ஒருவராய் உள் நுழைந்து விட்டால் எம்பெருமான் திருக்கோலத்தைக் கண்குளிரக் காணலாம். வக்ஷஸ்தலத்தில் ஸ்ரீதேவியை வைத்திருக்கும் அந்த ஸ்ரீனிவாசப் பெருமானைப் பாதாதி கேசபர்யந்தம் (ஏன் கேசபர்யந்தம்?) கேசத்துக்கும் மேலே நீண்டுயர்ந்திருக்கும் மணிமகுடபர்யந்தம் கண்டு தரிசிக்கலாம். அன்று இளங்கோ பாடினாரே

'பகை அணங்கு ஆழியும் பால்வெண்
சங்கமும்
தகை பெறு தாமரைக் கையில் ஏந்தி
நலம்கிளர் ஆரம் மார்பில் பூண்டு
பொலம்பூ ஆடையில் பொலிந்து
தோன்றிய
செங்கண் நெடுமால் நின்ற வண்ணம்'

என்று, அந்த வண்ணத் திருவுருவையே கண்டு தொழலாம். அழகினால் உயர்ந்துள்ள பெருமான் திருவுருவங்கள் பல பார்த்திருப்போம் நாம். ஆனால் இந்த வேங்கடவனது திரு உருவில் இருக்கும் காம்பீர்யம் அலாதியாக இருக்கிறது. பல்லவர் காலத்து விஷ்ணு சிலைகளில் உள்ள உத்தரீயம் இல்லை. நில உலகிலே வேங்கடவானனுக்கு இருக்கின்ற பெருமையோடு கலை உலகிலும் வேங்கடவனாகவே (அழிவற்ற ஐசுவர்யம் உடையவனாகவே) இருக்கிறான் அவன்.

• • •

தெய்வத் திருமலை வாழ் வேங்கடவன் ரிக்வேதத்திலேயே இடம் பெற்றிருக்கிறான் என்பர். திருமந்திரம் பாடிய திருமூலரும், திருவந்தாதி பாடிய கபிலதேவ நாயனாருமே இந்த வேங்கடத்து மேயானைப் பாடி இருக்கிறார்கள். தொண்டர் அடிப்பொடியைத் தவிர மற்றைய ஆழ்வார்கள் எல்லாரும் மங்களா சாஸனம் செய்திருக்கிறார்கள். தொண்டைமான் சக்ரவர்த்திதான் இந்தக் கோயிலை எடுப்பித்தவர் என்று வேங்கடாசலமாகாத்மியம் கூறும். பல்லவர், சோழர், பாண்டியர், யாதவர் முதலிய அரசர் பெருமக்கள் எல்லாம் கோயிலை விஸ்தரித்திருக்கிறார்கள் என்றாலும், விஜயநகர மன்னர்கள் காலத்தில்தான் கோயிலின் செல்வம் பல்கிப் பெருகி யிருக்கிறது. சாளுவ நரசிம்மனின் பெரிய பாட்டனான சாளுவ மங்கதேவனே விமானத்துக்குத் தங்கத்தகடு போர்த்தியிருக்கிறான். கிருஷ்ண தேவராயனும் அச்சுததேவராயனும் பல துறைகளில் கோயிலை வளப்படுத்தி இருக்கிறார்கள்.

• • •

இந்த வேங்கடவனைப் பற்றி ஒரு பெரிய விவாதம். இந்த மூர்த்தி முருகனே என்றும் பின்னர்தான் ராமானுஜர் அந்த மூர்த்தியைச் சங்கு சக்கரம் ஏந்த வைத்து ஸ்ரீனிவாசனாக மாற்றிவிட்டார் என்பர் ஒரு சாரார். இல்லை ஆதிமுதலே, அவன் ஸ்ரீனிவாசனே என்று அறுதி இட்டு உரைப்பார்கள். இது வேண்டாத விவாதம். தமிழ் நாட்டில் சைவ வைணவ வேற்றுமைகள் ஒரு காலத்தில் தலை தூக்கி நின்றிருந்தாலும் அந்த வேற்றுமைகளை யெல்லாம் மறக்கத் தெரிந்தவர்கள் தமிழ் மக்கள். 'உணர்வார் யார் உன்னுருவம் தன்னை?' என்று முதல் ஆழ்வார்களில் முதல்வரான பொய்கை யாழ்வார் மயங்கினாலும் பேயாழ்வாரோ,

தாழ் சடையும், நீள்முடியும்
ஒள் மழுவும் சக்கரமும்
சூழரவும், பொன் நாணும்
தோன்றுமால் – சூழும்
திரண்டருவி பாயும்
திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து

என்று முடிவு கட்டிச் சைவ வைஷ்ணவ ஒற்றுமையை நிலவச் செய்து வருகிறார். இது போதாதா, விவாதத்துக்கு முற்றுப் புள்ளி வைக்க.



உலகப்
பிரசித்திபெற்ற
தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக் குணமளிக்கும்

## பெப்ஸ் வில்லைகளை உட்கொண்டதால், பிராங்கைடிஸ் விரைவில் அகன்றது

தொண்டை, மார்பு உபாதைகளுக்கான பெப்ஸ் வில்லைகளை உட்கொண்டு தொண்டைப் புண், ப்ராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷத்தை சீக்கிரம் நிவர்த்தி செய்து கொள்ளுங்கள். பெப்ஸ் வில்லைகளைச் சுவைத்து, குணமளிக்கும் ஆவி போன்ற அதன் சத்து வேலை செய்வதை உணருங்கள் . . . வேதனையைக் குறைக்கவும் கிருமிகளை அகற்றவும் உதவியளிக்கிறது.




## பெப்ஸ்

தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணம் அளிக்கும்
வில்லைகள்

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

வி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்.

FPY-56-TAM

சோல் ஏஜண்டுகள்: தாதா அண்டு கம்பெனி
86, லைனியப்ப நாயக் தெரு, சென்னை - 8



# நரஸூ

காபி

அருந்தி அதன்
பிரத்யேகமான
ருசியை
அனுபவியுங்கள்

நரஸூஸ் மான்யுபாக்சரிங்
கோ. பிரைவேட் லிட்.,
சேலம் & சென்னை





# கண்கள் உறங்காவோ?

மாயாவி

## அத்தியாயம் 13

## பிரச்னை தீர்ந்தது

'தலைவலியும் காய்ச்சலும் தனக்கு வந்தால் தெரியும்' என்பார்கள். சச்சிதானந்தத்துக்கு அப்பொழுது தலைவலி வரவில்லை; காய்ச்சல் வரவில்லை. ஆயினும் மண்டையைப் பிளக்கும் தலைவலியைவிட அதிகமாக நெஞ்சு வலித்தது. தூக்கிவாரிப் போடும் குளிர் காய்ச்சலைவிட அதிகமாக உடல் குலுங்கியது.

அவர் கிராமத்துக்கு வந்து எட்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. இந்த எட்டு ஆண்டுகளில் அவர், பல ஆண்டு பட்டணவாசத்துப் பழக்க வழக்கங்களை யெல்லாம் மறந்து, தம்மை முற்றிலும் கிராம நாகரிகத்துக்கு ஏற்றவராக மாற்றிக்கொண்டு விட்டார். ஆதலால், இதே கேசவபுரத்தில் வீணையைப் போன்ற இளம் விதவைகள் சிலர் இருந்த போதிலும், அவர்களுக்குக் கிராமத்துச் சட்ட திட்டங்களும், கட்டுப்பாடுகளும் பலவிதங்களில் தலைவலியும் காய்ச்சலும் அளித்துவந்த போதிலும் அவர் அவற்றை உணர்ந்ததில்லை. இப்படி நடப்பது நியாயமா என்று எண்ணிக்கூடப் பார்த்ததில்லை. இன்று தமது மகள் அத்தகைய பழக்க வழக்கங்களில் ஒன்றை யொட்டி ஒதுக்கப்பட்ட போதுதான் அவருக்கு விதவைகளின் நிலை, சக்திமிக்க பூதக் கண்ணாடி மூலம் பார்ப்பது போல் அத்தனை பெரிதாகத் தெரிந்தது.

இவ்வளவுக்கும் இது ஒன்றும் அத்தனை மோசமில்லை என்றே சொல்ல வேண்டும். கிராமாந்திரத்துப் பழக்க வழக்கங்களில் இது ஒரு சாதாரண நிகழ்ச்சியே. நல்ல காரியம் ஒன்றை முன்னிட்டுப் புறப்படும் போது, சொந்தப் பெற்றோர்கூட 'மூலையில் வாடிய' தங்கள் மகளை உடன் அழைத்துச் செல்ல மாட்டார்கள். இதுவோ முற்றிலும் அயலார் சம்பந்தப்பட்ட விஷயம். சுந்தரம் அவன் பெற்றோரின் ஒரே செல்வன். அவர்களுக்குக் கண்ணுக்குக் கண்ணானவன். அவனுடைய நல்வாழ்வுதான் இனி அவர்களுக்குப் பெருவாழ்வு. அப்படியிருக்கும் போது, அவன் அந்த நல்வாழ்வில் அடியெடுத்து வைக்கப் போகும் நாளில் அதிர்ஷ்டம் கெட்டவள் ஒருத்தியை உடன் அழைத்துப் போகக் கூடாது என்று அவர்கள் கருதினால் அதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது?

இருந்தாலும் சச்சிதானந்தத்துக்கு என்னவோ, இந்தச் செய்தியைக் கேட்ட நிமிஷத்தில் தாம் பேரவமானத்துக்கு உட்படுத்தப்பட்டது போலவே தோன்றியது. தமது மகள் வேண்டுமென்றே கேவலப்படுத்தப்பட்டது போன்ற நினைவுதான் அந்த விநாடியில் ஏற்பட்டது.

ஆனால், பிறகு சிறிது சிந்தித்துப் பார்த்தபோது, தாம் அவ்வாறு கருதுவது முறையன்று என்பது அவருக்குப் புலனாயிற்று. ஆம், "என்ன தம்பி, நீங்க கூட இப்படிப் பண்ணிட்டீங்க?" என்று அவர் புஷ்பவனத்திடம் கேட்க முடியுமா? கேட்டால் புஷ்பவனம், "அத்தான்! நேற்று நீங்களும் நானும் இருக்கும்போது உங்க சொந்த வீட்டிலே, உங்க அக்காள் வீணையைப் பூவும் பிஞ்சுமாக இருக்கிற காய்கறித் தோட்டத்துக்குப் போகக் கூடாது என்று சொன்னதையும், அப்போ நீங்க வாயை மூடிக்கிட்டிருந்ததையும் மறந்துட்டீங்களா? வாழாமக் கெட்ட பொண்ணு அங்கே போனா உங்க தோட்டம் வளமாக இராது என்றுதானே அத்தான் அப்போ வாயை மூடிக்கிட்டு இருந்தீங்க! உங்களுக்கு உங்க தோட்டத்துக்கு மேலே இருக்கிற கரிசனம் கூடவா எங்களுக்கு எங்க மகன் மேலே இல்லாமப் போயிடும்!" என்று சொல்லுவாரே; அதற்குச் சச்சிதானந்தம் என்ன பதில் சொல்லிச் சமாளிக்க முடியும்?

தவிர, சொந்த வீட்டிலேயே வீணை 'விதவை — விதவை' என்று சுட்டிக் காட்டப்பட்டு வருவதாக இப்பொழுதுதானே அவர் புஷ்பவனத்திடம் கூறி வருந்தினார்; அந்நிலையில் மரகதத்தம்மாள் ஒரு நல்ல காரியத்தை யொட்டி அவளை அவ்வாறு சுட்டி ஒதுக்கியதை அவர் பெரிதுபடுத்திப் பேச முடியுமா?

ஆகையால் அவர் இதைப் பற்றி நினைத்து வருந்திப் பயனில்லை. அவர் மகள்



எத்தனைதான் படித்தவளாக இருந்தாலும், எத்தனைதான் கிராமத்துக்கே உயிரூட்டும் வைத்தியத் தொழில் புரியப் போகிறவளாக இருந்தாலும், அவள் வாழ்விழந்தவள் என்பதை இங்கு எவரும் மறந்து விட மாட்டார்கள்; வாழ்விழந்தவர்களுக்கான கட்டுப்பாடுகளை அவள் விஷயத்தில் தளர்த்தி விடவும் மாட்டார்கள். நேற்று வீட்டில் அவளுக்கு ஒரு கட்டுப்பாடு விதிக்கப்பட்டது. இன்று நெருங்கிய நண்பர் ஒருவர் வீட்டில் அவள் ஒதுக்கப்பட்டிருக்கிறாள். நாளை ஊரெல்லாம் அதைச் செய்யும். அதற்காக அவரோ, அவர் மகளோ பொருமிப் பயனில்லை; வருந்திப் பயனில்லை.

இதையெல்லாம் ஆழ்ந்து ஆராய்ந்த போது சச்சிதானந்தத்தின் மனம் சமாதானம் அடைந்துவிட்டது. எனவே சொன்னார்: "ஆமாம் தம்பி! நான்கூட அதை மறந்துதான் போயிட்டேன். இப்போ என்ன? இன்னைக்கு இல்லாட்டி நாளைக்கு சுந்தரம் அவளைக் கூட்டிக்கிட்டுப் போகட்டுமே!"

புஷ்பவனம் மனப்பூர்வமாக விசனத்துடன் பேசினார்: "என்னவோ அத்தான், எனக்கு இதெல்லாம் பிடிக்கவே இல்லீங்க. இருந்தாலும் நான் என்ன செய்யறது, சொல்லுங்க. சுந்தரம் கூட இந்த மாதிரி நினைக்கிறது சுத்தப் பைத்தியக்காரத்தனம் என்று அவன் அம்மாகிட்டே சண்டை போட்டான். ஆனால் பாருங்க, இன்னைக்கு அவன் இவளைக் கூட்டிக்கிட்டுப் போய், நாளைக்கு வேறே ஏதாச்சும் காரணத்தாலே அவன் வேலைக்குப் பாதகம் வந்தாக்கூட ஊர்க்காரங்க வீணாவின் தலையைத்தான் போட்டு உருட்டுவாங்க. அதுக்காகத்தான் அவன்கிட்டே, ஊர் வளமையை மீறி நடந்துக்கிடக் கூடாதுன்னு கண்டிக்கச் சொல்லிட்டு, நீங்க அவளைத் தவறா நினைச்சுடக் கூடாதுன்னு நானே நேரிலே சொல்லிட்டுப் போக வந்தேன். வரேங்க; சுந்தரம் காத்துக்கிட்டு இருப்பான். அவளை நல்ல பொழுது பார்த்து அனுப்பணும். வீணா குளிச்சுட்டு வந்ததும் ஏதாச்சும் சாக்கு-போக்கு சொல்லிடுங்க."

தாம் வந்த காரியத்தை முடித்துக்கொண்டு புஷ்பவனம் திரும்பிச் சென்றார். இனிமேல் வீணாவிடம் பொய் சொல்லிச் சமாளிப்பதோ, அல்லது உண்மையைச் சொல்லிச் சமாதானப்படுத்துவதோ சச்சிதானந்தத்தின் பொறுப்பு. அவருக்கு ஏன் அந்தக் கவலை?

புஷ்பவனத்தின் தலை திரும்புவதற்காகவே காத்திருந்தவள் போல் தைலம்மாள் உடனே அங்கே தோன்றினாள். "பார்த்துக்கிட்டியா தம்பி? ஒன் மகளை நான் தாலியறுத்தவளின்னு சொல்லிட்டேன்னு அழுது ஆகாத்தியம் செய்தியே; இப்போ என்ன சொல்லுறே? ஏன், ஊர்க்காரங்ககிட்டேயும் ஒரு பாட்டம் அழுது பார்க்கிறதுதானே!" என்று அவள் ஏளனம் தொனிக்கக் கூறினாள்.

சச்சிதானந்தம் ஒன்றும் பேசவில்லை. தலையைக் கவிழ்த்தவாறு நெற்றிப் பொட்டை விரல்களால் அமுக்கிக் கொண்டார்.

தைலம்மாள் தொடர்ந்தாள்: "ஒன் மகள் ராசாத்தியாத்தான் இருக்கட்டுமே; அறுத்தவளை அறுத்தவள்னு ஊர் உலகத்திலே சொல்லாம இருக்க மாட்டாங்க, தம்பி! இனிமேலாவது அதை நல்லாத் தெரிஞ்சு வெச்சுக்கிடு."

சச்சிதானந்தத்துக்கு அவள் பேசப் பேச வேதனைதான் அதிகமாயிற்று. மற்ற விஷயங்கள் இருக்கட்டும். வீணாவின் புங்கனூர்க் காலனிப் பிரயாணத்தை நிறுத்தும்படி இப்பொழுது அவளிடம் கூற வேண்டுமே; சுந்தரம் அவளை அழைத்துப் போக வரமாட்டான் என்று சொல்ல வேண்டுமே. அதை அவர் எப்படிச் சொல்லுவார்? மரகதத்தம்மாள் சுந்தரத்தைத் தடை செய்து விட்டாள் என்பதை அவர் அவளுக்கு அறிவிக்க விரும்பவில்லை. பின்னால் அவள் அதைத் தெரிந்து கொண்டால் தெரிந்து கொள்ளட்டும். ஆனால் இன்று தம் வாயால் அதைக் கூறி, அதனால் அவள் அடையப் போகும் அதிர்ச்சியையும் மன வருத்தத்தையும் அவரால் காண முடியாது. ஆகையால் அதற்கு அவர் வேறு ஏதாவது ஒரு பொய்க் காரணத்தைத்தான் கூற வேண்டும். அந்தப் பொய்க் காரணத்துக்காக அவர் சிந்திக்க வேண்டும்

உடனே சிந்திக்க வேண்டும். இதோ இன்னும் சிறிது நேரத்தில் வினு குளித்து விட்டு வந்து விடுவான். நேற்றுப் போட்ட திட்டத்தின்படி புறப்படத் தயாராகி விடுவான். அதற்குள் அவர் ஏதாவது கற்பனை செய்தாக வேண்டும். ஆகவே அவர் தைலம்மாளை அனுப்பிவிட்டு இவ் விஷயத்தை நிம்மதியாகச் சிந்திக்கக் கருதி, "சரிதான், தைலம்மா; சும்மா தொண தொணத்துக்கிட் டிருக்காதே. போ, போய்க் காப்பியை எடுத்துக்கிட்டு வா" என்றார்.

அவள் உடனே போய்க் காப்பியை எடுத்து வந்து கொடுத்தாள். கொடுத்து விட்டுப் போய்விடுவாள் என்று நினைத்தார் சச்சிதானந்தம். ஆனால் தைலம்மாள் போகவில்லை. அவர் காப்பியைக் குடித்து முடிக்கும் வரையில் ஊஞ்சல் கம்பியைப் பிடித்தவாறு காத்திருந்தாள். பிறகு தம்ளரைக் கையில் வாங்கிக்கொண்டு, "சரி, இப்போ என்ன செய்யப் போறதாக உத்தேசம்?" என்று மீண்டும் பேச்சுக்கு அடி போட்டாள்.

"செய்யறதென்ன? இதையெல்லாம் சொல்லி வினு மனசை நோகடிக்கக் கிட்டு இருக்கிறதா? வேறே ஏதாச்சும் காரணம் காட்டிச் சுந்தரம் அவனைக் கூட் டிக்கிட்டுப் போக வசதிப்படலேன்னு சொல்லிவிட வேண்டியதுதான்."

"இதுதான் எனக்குப் பிடிக்கலே, தம்பி! இப்படி ஒண்ணு ஒண்ணை அவனுக்கு ஒளிச்சு வைச்சுக்கிட்டே போனு, என் னைக்குத்தான் அவன் தன்னைத் தெரிஞ்சுக் கிடறதாம்?"

"தெரிஞ்சுக்கிடறபோது தெரிஞ்சுக் கிடட்டும் அக்கா. ஆனால் என் வாயாலே ஒருநாளும் அவன் மனசு நோகும்படியான சேதிகளைச் சொல்ல மாட்டேன்."

"அட! நீ சொல்லாட்டி ஊர்க்காரங்க நாளைக்குச் சொல்லிக் காட்டிடப் போறாங்க. நீ மூடி மூடி வைச்சுட்டா தெரியாமலா போயிடும்? என்னமேனும் செய்துட்டுப் போங்க அப்பனும் மகனும். எனக்கு என்ன வந்தது? நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன்."

தைலம்மாள் முகத்தை வலித்து விட்டுப் போய்விட்டாள். சச்சிதானந்தம் சிந்தனையில் ஆழ்ந்தார். ஆனால் வினு அவரை அநாவசியமாக அதிக நேரம் மண்டையை உடைத்துக் கொள்ள விடவில்லை. தந்தை தன்னிடமிருந்து நடந்த வற்றை மறைக்கத் தவிப்பதை அவன் விரும்ப வில்லை. எனவே அவன் தாழ்வாரத்தி லிருந்து கூடத்துக்கு வந்தான்.

"அதுக்குள்ளே குளிச்சுட்டியா வினு?" என்றார் சச்சிதானந்தம்.

"நான் குளித்து விட்டு வந்து பத்துநிமிஷங்களுக்குமேல் ஆகிறது அப்பா. தாழ்வாரத்தில் தலையை உலர்த்திக்கொண் டிருந்தேன்."

"பத்து நிமிஷமாகத் தாழ்வாரத்திலா நின்னுக்கிட்டிருந்தே?" என்று மனம் பதறினார் அவர்.

"ஆமாம்; புஷ்பவனம் மாமா சொன்ன செய்தியையும் கேட்டேன். அப்பா! இதற்காக நீங்கள் வருத்தப்படாதீர்கள். என் நிலையை நான் நன்கு உணர்ந்து கொண்டு விட்டேன். சுந்தரம் என்னை அழைத்துச் செல்ல வில்லை என்பதற் காக நான் சிறிதும் வருந்தவில்லை. நானே வருந்தாதபோது நீங்கள் ஏன் அப்பா வருந்துகிறீர்கள்?"

சச்சிதானந்தம் அவனைத் தேற்ற வேண் டியது போக, அவன் அவரைத் தேற்றி னன். "போங்கள்; போய்க் குளித்து விட்டு உங்கள் பூஜை-புனஸ்காரத்தைக் கவனியுங்கள். புங்கனூற்றுக் காலனிக்கு நாளைக்கோ, இல்லாவிட்டால் இன்னொரு நாளோ போய்க் கொண்டால் ஆயிற்று. எழுந்திருங்கள் அப்பா!"

அவன் அவர் கையைப் பிடித்து ஊஞ் சலிலிருந்து எழுப்பிக் கொல்லைப்புறம் அனுப்பிவிட்டுத்தான் நின்றான்.

பிறகு அவன் அடுக்களையிலிருந்த அத்தையிடம் சென்றான். "அத்தை! இனிமேல் என் விஷயமாக நீங்களும் அப்பாவும் சண்டை போட்டுக் கொள்ளா தீர்கள். நான் எப்படி நடந்து கொள்ள வேண்டுமோ, அதை அவ்வப்போது எனக்குச் சொல்லித் தாருங்கள். இந்த ஊரார் என்னைப் பற்றி ஒரு வார்த்தை கூடக் குறை சொல்லாதபடி நடந்து கொள்ளுகிறேன்" என்று அவளிடமும் சொன்னான். அடுப்படிக்குச் சென்று காப்பியைக் கலந்து குடித்துவிட்டுத் தன் அறைக்குத் திரும்பி வந்தான்.

மேசையின் இழுப்பறையில் வைத் திருந்த புகைப்படத்தை எடுத்து, அதன் சட்டம், அட்டை முதலியவற்றை அகற் றத் தொடங்கினான். அகற்றிய பிறகு புகைப்படத்தைக் கையில் எடுத்துக் கொண்டு, "என் அன்பே! இளமைப் பிராயத்தில் உங்களுக்கு மாலையிட்டு,



உடனே அதை இழந்துவிட்ட போதிலும் என்றும் உங்கள் மனைவியாகவே இருந்து உயிர்விட விரும்புகிறேன். இன்றிருக்கும் இதே மன உறுதி என்னிடம் என்றும் குன்றாதிருக்க அருள் பாலியுங்கள்" என்று மனமுருக வேண்டிக் கொண்டாள். பின்னர் அந்தப் புகைப் படத்தைக் கண்களில் ஒற்றிக் கொண்டு தன் கைப் பைக்குள் பத்திரப்படுத்தினாள். அவள் கைப் பையை மூடுவதற்கும், மாலா அங்கே வருவதற்கும் சரியாக இருந்தது.

"என்ன மாலா, காலையில் ஆற்றங் கரைக்குப் போனபோது என்னையும் எழுப்பியிருக்கக் கூடாதா?" என்று அவளிடம் பேச்சுக் கொடுத்தாள் வீணா.

"உங்களை எழுப்பிக் கேட்கலாமென்று தான் வந்தேன், அக்கா. ஆனால் அந்தச் சமயம் பார்த்துச் சித்திரக் குள்ளன் தாணுவதி உள்ளே வந்து கொண்டிருந்தான். ஆகையால் நான் மட்டும் குடத்தை எடுத்துக்கொண்டு போய் விட்டேன்."

"தாணுவதியிடம் அத்தனை பயமா உனக்கு?"

"பயமில்லை; அருவருப்பு! அவன் பார்வையையும் பிதற்றலையும் யார்தான் சகிக்க முடியும்? இந்த ஊரில் எந்த வயசுப் பெண்ணும், தங்கள் சொந்த வீட்டில்கூட அவன் எதிரே வர மாட்டாள். ஆனால் அந்தப் புத்திசாலிதான் அம்மாவுக்கு மதிமந்திரி. என்ன சொன்னாலும் அவளுக்குத் தெரிவதில்லை. 'நம் வரையில் நல்ல பிள்ளையடி!' என்பாள். நல்ல பிள்ளையாம், நல்ல பிள்ளை! நல்ல பாம்பல்லவா அவன்! பாம்பு பால் வார்த்தவரையும் கடிக்கத் தயங்காது என்பது ஏனோ அம்மாவுக்குத் தெரியவில்லை. அதனால்தான் அக்கா, நேற்றே உங்களை எச்சரித்தேன்."

"அப்படிப்பட்டவனிடம் என்னை மாட்டிக் கொள்ள விட்டுவிட்டு நீ மட்டும் தப்பிக் கொண்டாயாக்கும்!"

"அட பாவமே! உங்களை ரொம்பத் தொந்தரவு படுத்திவிட்டானோ?"

"இல்லை, மாலா! சும்மா விளையாட்டுக்குச் சொன்னேன்" என்று சிரித்தாள் வீணா. பிறகு, "ஆமாம், நீதான் காலையிலேயே ஆற்றங்கரைக்குப் போய்விட்டாயே; இவ்வளவு நேரம் ஏன் ஆயிற்று, திரும்பி வர?" என்று கேட்டாள்.

"வரும் வழியில் நம் சுந்தர அத்தான் வீட்டில் சிறிது நேரம் தங்கிவிட்டேன். அதுதான் தாமதம். அவர் இன்று வேலையை ஒப்புக்கொள்ளப் போகிறார், இல்லையா? ஒன்பது மணிக்கு நல்ல நேரமாம்; புறப்பட வேண்டுமாம். அதற்குள் சமையலை முடித்து அத்தானுக்குச் சாப்பாடு போட்டுவிட வேண்டுமென்று மரகத அத்தை திணறிக் கொண்டிருந்தாள். அவளுக்குக் கொஞ்சம் உதவி செய்து விட்டு வந்தேன்."

சுந்தரத்தின் பேச்சு எழுந்ததும் வீணாவின் உள்ளம் ஒருகணம் சுருங்கிற்று. வாக்களித்தபடி நம்மை அழைத்துப் போக முடியாமற் போனதற்காக அவர் வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறாரோ, என்னவோ. என்று எண்ணிய அவள், அதை அறிந்து கொள்ளுவதற்காக, "சுந்தரத்தைப் பார்த்தாயா, மாலா? உற்சாகமாக இருக்கிறாரா?" என்று கேட்டாள்.

"உற்சாகம் இல்லாமல் இருக்குமா, அக்கா? முதன்முதலாக வேலையை ஒப்புக் கொள்ளப் போகிறார். அதிலும் இன்ஜினியர் வேலை. அடி அம்மா! அவருக்குப் பெருமையும் சந்தோஷமும் தலையே கொள்ளவில்லை! எப்பொழுது என்னைப் பார்த்தாலும் நாலு வார்த்தை பேசாமல் இருக்கமாட்டார். இன்று பேசவே இல்லையென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். ஆமாம், உங்களுக்கு என்ன சந்தேகம்? ஏன் அவர் உற்சாகமாக இருக்கிறாரா என்று கேட்டீர்கள்?"

அவள் காரணத்தை மாலாவிடம் கூறிவிட்டு, "ஒருகால் அதற்காக உற்சாகம் இழந்து இருக்கிறாரோ என்று கேட்டேன்" என்றாள்.

"ஐயோ அக்கா, அக்கா!" என்று மாலா தன் அரிசிப் பற்கள் தெரியச் சிரித்தாள். "ஆண்பிள்ளைகளுக்கு இதெல்லாம் உற்சாக மூட்டும் விஷயம் அக்கா; உற்சாகத்தைக் குறைக்கும் விஷயம் இல்லை. அந்த எண்ணம் கொண்டிருந்தால் அதை அடியோடு விட்டு விடுங்கள். பெண்களைக் கொசுவாக நசுக்குவதில் இன்பம் காணுவதல்லவா ஆண் சமூகம்!"

"சே! சே! இதெல்லாம் என்ன பேச்சு மாலா! மற்றவர்கள் எப்படி இருந்தாலும் நம் சுந்தரம் அப்படிப்பட்டவர் இல்லை. நேற்று என் போன்றவர்களைப் பற்றிய பேச்சு தற்செயலாக எழுந்த போது, எங்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளையெல்லாம் நினைத்து அவர் எவ்வளவு கொதித்தார், தெரியுமா?"

மாலா மீண்டும் நகைத்தாள். "அட, பைத்தியக்கார அக்காவே! அதெல்லாம் ஆண்களின் சாணக்கிய தந்திரம் அக்கா. பிறர் கொடுமை செய்யும்போது கொதிப்பார்கள்; முதலைக் கண்ணீர் வடிப்பார்கள். தங்கள் விஷயம் வந்துவிட்டால் அதைவிடப் பெரிய கொடுமையைச் செய்யக்கூடத் தயங்கமாட்டார்கள். அது இந்த அத்தானாக இருந்தாலும் சரி; வேறு ஒரு பொத்தானாக இருந்தாலும் சரி."

"சுந்தரத்தைப் பற்றி நீ அப்படி நினைப்பது தவறு, மாலா! அவருடன் நான் இரண்டு நாட்களே பழகியிருக்கிறேன். ஆயினும் அவர் உன்னதமான உள்ளத்தை நன்கு அறிந்து கொண்டு விட்டேன்."

"என்ன அறிந்து கொண்டு விட்டீர்கள்? உங்களை அழைத்துப் போவதாக வாக்களித்து விட்டு, ஏதோ அர்த்தமற்ற கட்டுப்பாட்டைத் தன் அம்மான் விதித்தாரென்று அடங்கி ஒடுங்கி விட்டாரே, இதுதான் உன்னதமான உள்ளமோ? அவர் இதற்காகத் துளிக்கூட வருந்தியவராகக் காணப்படவில்லையே அக்கா! எத்தனை உற்சாகம்! முகத்தில் எத்தனை



மேற்கத்திய ரயில்வே டெலி கம்யூனிகேஷன் இன்ஸ்பெக்டர் திரு கே. ஆர். பார்த்தசாரதிக்கும், சௌ. மைதிலிக்கும் திருமணம் விமர்சையாக நடந்தது.



பாபநாசம் நியூஸ் ஏஜண்ட் திரு வி. நாராயணசாமி அவர்களின் புதல்வி சௌ. அலமேலுவுக்கும் திரு ஆர். சத்தியமூர்த்திக்கும் விவாகம் நடந்தது.

களிப்பு! சினிமாப் பாட்டைச் சீட்டி அடித்துக்கொண்டு அவர் காரை அழுத்தி அழுத்தித் துடைத்துக் கொண்டிருந்த காட்சியை நீங்கள் பார்க்க வில்லையே!"

"இதற்கெல்லாம் வருத்தினால் நடக்குமா மாலா? அவர் என்ன வேண்டுமென்று.........?"

"என்ன சொன்னீர்கள்? வருத்தப் படக் கூடாதா? ஆமாம், வருத்தப்படக் கூடாதுதான். தைரியமாக முன் வந்து இந்தக் காரியத்தைச் செய்ய முடியாதவர்களைக் குறித்து வெறுமனே வருத்தப் பட்டுமட்டும் என்ன பலன்? நானாக இருந்தால் என்ன செய்வேன், தெரியுமா?"

"என்ன செய்வாய்?" என்று குறும்பாகச் சிரித்தபடி கேட்டான் வீணு.

"'நீங்களுமாச்சு! உங்கள் கட்டுப்பாடுமாச்சு!' என்று துணிந்து உங்களைக் கூட்டிக் கொண்டுதான் போவேன். அல்லது......"

அவன் முடிக்கவில்லை; வாசலில் 'சர்' ரென்று ஒரு கார் வந்து நின்றது. அவர்கள் சன்னல் வழியே பார்த்துக் கொண்டிருக்கையில் சுந்தரம் அதிலிருந்து இறங்கி, "மாமா! மாமா!" என்று அழைத்தவாறு உள்ளே வந்தான்.

வீணுவும் மாலாவும் ஒருவரையொருவர் நோக்கினர். "இப்பொழுது திருப்தி ஆயிற்று, மாலா?" என்று கேட்டுவிட்டு வீணு அவள் கையைப் பிடித்துக்கொண்டு கூடத்துக்கு நடந்தான்.

சச்சிதானந்தம் குளித்து, உடை உடுத்துப் பூசைக்குச் செல்லத் தயாராகிக் கொண்டிருந்தார். சுந்தரம் அவரிடம் வந்து, "வீணு எங்கே மாமா? இன்னும் தயாராகவில்லையா அவன்?" என்றான்.

சச்சிதானந்தம் திடுக்கிட்டார்! "எங்கே தம்பி?" என்று வியப்புடன் அவன் முகத்தை நோக்கினார்.

"அணை ஸ்தலத்துக்கு" என்றான் சுந்தரம். பிறகு வீணு வருவதைப் பார்த்து விட்டு, "என்ன, புறப்படலாமா?" என்று கேட்டான்.

"நான் இன்று அங்கு வரவில்லை, மிஸ்டர் சுந்தரம்!"

"வரவில்லையா! ஏன்?"

"இன்னைக்கு அவளுக்கு நாள் நல்லா இல்லே, சுந்தரம்! அதனாலேதான் போக-



திரு ஸ்ரீ கண்டன் பி. எஸ்ஸி.க்கும் சௌ. சரோஜாவுக்கும் டில்லி நகரில் விமர்சையாகத் திருமணம் நடைபெற்றது.



பம்பாய் வருமானவரி அதிகாரி திரு கிருஷ்ணமூர்த்திக்கும் சௌ. மாலதிக்கும் திருமணம் சிறப்பாக நடந்தது.



பம்பாய் டை. பேரண்டைச் சேர்ந்த திரு டி. வேதாந்தம் அவர்களின் புதல்வர் திரு கண்ணனுக்கும் ஆண்டாளுக்கும் விமரிசையாக விவாகம் நடந்தது.



ஜெமினி கலர் லாபரேட்டரியைச் சேர்ந்த திரு ஆர். வெங்கட்டராமன் பி. காம். அவர்களுக்கும் செள. ஜயலக்ஷ்மிக்கும் சென்னையில் விமரிசையாக விவாகம் நடைபெற்றது.

வேண்டாமென்று நிறுத்தி வைச்சிருக்கேன்" என்று புளுகினார் சச்சிதானந்தம்.

சுந்தரத்துக்கு இங்கே ஏதோ நடந்திருப்பதாகச் சந்தேகம் தட்டிவிட்டது. காலையில் அவன் தன் தாயிடம் வீணாவை அழைத்துப் போவது பற்றிச் சண்டையிட்டது என்னவோ மெய்தான். ஆனால் அவள் விடாப்பிடியாக இருக்கவே, 'இவளைச் சமாதானப்படுத்தி வீணாவை அழைத்துச் செல்ல முயற்சி செய்வது வீண்தான். இப்போதைக்கு இவளிடம் சரியென்று சொல்லிவிட்டு, போகிற போது அவளை அழைத்துச் சென்று விடுவோம்' என்று அவன் திட்டமிட்டு வைத்திருந்தான். அந்தத் திட்டத்தின்படித்தான் இப்பொழுது இங்கே வந்திருந்தான். ஆனால் இது என்ன? இவர்கள் விழிக்கிற விழிப்பும், சொல்லுகிற காரணமும் சரியாகத் தென்படவில்லையே!

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டே உள்ளேயிருந்து வந்த தைலம்மாள் உண்மையைக் கக்கி விட்டாள். "ஏண்டா தம்பி, ஒங்க அம்மா ஒரு நல்ல காரியத்துக்குப் போகும்போது இவளைக் கூட்டிக்கிட்டுப் போக வேண்டாமின்னு சொல்லியிருக்காள்; நீ பாட்டுக்கு 'வா வா'ன்னு கூப்பிட்டுக் கிட்டிருக்கிறியே!"

"ஆமாம், மிஸ்டர் சுந்தரம். உங்கள் அப்பாவே இங்கே வந்து விஷயத்தைச் சொல்லி, என்னை நீங்கள் நாளைக்குக் கூட்டிப் போக ஏற்பாடு செய்வதாக வாக்களித்து விட்டுப் போயிருக்கிறார்" என்று வீணாவும் சொன்னாள்.

இதைக் கேட்டதும் சுந்தரம் திடுக்கிட்டான். தன் தாயின் போக்குக்கு ஒருபடி மேலே போய், தன் தந்தை இப்படி இவர்களிடம் வந்து முன்னேற்பாடு செய்துவிட்டுப் போயிருந்தது அவனுக்கு அதிர்ச்சியை அளித்தது மட்டுமன்று; ஆத்திரத்தையும் கிளப்பியது.

"சரி, சரி; அதுக்காகத்தான் மாமா நான் கல்யாணமில்லையென்று பொய் சொன்னீங்களா!" என்று அவன் ஏளனம் தொனிக்கக் கூறி விட்டுப் பிறகு வெறி பிடித்தவன் போல் கத்த ஆரம்பித்து விட்டான்: "இது என்ன மாமா அநியாயம்! உங்கள் கண் முன்னே உங்கள் மகளுக்கு ஓர் அர்த்தமற்ற அநீதி



ஜம்ஷெட்பூர் திரு ஆர். வி. அய்யரின் புதல்வர் திரு ராமசாமிக்கும் செள. சரஸ்வதிக்கும் திருமணம் நடந்தேறியது.



ஆறுமுகநேரி தாங்கதாரா கெமிக்கல் ஒர்க்ஸின் ரஸாயன என்ஜினியர் திரு பி. என். சீனிவாசன் செள. சந்திராவை மணந்தார்.

இழைக்கப்படுகிறது; அதைத் தகர்க்க வேண்டிய நீங்களே, உடந்தையாக இருந்து பொய் சொல்லுகிறீர்களே! இதுதான் இருபத்துமூன்று வருஷங்களுக்குப் பிறகு உங்களிடம் வந்துள்ள மகளிடம் நீங்கள் காட்டும் பரிவா? இதுதான், விதியினாலும், மனிதரின் மதியின்மையாலும் கொடுமைப் படுத்தப்படும் மகளுக்கு ஒரு தந்தை செய்யும் உதவியா? துரோகம் மாமா! சமுதாயத்தின் கொடுமைகளைவிட பெரிய கொடுமை! உங்களைப் போன்ற நல்ல இதயமுடையவர்கள், அறிவு மிக்கவர்கள், வாழ்வை இழந்த அபாக்கியவதிகளுக்கு உலகம் செய்யும் தீமைகளை நன்கு உணர்ந்தவர்களே, அத்தீமைகளை வளர்க்க உதவினால், என்று மாமா நம் சமூகம் உருப்படும்? எப்பொழுது மாமா நம் சமுதாயத்தின்மீது படிந்துள்ள இந்தத் துர்ப்பாக்கியக் கறை மாறும்?" சுந்தரத்தின் குரல் தழ தழத்தது; எந்த நிமிஷமும் அவன் அழுதுவிடுவான்போல் இருந்தது.

சச்சிதானந்தம் அவன் அருகில் சென்று முதுகைத் தட்டிச் சமாதானப்படுத்தினார். "நீ சொல்கிறதெல்லாம் நகரத்துக்குச் சரிதான், சுந்தரம்! ஆனால் கிராமத்திலே நாலு பேர்கள் எப்படி நடந்து கொள்ளுகிறாங்களோ, அப்படித்தானே நாமும் நடந்து கொள்ளணும்?" என்றார் அவர்.

"நீங்கள் அந்த நாலு பேருக்கு எதிராக நடக்க முடியாதென்றால் நடக்க வேண்டாம். ஆனால் எனக்கு என் மனச்சாட்சிதான் பெரிது; நான் அதற்கு எதிராக நடக்க முடியாது. இன்று எவ்வளவு நேரமானாலும் காத்திருந்து வீணாவைக் கூட்டிக் கொண்டுதான் போவேன்."

"ஆனால் நான் இன்று உங்களுடன் வர விரும்பவில்லை; என்னை மன்னித்துக் கொள்ளுங்கள் மிஸ்டர் சுந்தரம்! நேற்றே உங்களிடம் சொன்னேன். 'நான் இங்கே புரட்சி செய்ய வரவில்லை; அமைதியாக வாழ வந்திருக்கிறேன்' என்று. அதை உங்களுக்கு மீண்டும் நினைவூட்டுகிறேன்."

சுந்தரம் கணநேரம் அவன் முகத்தை ஏமாற்றத்துடன் பார்த்தான். பிறகு "அப்படியானால் நானும் வேலையை ஒப்புக் கொள்ளப் போவதில்லை" என்று கூறிவிட்டுத் திரும்பி நடந்தான்.

சச்சிதானந்தம் அவன் கையைப் பிடித்து நிறுத்தினார். "இது என்ன தம்பி, நீ படிச்ச பிள்ளை! உலகமடை தெரிஞ்ச பிள்ளை! இப்படிப் பிடிவாதம் பிடிக்கலாமா? வீணாவை நாளைக்குக் கூட்டிக்கிட்டுப் போ, தம்பி!"

"முடியாது மாமா. நான் அவளுக்கு நேற்றே வாக்களித்திருக்கிறேன், இன்று அழைத்துச் சென்று சீப் இன்ஜினீயருக்கு அறிமுகப்படுத்தி, டிஸ்பென்ஸரிக்கு இடம் வாங்கித் தருவதாக. அந்த வாக்குறுதியை என்று காப்பாற்ற முடிகிறதோ, அன்றுதான் நான் வேலையை ஒப்புக்கொள்ளப் போகிறேன்."

"ஏன் சுந்தரம், அப்படியானால், வீணாவைக் கூடக் கூட்டிக்கிட்டுப் போய், அவளை ஊர்வம்புக்கு ஆளாக்குகிறதுதான் உன் நோக்கமா?" என்று அவர் கேட்டார்.

"ஐயையோ! அப்படி ஒன்றும் இல்லை, மாமா! வாக்களித்தபடி அவளை இன்ஜினீயருக்கு அறிமுகப்படுத்தி......"

"டிஸ்பென்சரிக்கு இடம் வாங்கிக் கொடுக்கணும்; அதுதானே உன் எண்ணம்? அதுதானே உன் ஆசை?"

"ஆமாம், அதை வாக்களித்தபடி இன்றே நான் செய்ய வேண்டும்."

"செய்துக்கிடு சுந்தரம். ஆனா அதுக்கு வீணா உன் கூடத்தான் வரணும் என்கிற கணக்கில்லையே! நீ முன்னாடிப் போ. இன்னும் அரை மணி நேரத்திலே அவளை வண்டியிலே அங்கே அனுப்பிடறேன். இப்போ சரிதானே தம்பி?"

வக்கீலிடம் வாயைக் கொடுத்து விட்டு மாட்டிக் கொண்டதை உணர்ந்து சுந்தரம் வெட்கினான். "சரி, மாமா! வீணாவை எதிர்பார்த்து அங்கே காத்துக் கொண்டிருப்பேன். அவள் தலையைக் கண்ட பிறகுதான் பிரதம இன்ஜினீயரின் அலுவலகத்துக்குள்ளே நுழைவேன்" என்று கூறிவிட்டு வெளியே நடந்தான்.

சச்சிதானந்தமும் அப்போதைக்கு அவனைச் சமாதானப்படுத்தி அனுப்பி விடும் எண்ணத்தோடு இப்படிச் சொல்லவில்லை. பெரிய பிரச்னையாகக் கிளம்பிவிட்ட இந்த விஷயத்தை அவர் சாதுரியமாகச் சமாளித்து விட்டார். ஆமாம், விதவைப் பெண் ஒருத்தி, புதிதாக வேலையை ஒப்புக் கொள்ளச் செல்லும் தங்கள் மகனுடன் போக வேண்டாம் என்பதுதான் புஷ்பவனம் தம்பதிகளின் நோக்கமேயன்றி, அவள் அவனுக்கு உதவக் கூடாது என்பது அவர்கள் நோக்கமல்லவே. இப்பொழுது அவர்கள் நோக்கமும் நிறைவேறுகிறது; சுந்தரத்தின் நோக்கமும் நிறைவேறுகிறதல்லவா?

சொன்னபடி ஒரு மணி நேரத்துக்குப் பிறகு அவர் வீணாவை வண்டியில் அனுப்பிவிட்டு, வாடகை வண்டி ஒன்றை அமர்த்தி ஆஸ்பத்திரிச் சாமான்களை ரயிலடியிலிருந்து ஏற்றி வருவதற்காகப் புறப்பட்டுச் சென்றார்.

அவர்கள் இருவரும் போய்ச் சிறிது நேரமானதும் தாணுவதி, ஜோசியர் அம்பலவாணக் குருக்களைக் கூட்டிக் கொண்டு குடு-குடுவென ஓடி வந்தான். அவன் வந்தசமயத்தில் வீணாவும் இல்லை; சச்சிதானந்தம் பிள்ளையும் இல்லையே!

தையல்மாள் மூலம் விஷயத்தை அறிந்ததும் அவன் துள்ளிக் குதித்தான். "அட! கெடுத்துட்டீங்களே அத்தை, காரியத்தை" என்று கையை உதறிக் கொண்டு வெளியே கிளம்பினான்.

"எங்கே தம்பி? எங்கே வந்த காலோட புறப்பட்டுட்டீங்க?"

"ஒங்களுக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாத்தத்தான், அத்தை! அவங்களைக் காபந்து செய்ய வேண்டாமா? இப்பவே நானும் வண்டி கட்டிக்கிட்டு அணைக்குப் போறேன்" என்று கூறிவிட்டு அவன் தலைதெறிக்கவோடினான்! (தொடரும்)



உங்களால்
செலவு
செய்யக்கூடிய அளவிலேயே
அந்த
டீக்கான
ஆடை அலங்காரத்தைப்
பெறுங்கள்

உண்மையில் ஒவ்வொரு
வரும் புதிய ஸ்டான்டர்ட்
பாப்லின் ஷர்ட்
அணிந்துகொள்வதால்
மதிப்பாயும், மிடுக்காகவும்
தோன்றலாம்.
ஒவ்வொருவர் விருப்பத்
திற்கும் வாங்கும்
சக்திக்கும் தக்கபடி
ப்ளெயினாகவும்,
பல கலர்களிலும் இவை
கிடைக்கின்றன




மற்றும் கோட்டுகள் . லாங்க்ளாத் . வோயில் கிளாத்
பாப்லின் பிரின்ட்ஸ் சாயந்தோய்ந்த, பின்டெட்
க்ரேப் குடைகளுக்கான துணி . புக் பைன்டிங் துணி



தி ஸ்டான்டர்ட் மில்ஸ் கம்பெனி லி.

நியூ பிரபாதேவி ரோடு, பம்பாய்—28

SISTA'S-SM-21-TAM



# மயில்சாமியின் தேவை

## தி. ஜானகிராமன்

"மயில்சாமி வந்திருந்தான்!"

"மயில்சாமியா! எப்ப? மாடியிலே வத்தல், ஊறுகாய் ஏதாவது உலத்திருக்கியா?" எடுத்துவையி, மழை வறப்போவுது."

"அதுக்கா? மயில்சாமி என்ன வாத்தியாரா? சனி, ஞாயிறு சதுர்த்தி, அம்மாசி, மாசிமகம்னு நினச்சப்பல்லாம் வீடு மேலே இடறி உளற துக்கு! மூணு மாசமாச்சாம், ஒரு மணி நேரம் சேந்தாப்பல தூங்கி!"

"சோளியன் கண்ணு சும்மா மூளிக்குதா? ஒரு எமைகோட்டுக்கு நூறு ரூபா மேனிக்கில்ல பாங்கியிலே ஏறுது."

"வாரிக் கொடுக்கிறதுப்பான், போன ஜன்மத்துலெ. இப்ப வருது. யாரு தடுக்க முடியும்?"

"இப்ப யார் தடுத்தாங்க?...என்னத்துக்கு வந்தான்?"

"சும்மாத்தான் அண்ணின்னான். அரை மணி போல் இருந்தான். அப்புறம் அவசரமாப் போகணும், ஒம்பது மணிக்கு 'ஷூட்டிங்'னு போயிட்டான். காபி கலந்து குடுத்தேன். சாப்பிட்டான். எல்லாம் சொன்னான். அப்புறம் அண்ணியைக் காரிலே ஏத்திக்கிட்டு மார்க்கட்டு வரைக்கும் கொண்டு போய் விட்டான்... போனான்."

"கார் சவாரியும் ஆயிடிச்சா!"

"புதுக் காராம். நீங்க வந்தாத்தான் ஆச்சன்னான். என்ன செய்யறது?"

"புதுக் காரா?"

"பெரிசு இவன் வைச்சிட்டிருக்கானாம்."

"பெஞ்சாதிக்கு ஒண்ணு வாங்கினான். அதுவும் புதுசுதான்."

"அதையும் விக்கலே. சின்ன துரையைப் பள்ளிக்கூடத்திலே போட்டிருக்கான்லே, அது வந்து ஒரு சின்னக் காராயிருந்தாத்தான் பள்ளிக்கூடம் போவேன்னு அடம் பண்ணிச்சாம். அதுக்காக வாங்கிப்புட்டானாம். அதைத்தான் அண்ணன் இட்ட காமிக்கணும்னு வந்தானாம்."

"பலேடாய்யா! மூணு மாசத்துக்கு மூணு காராச்சு. செஞ்சியிலேருந்து ஒரு பசு மாடு வாங்கியிருக்கிறான். அதுக்கு வைக்கல், பருத்திக் கொட்டை, புண்ணாக்கு வாங்கியாற அடுத்த மாசம் ஒரு லாரி வாங்கிடுவான்."

"ஏன் நிறுத்துப்பிட்டீங்க?"

"எல்லாம் சொன்னான்னு சொன்னியே, என்ன சொல்லியிருப்பான்னு ஊகிச்சுக்கிட்டிருந்தேன்."

"உங்களைப் போன தடவை பாத்தப்புறம் இன்னும் காற்பது படத்துக்குக் கையெழுத்துப் போட்டிருக்கானாம். இப்ப நூறாவது படமாம்! இன்னிக்குக்

காலமே லட்ச ரூபாய்க்கு ஒரு படத்துக்குக் கையெழுத்துப் போட்டு அட்வான்ஸ் வாங்கினானாம். அதையும் அண்ணன் கிட்ட சொல்லணும்னு வந்தானாம். முதத் தடவையா லக்ஷ ரூபாய்க்குக் கையெழுத்துப் போட்டிருக்கானில்ல!"

"சரி, அப்புறம் என்ன சொன்னான்?"

"நாலாம் மாடியிலே சுபுத்னிக் கட்டி வைச்சிருக்கேன். நேத்துத்தான் முடிஞ்சுது. அதையும் பாக்கறதுக்குத்தான் அண்ணனைக் கூப்பிட்டுப் போகலாம்னு வந்தேன்னான்."

"என்னது! சுபுத்னிபகமே பண்ணி வைச்சிருக்கானா?"

"ஆமாம். நாலாம் மாடியிலே தூரத்திலேருந்து பாக்கறப்பவே தெரியுமாம்."

"சகன்விளை யாட்டு!"

'ஸ்புட்னிக், ஸ்புட்னிக்' என்று கூறுவது என்ன என்று நான் இப்போது சொல்ல ஆரம்பித்தால் என்னய்யா, உன் வாத்தியார்த்தனத்தை எங்களிடமும் ஆரம்பித்து விட்டாரா என்று கேட்பீர்கள். அந்த ஸ்புட்னிக் முதல் முதலாகப் பறந்த அன்றுதான் மயில்சாமி நடித்த முதல் படமும் வெளியாயிற்று.

மயில்சாமி கவலைப்படாத நாளில்லை. "மொதல் படம், எப்படியிருக்கப் போவுதோ!" என்று சதா மொண மொணவென்று சொத்து கொண்டேயிருந்தான். "அந்த செட்டுலே இப்படிச் செஞ்சிருக்கலாம், இந்த செட்டிலே அப்படிச் செஞ்சிருக்கலாம். இந்தப் பயலுவ கதை என்னன்னு சொல்லாமியே வேலை வாங்கியிருக்கானுவ. ஊ'ம்" என்ற உஷ்ணப் பெருமூச்சுடன் கடந்து போன தவறுகளுக்கெல்லாம் கரைந்து கொண்டிருந்தான்.

ஸ்புட்னிக் காலையில் உலகத்தைச் சுற்றிற்று. அன்று மாலை மயில்சாமி நடித்த படமும் வெளிவந்தது.

நாலாம் நாள் காலையில் வீடு அமளிப்பட்டது. கார் காராக வந்து நின்றது.

மயில்சாமி தடுப்பைத் தாண்டிக் கொண்டு கூடத்தின் எங்கள் பகுதிக்கு வந்தான்.

"அண்ணே, இந்த நாற்காலியையும் ஸ்டூலையும் எடுத்திட்டுப் போறேன். செத்தைக் கனிச்சு கொண்டாந்து போட்டுடறேன்."

"கேக்கணுமாடா தம்பி!"

யார்யாரோ வந்தார்கள். பேசிக்கொண்டிருந்தார்கள். நாற்காலியும் ஸ்டூலும் என் அறைக்குத் திரும்பி விட்டு மீண்டும் இரண்டு தடவை என் அனுமதியின்பேரில் மயில்சாமியின் கூடத்துக்குச் சென்றன.

நாலாம் தடவை வாசலில் கார் வந்து அவன் என் அறைக்கு வந்து நின்றதும் நானே நாற்காலியை விட்டு எழுந்து கொண்டு விட்டேன். மயில்சாமி சிரித்தான். "சாயங்காலம் வரைக்கும் பொறுத்துக்குங்கண்ணே!" என்றான்.



சாயங்காலம் வெளியே போய்விட்டு வந்தபோது மயில்சாமியின் முன் அறையில் எட்டிப் பார்த்தேன். பளபளவென்று நாலு பிரம்பு நாற்காலிகள் சாய்ந்தும் உட்கார்ந்தும் கொண்டிருந்தன.

"மயில்சாமி இல்லையா?"

"வெளியேதான் போனாங்க!" என்று அவன் மனைவி பதில் சொல்வதற்கும் வாசலில் ஒரு சின்ன டாக்ஸி நிற்பதற்கும் சரியாயிருந்தது. மயில்சாமி அதிலிருந்து இறங்கினான்.

மயில்சாமியோடு பல சாமான்கள் இறங்கின. ஒரு முகம் பார்க்கிற நிலைக் கண்ணாடி, ஒரு கைக்கடிகாரம், ஒரு சுவர்க் கடிகாரம், குழந்தைகளுக்குத் தங்க ஜிகினாச் செருப்புகள், அவன் மனைவிக்குத் தங்க ஜிகினாச் செருப்பு, காப்பி பலகாரம் சாப்பிட முன்னாடி வைக்கிற குட்டை ஸ்டூல் நாலு, ஒரு அமெரிக்கன் பேனா செட்டு, ஒரு படி பிடிக்கிற வெள்ளிக் கெட்டில், தலைக்குப் பெண்கள் கூந்தலை மாட்டுகிற கறுப்பு வளையம் இரண்டு, தலைவலை இரண்டு ஜோடி, நைலான் புடவை அரை டஜன். மயில்சாமி கழுத்தில் ஒரு சங்கிலி — மயில்சாமி என்னிடம் எல்லாவற்றையும் காண்பித்தான்.

"அண்ணே! கோபிச்சுக்கப்படாது. உங்க நாற்காலியை மட்டும் உள்ளாரத் திரும்பிக் கொண்டு வந்து வச்சேன். ஸ்டூலே நானே வச்சுக்கிட்டிருக்கேன். அதுலெ உட்கார்ந்து காலமே ஒரு படத்துக்குக் கையெழுத்துப் போட்டேன் பாருங்க! நீங்க சொன்னா நம்ப மாட்டீங்க! அப்புறம் சாயங்காலம் நாலு மணி வரைக்கும் 'தபதப தபதப'ன்னு வந்துக்கிட்டேயிருந்தாங்க. இன்னைக்குப் பதினாறு படத்துக்குக் கையெழுத்துப் போட்டிருக்கேன். காலமே போட்ட முதல் கையெழுத்து இரண்டாயிர ரூபாய்க்கு. அப்புறம் பாருங்க......" கண்ணைச் சிமிட்டிக் கொண்டான் மயில்சாமி. "சும்மா கேட்டு வைப்பமென்னு. அடுத்தாப்பலே ஒரு ப்ரொட்யூசர் வந்தாரு. அவருகிட்டே எண்ணாயிரம்னு போட்டேன். மனசிலே கொஞ்சம் தயக்கம்தான். ஆனால் அந்த ஆளு "அதற்கென்ன"ன்னாரு. அவ்வளவு தான், அப்படியே எழுதினாரு. ஆயிரம் அட்வான்ஸைக் கொடுத்தாரு. அப்புறம் வேடிக்கையைக் கடைசிவரைக்கும் பார்த்துப்பிடறதுன்னு இரண்டு இரண்டா ஒசத்திக்கிட்டே போனேண்ணே! பதினாறாவது படம் முப்பத்திரண்டாயிரத்துக்குப் போட்டிருக்கேன். எல்லாம் இந்த ஸ்டூல்லே உட்கார்ந்த வேளைதான். இது எங்கிட்டவே இருக்கட்டுமண்ணே" என்று ஒரு நூறு ரூபாய் நோட்டை என் கையில் வைத்து, ஒரு கும்பிடு போட்டான். "அண்ணன் மறுதளிக்கப்படாது" என்று பஞ்சைச் சிரிப்புடன் நின்றான் மயில்சாமி.

மூன்றாம் நாள் விடியற்காலையில் லாரியில் ஏழெட்டு ஆட்கள் வந்தார்கள்.

"அண்ணனுக்கில்லே? வரவங்க போறவங்க ஜாஸ்தியாயிடிச்சு. வேறே தனி ஊடா நூத்தம்பது ரூவாயிலே பாத்திருக்கேன் அண்ணே!" என்றான் மயில்சாமி.

லாரியில் சாமான்கள் ஏறின. டாக்சியில் மயில்சாமி குடும்பத்தோடு நானும் அவனும் கூடப் போய்ப் புது வீட்டில் அவர்களைக் குடியேற்றினோம்.

"என்னமோ இப்படிப் புசுக்குனு வந்திட்டேனென்று நினைக்கப்படாது அண்ணன். எனக்குப் பழைய காலெல்லாம் நல்லா ஞாபகம் இருக்கு. அதுவும் இப்ப அப்படியே குபுகுபுன்னு நினைவு வருதுண்ணே" — மயில்சாமிக்குக் கண்ணில் நீர் கட்டிவிட்டது.

"பேசாம இரு மயிலு — இந்தத் தொழிலுக்குக் கொஞ்சம் டாப்பு ஜோப்பெல்லாம் வேணும். இல்லேன்னு மதிக்க மாட்டாளுக. என்னைக் கேட்டா இன்னும் கொஞ்சம் பெரிய வீடா வாடகைக்கு எடுத்திருக்கணும்" என்று நானே அவனுக்கு ஆறுதல் சொன்னேன்.

"பாத்தப்பம், அண்ணே! ஒரேயடியா விங்கப்படாது" என்று கண்ணைத் துடைத்துக் கொண்டான் அவன்.

புது வீட்டில் ஒரு மாதம்கூட இல்லை அவன். அதற்குள் எண்பதாயிரத்துக்குச் சொந்த வீடே வாங்கி விட்டான். அந்த மனைபுகு விழாவுக்குப் பந்தல், சமையல் வரவேற்பு எல்லாம் அடியேன் மார்பத்தில் தான் நடந்தேறின. வீட்டின் நுழைவில் 'சுபுத்தினியகம்' என்று எழுதியிருந்தது.

"என்ன மயிலு இது?" என்றேன்.

"அண்ணனுக்கு மறந்து போச்சு. முதப் படம் ரிலீஸ் ஆன அன்னிக்குக் காலமே ஒண்ணு பறந்திச்சில்லே ரஷ்யாவிலேர்ந்து—"

"ஆமாம், ஸ்புட்னிக்கு."

"பேப்பரைப் பார்த்தேன். அது பூமியிலேந்து கிளம்பின அதே நேரத்துக்குத்தான் அந்தப் பட ரோலுங்களும் கம்பெனியை விட்டுத் தியேட்டருக்கு 'வான்'லே கிளம்பிச்சுன்னு தெரிஞ்சுது. இதுக்கும் நமக்கும் ஆண்டவன் ஏதோ ஒத்துமை வைச்சிருக்கான்னு ஒரு தோத்தம் எனக்கு—இதெல்லாம் நல்லாக் கவனிச்சாத்தானேண்ணே தெரியுது. அப்புறம் ரெண்டாவது பறக்க விட்டான் பாருங்க, அன்னிக்குத்தான் நான் இருபத்தஞ்சாவது படத்துக்குக் கையெழுத்துப் போட்டேன். இந்த ஸ்புட்னிக்குக்கும் நமக்கும் ஏதோ சம்பந்தம் இருக்குன்னு அப்ப இன்னும் கெட்டிப்பட்டுப் போச்சு. ஊட்டை வாங்கினேன். உடனே அதும் பேரையே வைச்சேன். என்ன பார்க்கிறீங்க? பேர் வேறே மாதிரியிருக்குன்னு யோசிக்கிறீங்களா! பேர் வைச்சாலும் தமிள்ப் பேரு மாதிரி இருக்கணும் வேண்ணே. ஸ்புட்டுனிக்குன்னு புட்டு, இடியாப்பங்கற மாதிரி "சௌண்டு" என்னமோப்போலல்லே கேக்குது. அதான் சுபுத்தினியகம்னு வைச்சேன். ஸ்புட்னிக் பேர் மட்டும் இல்லாம இன்னும் என்னென்னமோ ஐடியாவெல்லாம் வருது பாருங்க. புத்தி, சுபுத்தி, சுபுத்தினியகம். எப்படி நம்ம சேர்வை அண்ணன் என்ன கேட்டார் தெரியுமில்லே? சேர்வையண்ணே, என்ன கேட்டீங்க அப்ப?"

பக்கத்து ஜமாவில் இருந்த ஒரு ஆள் சிரித்துக் கொண்டே, "ஏன், தம்பி! சம்சாரத்தின் பேரை நேரடியாப் போடாமல் இப்படிப் போட்டிருக்கீங்க போலிருக்குன்னேன். என்ன தப்பு?" என்றார்.

"கேட்டீங்களாண்ணே. சுபுத்தினின்னு நல்ல புத்தி உள்ளவ. அவ அகம், அவ வீடு... சேர்வையண்ணன் ஐடியா பார்த்தீங்கள்ளே?"

"பலே! பலே! தெய்வம் கண்ணைத் தொறந்திச்சுதுன்னு எல்லாம் சேர்ந்துக்குது" என்றேன்.

"அகமுடையான்னு நாம சொல்லுவம், சுபுத்தினியாயிருக்கிறவங்களுக்கு அகம் யாரு?" என்று சேர்வையண்ணன் அடுத்தாற்போலக் கேட்டார்.

"எப்படிண்ணே?" என்று கேட்டான் மயில்சாமி.

"சுபுத்தினிக்கு அகம் நீதான்" என்றேன்.

"சேர்வை அண்ணே, பாத்தீங்கள்ளே. அண்ணன் தமிழைக் கரைச்சுக் குடிச்ச

அவர்களெல்லோரும் ஏகோபித்து **ஹமாம்**

சோப்பை மிகவும் மெச்சுகிறார்கள்

புதுமுறையான மிருதுத்துவம் அளிக்கும்
இதன் தன்மையினால் மிருதுவான நுரை அளிக்கிறது.

இதை உபயோகித்து குளிக்கும்போது சுத்திகரித்து புத்துணர்ச்சி அளிக்கிறது
ஹமாம் சோப் மிகவும் நேர்த்தியானது நறுமணமுள்ளது.

நீண்ட நாட்கள் நீடித்து நிற்கிறது.
மிகவும் சிக்கனமானது.

**ஹமாம்**

சோப்பை உபயோகித்து புத்துணர்ச்சியுடனும் நறுமணத்துடனும் விளங்குங்கள்




எங்கள் குடும்பத்தில் யாவரும்
**ஹமாம்** சோப்பையே விரும்புகிறார்கள்

ஓர் டாடா தயாரிப்பு—எனவே
அது நல்லதென்று உங்களுக்கே தெரியும்.

வங்க, ஔவை, கம்பரு எல்லாம் மனப்பாடம். அவங்ககிட்ட நடக்காது.''

மயில்சாமி வாயிலிருந்து வரும்போது இதெல்லாம் என்னமோ அசட்டுத்தனம் என்றே எனக்குத் தோன்ற மறுத்துவிட்டது. கூரையைக் கிழித்துக் கொண்டு தடுக்க முடியாமல் வரும் பணத்தையும், அது சேர்த்துவிட்ட சம்பாரங்களையும் பெருமைகளையும் சிறு பிள்ளைபோல் கபடமில்லாமல் அவன் ரசிக்கிற நினைப்புத்தான் எனக்குப் பட்டது. ஏதோ நல்ல பாலாகக் குடிக்கிறமாதிரி இருந்தது எனக்கு.

ஆள் கூட எத்தனையோ மாறுதலுக்குள்ளாயிருந்தான். கொஞ்சம் சதை போட்டிருந்தது. உடம்பில் ஒரு மினுமினுப்பு. சில்க் சட்டை, அரையில் இரண்டு அங்குலம் ஜரிகை போட்ட வெண்பட்டு. பாம்புவிரல் கட்டை விரலைத் தவிர மற்ற விரல்களில் நிறுக நிறுசாக மோதிரங்கள். இடது ஆள்காட்டியில் இரண்டு மோதிரங்கள். இப்போதுதான் குளித்துவிட்டு வந்தாற்போல் மினுமினுப்புடன் மின்னுகிற தலை. தலைமயிர் கூட மாறிவிட்டது. இழைப்புளி தள்ளுகிற சுருள்களைப்போல் தலைமயிர் முழுவதும் சுருள் சுருளாகச் சுருண்டிருந்தது. சிறிதளவாவது முகத்தில் காண்கிற எண்ணெய் அறவே மறைந்து நிரந்தரமாக ஒரு துடைத்துவிட்ட மெருகு. அவனை விட்டுக் கண்ணை எடுக்கவே முடியவில்லை.

ஆனால் வெகு நேரம் பார்க்க முடியவில்லை. கிருகப்பிரவேசத்தன்று கூட அவனுக்கு ஓய்வில்லை! ராத்திரி சாப்பாடாகி விருந்தாடிகள் முழுவதும் கலைவதற்குள் காரை எடுத்துக்கொண்டு கிளம்பிவிட்டான். கொல்லம் உப்பங்கழியில் வைத்து ஷூட்டிங்காம்.

கொல்லத்திலிருந்து காலை எட்டு மணி இருக்கும். ஒரு 'ட்ரங்கால்' வந்தது.

"வந்து சேந்திட்டேண்ணே. நீங்க வீட்டுக்குக் கிளம்பிடாதீங்க. நாளானிக்கிக் காலமே வந்திருவேன். அப்புறம் தான் போகணும்."

மூன்றாம் நாள் காலையில் ஏழெட்டு பலாப்பழம், ஒரு டஜன் மிதியடிகள், மலையாளத்துத் தைலங்கள், பச்சைப் பாக்கு அரை மூட்டை—இப்படி வந்து சேர்ந்தார்கள் காரும் மயில்சாமியும்.

என்னென்ன வாங்குவான் அவன் என்று சொல்ல முடியாது.

"ஜப்பான்காரன், ஜப்பான்காரன் தாண்ணே. மாதளம் பழத்தைத் தோலைக் குத்துறப்பல உரிச்சு ஒவ்வொரு முத்திலே இருக்கிற சாத்தையெல்லாம் கக்கப் பண்ணி ஒரு குளா உவியா விளப்பண்றது இலேசான காரியமா? நம்ம ஊர்லெ செய்வாங்களா? இத பாருங்க—கோமதி—நம்ம அண்ணனுக்கு அந்தமாதளங்கா மிஷினைக் கொண்ணாந்து காட்டு. கெக்லலை எடுத்துக் காட்டலையா அண்ணனுக்கு? பம்பாய்க்குப் போனேன், அண்ணே, போன மாசம். அப்ப ஒரு வெள்ளைக்காரங் கிட்டே வாங்கினேன். நாப்பத்திரண்டாயிரம் ஆச்சு. அப்புறம் இங்க வந்து பச்சையிலே பதக்கம் பண்ணிச்சு. எல்லாம் நாப்பத்தஞ்சு ரூவா ஆயிரிச்சு."

அட்டிகை பூத்துக் குலுங்கிற்று. வாங்கிப் பார்த்தேன்.

"ஜாலண்டுன்னு ஒரு ஊராமே, அங்கெல்ல கட்டுறானும்" என்றான் மயில்சாமி.

திடீரென்று வாத்தியமும் பாட்டுமாகக் கேட்டது.

"எங்க பாடுது, சொல்லுங்க, பார்ப்பம்' என்று சிரித்தான் மயில்சாமி.

நான் உச்சி மோட்டைப் பார்த்தேன், கதவிடுக்கில் பார்த்தேன், சுவரைப் பார்த்தேன். "இல்லே, இல்லே, இல்லே" என்று நான் பார்க்கிற ஒவ்வொரு இடத்தையும் பார்த்து மறுத்துக் கொண்டே வந்தான். "இங்கே" என்று வலது மார்பைத் தட்டிக் கொண்டான். சட்டையின் உள் பாக்கெட்டில் கையை விட்டு டயரி ஒன்றை எடுத்தான். டயரி இல்லை. ரேடியோ. அதை என் முன்னால் வைத்து எங்கேயோ தடவினான். சட்டை மாதிரி புசுக்கென்று ஒரு கம்பி கிளம்பி நின்றது.

"ஏரியல் அண்ணே" என்றான் அவன்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. மலைத்துப் போய்ப் பார்த்தேன்.

"நம்ம ஊரிலே சித்தர் பாடல்லெ சொல்லியிருக்கும்பாங்க. இந்த ஆளுங்க செஞ்சே காமிச்சுப்பிட்டான் பாருங்க."

மயில்சாமி வீடு முழுவதும் ஆச்சரியங்களாக நிரப்பியிருந்தான். வீட்டுக்கு வந்தும் எல்லாவற்றையும் சொல்லி, "என்னத்துக்கு இப்படிக் கண்டா முண்டாவெல்லாம் வாங்குறான்னுதான் புரியலே" என்று சொன்னபோது இவளுக்குக் கோபமே வந்து விட்டது.

"என்னமோ ஆசை. போகட்டுமே. உங்க மோட்டார் டயர் செருப்பு என்னமோ நாறு சண்டை பாத்த சிப்பாய் மாதிரி காதுலேந்து குதிவரைக்கு நாறு பிளாஸ்திரி போட்டுக்கிட்டு உங்களை நாலு வருசமாச் சுமக்குது."

"மோட்டார் டயர் செருப்பைப் பத்தி உனக்கு என்ன தெரியும்?"

"பின்னே! அவன் மாத்திரம் உபயோகமில்லாம வாங்குவானு! ஏதோ ஆசை!"

"அதுக்காக—இப்படியா? குழந்தைகளுக்கு விரலை நீட்ட முடியலே ஒவ்வொரு விரலுக்கும் ஒரு மோதிரம்; ஒவ்வொரு மோதிரத்திலிருந்தும் சங்கிலி கிளம்பிக் கை வளையோட. ஜாய்ண்டு. கல்கத்தாக்குப் போனப்ப மூவாயிர ரூபாய்க்கு ஜவுளி வாங்கியிருக்கான். குழந்தைகளுக்குச் சட்டை வாங்கினால் தடவைக்கு ஏழெட்டு டஜனு வாங்கறது!"

"உங்களுக்கென்னங்கறேன்? உங்க பணத்தை எடுத்துச் செலவு பண்ணுறப்பலல்ல அலமலங்கறீங்க? மரியாதைக்கு அண்ணன்னு கூப்பிட்டா நெசஅண்ணன் மாதிரியே காயறீங்களே?"

"அட, செலவு பண்ணறதிலே இத்தனை அசிங்கமா? பாத்தமாப் பண்ண வாணும்? அதுக்கில்ல சொல்றேன்?"

"அவன் என்ன அசிங்கமா செலவு பண்ணுறான்? கோமதியைத் தவிர யாரும் அவனுக்குப் பொம்பிளையாவே படமாட்டாங்க. ஒண்ணுக்கு ரெண்டு வேளையா காப்பி குடிப்பான். அவ்வளவுதான்."

"அது சரி."

"பின்னே?"

இவன் சொன்னால் நான் சிரிக்காமல் இருப்பேனா? தீபாவளிக்கு முன்னால் நல்ல பால் கிடைக்கவில்லை என்று டில்லியிலிருந்து யானை மாதிரி கருட்டை எருமை ஒன்று வாங்கி வந்தான். அதைப் போய் வாங்க என்ன செலவு! ஒரு கோனாரோடு விமானத்தில் டில்லிக்குப் போய் மாட்டை வாங்கி ரயிலில் ஏற்றி, விமானத்தில் திரும்பிவந்து...எல்லாம் சரி. நாலாவது மாடி கட்டட்டும். அதன் மேல் ஸ்புட்னிக் என்னத்துக்கு?

சாப்பிட்டு விட்டுத் தூங்குகிறபோது என்னை எழுப்பி, "காப்பிக் கொட்டை மிஷினுக்குப் போய் வாரேன். பாலுக்கு ஏனம் வைச்சிருக்கேன். வந்தா வாங்கி வைச்சு மூடிப்பிட்டுத் தூங்குங்க" என்று சொல்லிவிட்டுப் போனான் ராஜீ.

மயில்சாமிக்கு ராத்தூக்கமே இல்லையாம். ராத்திரி ஒன்பது மணியிலிருந்து இரண்டு மணி வரையில் ஷூட்டிங். அங்கிருந்து வேறு ஸ்டுடியோவுக்குப் போய் உடை மாற்றி, காலை ஐந்து மணி வரையில் ஷூட்டிங். பிறகு பல் துலக்கிக் குளித்துவிட்டு மறுபடியும் ஏழுமணியிலிருந்து ஷூட்டிங். பகல் ஒரு மணிக்கு அது முடிந்ததும் இரண்டு மணியிலிருந்து ராத்திரி இரண்டு மணி வரையில் ஷூட்டிங். உடனே மூன்று மணிக்குக் காரில் ஏறி மைசூர் போய் அங்கே வெளிக் காட்சி ஷூட்டிங்...

போடா போ.

நான் பகலில் தூங்காமல் இருக்கமாட்டேன். கோடி ரூபாய் கொடேன். சனி, ஞாயிறு பிற்பகல் தூக்கத்தை விடுவேனா? தொண்டைத் தண்ணீர் வற்ற ஐந்து நாள் கத்துகிறேனே, எதற்கு?

ஆனால் இதற்கு எத்தனை இடைஞ்சல்! மூன்று மணிக்குக் கன்னத்தில் அறைந்தாற்போல் பால்காரன் கத்துகிற குரல்... இல்லாவிட்டால் வாசலில் வெயில் வீணாகாமல் கிரிக்கெட் ஆடுகிற தெருப்பட்டாளம்! தலைவலி மருந்து விளம்பரம் பண்ணுகிற தலைவலி மேலண்டை ஜன்னல் வழியாகப் பாடுகிறது. எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற்போல் வேலைக்காரப் பெண்பிள்ளை! என்னமோ இடும்பி வந்து வீட்டு வேலை செய்கிறாற்போல். அவள் துடைப்பத்தை எடுத்துப் பெருக்குவதே மாவுமிஷின் அரைக்கிறாற்போல். இன்று பேச வேறு ஆரம்பித்து விட்டாள். கால் தூக்கமும் அரைத் தூக்கமாக அதையும் என் காது வாங்கிக் கொண்டுதான் இருந்தது.

"நாப்பது ரூபாயா? எதுக்கு?"

"வேணும். ரொம்ப அவசரம். நாளன்னிக்குக் காலமே கொடுத்திடறேனக்கா."

"நாப்பது ரூபாய்க்குத் திடீரென நான் எங்க போவுது?"

"என்னக்கா இது?"

"நாலு அஞ்சுன்னாலும் பாக்கலாம். அதுவும் வாத்தியாரிட்டதான் பாக்கணும். அவங்களும் முந்தாநேத்துதான் பத்து ரூபா கொடுத்தாங்க. சம்பளத்திலே ரண்டு ரண்டாப் புடிச்சிக்குங்கன்னு வாங்கினேன். இந்தச் சனி பெரிசாயிருக்கு. நேத்துத்தான் குளியல். அதுக்குத்தான் வாங்கினேன்."

சனி சனி என்றுதான் தன் மகளைக் குறிப்பிடுவாள் அவள்.

"அப்படியா? அக்காகிட்ட கேட்டா கிடைக்கும்னு நெனச்சேன்."

"என்ன செய்யிறது?"

எனக்கு என்னமோ ஒரு திகைப்பு! யார் இது? மயில்சாமி குரல்மாதிரி இருக்கிறதே என்று கண்ணைக் கசக்கி எழுந்தேன். வாசல் கதவைத் திறந்தேன். பளீர் என்ற கருகருவென்ற கார் நின்று கொண்டிருந்தது. வழக்கமாகக் கார்களுக்கு இரண்டு அல்லது நாலு முன் விளக்குகள் இருக்கும். இந்தக் காரில் ஏழெட்டு இருந்தது. பக்கத்தில் வேறு நாலு விளக்குகள். மயில்சாமி கார்மாதிரிதான் இருந்தது.

படியிறங்கினதும் திண்ணையோரமாக, காம்பவுண்ட் சுவருக்கு இந்தண்டையிருந்த இடைவெளியில் மயில்சாமி நின்று கல்பகத்தோடு பேசிக் கொண்டிருந்தான். வலது கையில் துடைப்பக் கட்டையை வைத்துக்கொண்டே வேலைக்காரி கல்பகம் பதில் சொல்லுகிறாள்.

"அடடே! அண்ணன் எழுந்துகிட்டாங்களே" என்றான் மயில்சாமி.

"அட மயில்சாமியா! வா தம்பி! என்ன இங்கே நிக்கிறே! எப்ப வந்தே?"

"நான் வந்து அரை மணியாச்சண்ணே. நல்லாத் தூங்கிக்கிட்டிருந்தீங்க. கனைச்சேன். இருமினேன். நீங்க எழுந்துக்கலெ. சரி, காத்தாட நிப்பம்னு இங்கே வந்தேன்."

கிரிக்கெட் விளையாடும் தெருச் சிறுவர்கள் காம்பவுண்டுக்கு வெளியே நின்று மயில்சாமியை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர்.

உள்ளே வந்தான் அவன்.

"உட்காரேன்."

"இல்லேண்ணே. போகணும்."

மயில்சாமி நிலைகொள்ளாமல் பறந்து கொண்டிருந்தான்.

"போகலாம். என்ன காரியம்?"

"ஒரு நாப்பது ரூவா பணம் வேணும்."

"நாப்பது ரூபாயா?"

"ஆமாம்."

"திடீர்னு—"

"காலமே லட்ச ரூபாய்க்கு ஒரு படத்துக்குக் கையெழுத்துப் போட்டண்ணே. ஆயிரம் ரூபாய் அட்வான்ஸ் கொடுத்தாங்க. போன மாசம் கொண்டாமங்கலத்திலே ஒரு பள்ளிக்கூடத்துக்குக் கட்டடம் கட்ட நாலாயிரம் ரூபாய் தரேன்னு 'மீட்டிங்'கிலே சொல்லிப் பிட்டேன்.

அதைக் 'கொடு கொடு'ன்னு நச்சரிச்சிட்டானுவ. உடனே பாங்கியிலே இருக்கிறது, அந்த ஆயிரம் எல்லாத்தியும் சேர்த்து அனுப்பிச்சிட்டேன், அண்ணே! இன்னி மத்தியானம் ஒரு மணியிலேர்ந்து கையில் காலணா இல்லேண்ணே. ஆறு மணிக்குப் பங்களூர் போகணும். ஷூட்டிங். நாளை ராத்திரிதான் வருவேன். வீட்டிலே ஏதாவது கொடுத்திட்டுப்போகணும். கைச் செலவுக்கு வேறே வேணும். நாற்பது ரூபா இருந்தாப் போதும்."

உட்கார முடியாமல் பறந்தான் அவன். முகத்தில் ஈயாடவில்லை. எல்லாச் சொத்தும் பறிபோனது போல் முகத்தில் ஒரு பயமும் வெளிறும் படர்ந்து கிடந்தன. வெறும் பயமாகக்கூட இல்லை. ஒரு திகில்.

"ப்ரொட்யூசருக்கெல்லாம் போன் பண்ணினேன். கையை விரிச்சிட்டானுவ. நான் போய் நகையை அடகு வைக்கலாமண்ணே! இத்தினி கஷ்டம் வரும்னு நான் நினைக்கவே இல்லேண்ணே. யார் யாரையெல்லாம்கஷ்டப்படுத்திருக்கேனோ தெரியல்லே." மயில்சாமியின் கண்ணில் நீர்த்துளி கண்டது.

"என்ன தம்பி இது?"

"நெசமாகச் சொல்றேனண்ணேன். நான் ஒருத்தருக்கும் இதுவரைக்கும் வஞ்சனை பண்ணினது இல்லே. இன்னிக்கு என்னைச் சோதிக்குது பாருங்களேன் தெய்வம். எத்தினி பேரைக் கேட்டாச்சு. நம்ம கல்பகத்தைக் கூடக் கேட்டிட்டேன், பாருங்க."

நாலு மணி நேரம் பணமில்லாமல் அவன் வாழ்க்கை தைரியம் எல்லாம் இருண்டு விட்டது.

"அண்ணே! நான் எவ்வளவோ தப்பு செஞ்சிருப்பேன். அதையெல்லாம் மறந்திட்டு இப்ப எனக்குக் கைகொடுங்க. நான் மறக்கவே மாட்டேன். சாவறவரைக்கும் மறக்க மாட்டேண்ணே."

கல்பகம் ஜன்னல் வழியாக இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"தாம் தூம்னு வாரி இறைச்சேன், பணத்தை மரியாதை இல்லாம. இன்னிக்கி அந்த லக்ஷ்மி சோதிக்கப்பிட்டா." மயில்சாமி கண்ணீர் அடைக்கப் பேச முடியாமல் நிறுத்திக் கொண்டான்.

அந்தச் சமயம் பார்த்துக் காப்பிக் கொட்டைக் கடையிலிருந்து அவனும் வந்து விட்டான்.

"வா தம்பி" என்று மலர்ந்து வரவேற்றவனுக்கு அவன் இருந்த நிலையைக் கண்டதும் வெதறிப் போய் விட்டது. என்ன அர்த்தத்தோடு பார்த்தாள்.

"உங்கிட்ட ஏதாவும் பணம் இருக்கா?" என்றான்.

"இருக்கே! பெரியம்மா கொடுத்துவச்சிருக்கிற அம்பது ரூபாய் இருக்கு."

"எடுத்திட்டு வா."



சென்னை வருமானவரி உதவி கமிஷனர் திரு கே.எஸ்.வி.ரமண் அவர்களின் புதல்வி சௌ வஸந்தாவுக்கும் திரு எஸ். எஸ். நாராயணனுக்கும் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

பணம் வந்தது.

"அம்பது ரூபாயா வச்சுக்கவேன் தம்பி!"

"வாண்டாண்ணே. நாப்பது போதும்."

"அட வைச்சுக்க சொல்றேன்."

"வேண்டாம்" என்று பத்தைத் திருப்பி வைத்து விட்டான். "நாளானிக்கிக் காலமே நாலுத் திருப்பிக் கொடுத்திடறண்ணே."

"நாலு! இப்பத்தானே லட்சுமி, மரியாதைன்னு வேதாந்தம் பேசினே."

"இருக்கட்டுண்ணே." பஞ்சைச் சிரிப்புடன் எழுந்தான் அவன்.

"காப்பி சாப்பிட்டுப் போ, தம்பி!" என்று அவன் அதட்டியதும் உட்கார்ந்து விட்டான்.

"இன்னைக்கி நரகவேதனை பட்டாச்சிண்ணேன். அண்ணன் இல்லாட்டி என்ன ஆயிருக்கும்!" என்று அதே சிரிப்புச் சிரித்தான். "ஒரு பெரிய புசல் அடிச்சாப் பல ஆயிடுச்சண்ணே."

"அதுக்காகக் கூட்ற பொம்பிளையைப் பணம் கேட்டியா?"

"கேட்டா என்ன அண்ணே? இப்ப அது நாளன்னிக்கி நூறு ரூபாயா கொடுத்தா வாங்கிக்கும். நீங்க என்னென்ன சண்டை போடப் போறீங்களோ? அப்படியும் தெரியாத பொம்பிளையா அது? அஞ்சு வருசமா கூடப் பொறந்த மாதிரிதானே பழகுது—வேலை செஞ்சாலும்."

காப்பி வந்தது. சாப்பிட்டான். சொல்லிக் கொண்டான். காரில் ஏறிக்கொண்டான். போய் விட்டான். 'தெருப்படைகள் கையெழுத்துக்கு நீட்டின நோட்டுகளை. "நாளைக்கு நாளைக்கு" என்று மீறிக் கொண்டு கிளம்பி விட்டான்.

ஒரு சிரிப்புச் சிரித்துவிட்டு வேலைக்காரி கூடத்தைப் பெருக்க ஆரம்பித்தாள்!




# ரெமி டால்கம் பவுடர்

AVRA-641

இலங்கையில் கிடைக்குமிடம்: AVRA Ltd., Colombo

ரேடியோ ஸிலோன் :—41.72 மீட்டரில் "ரெமி நகைச்சுவை நாடகம்"
வெள்ளிக்கிழமைதோறும் மாலை 6-30 லிருந்து 6-45 வரை

# தேன்கூடு

### அத்தியாயம் 25

## அற்ப விஷயம்

டெலிபோனில் உஷாவின் குரலைக் கேட்டதுமே பாபுவுக்கு ஒன்றுமே புரியவில்லை. என்றைக்குமே அவளாகத் தன்னை டெலிபோனில் கூப்பிட்டுப் பேசுவாள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. அதனால் அவன் சிறிது வியப்புற்றான். உடனே அருகில் யாராவது இருக்கிறார்களா என்று சுற்று முற்றும் பார்த்து விட்டு, பிறர் கவனித்தாலும் கேட்காத குரலில் விடையளித்தான்.

"காருக்கு நீ வருவாயா, பாபு?"

"எங்கே?"

"எங்கள் பங்களாவுக்குத்தான்!"

"அங்கே என்ன நடக்கிறது?"

"உனக்கு ஒன்றுமே தெரியாதா? மிஸஸ் மீனாட்சியம்மாளுக்குத் துணையாக நீ வரமாட்டாயா?"

"தெரியாது. அம்மா கூப்பிட்டு வரச் சொன்னாலும் சொல்லலாம்; இல்லாவிட்டாலும் இல்லை. அதை எப்படிச் சொல்ல முடியும்?"

"சரி; உன் அம்மா அழைத்து வராவிட்டால் என்ன? நான் அழைக்கிறேன், நீ வாயேன்!"

"அவ்வளவு முக்கியமா அது?"

"முக்கியம்தான்; முக்கியம் எதுவும் இல்லாமலே நீ அழைத்து, நான் உங்கள் சங்கத்துக்கு அன்று வரவில்லையா?"

"சும்மா அந்தப் பக்கமாக வந்தாய். அப்படியே சங்கத்தையும் பார்க்கலாம் என்று இறங்கி வந்திருக்கிறாய். இல்லையா? நீயே சொன்னாயே, மறந்து விட்டாயா?"

"மறக்கவில்லை. ஆனால் உனக்கு உண்மை தெரியும். இதை நீ மறைக்க முடியாது. எந்த வழியில் எந்தச் சங்கம் இருந்தாலும் இறங்கிப் பார்க்க வேண்டிய அவசியம் எனக்கு என்ன வந்தது? சொல்லேன், பார்ப்போம்!"

"அப்படியானால் நான் அழைத்ததற்காகவா வந்தாய்?"

"அதில் என்ன சந்தேகம்?"

"சந்தேகம் இருந்துதானே உன்னைக் கேட்கிறேன்!"

"என் பேச்சில் உனக்கு நம்பிக்கையில்லையா?"

"ஏன் இல்லை? நம்பிக்கையினால்தானே சந்தேகமே! நான் அழைத்தேன் என்பதற்காக நீ வருவானேன்? என் பேச்சுக்கு நீ ஏன் அப்படி மதிப்புக் காட்டவேண்டும்? அத்தனைக்கு எனக்கு என்ன தகுதி இருக்கிறது?"

உஷாவின் பக்கத்திலிருந்து இதற்கு ஒரு விடையும் கிடைக்கவில்லை. 'ம்' என்ற பெருமூச்சொலிதான் கேட்டது.

பாபு சட்டென்று சுருதியை மாற்றிக் கொண்டு, "சரி, காருக்கு என்னவென்று நீ சொல்லவில்லையே!" என்றான்.

"அதற்கு ஒன்றும் அவசியமில்லை. நீ வரவேண்டாம்."

"வராவிட்டாலும் என்னவென்று நான் தெரிந்துகொள்ளக் கூடாதா?"

"அதை நானாகச் சொல்வானேன்? உனக்குத் தன்னாலேயே தெரியும். இப்பொழுது தெரியாவிட்டால் காருக்குத் தெரிந்து விடும்."

உஷாவின் குரல் என்னவோ வெகு சாதாரணமாகத்தான் இருந்தது. ஆனால் ரிஸீவரின் ஓசை 'டக்'கென்று அழுத்தமாக ஒலித்தது. பாபு டெலிபோனை வைத்து விட்டுச் சிறிதுநேரம் சிலை போல் நின்றான். அப்போதே அவளை மீண்டும் அழைத்துப் பேச வேண்டும் என்று தோன்றியது. அதற்குத் துணிவு உண்டாவதற்குள் நீதிபதி ராமசுந்தரம் மாடிப் படியில் ஏறிக் கொண்டிருப்பதை அவன் கவனித்தான். அவன் பார்வை கண்ணில் பட்டதுமே அவர் அவனை மேலே வரும்படி சைகை செய்து விட்டுப் போனார். அவனுடைய நெஞ்சு படபடத்தது. அவன் டெலிபோனில் பேசிக் கொண்டிருந்ததை அவர் கேட்டிருக்க வழியில்லை. இருந்தாலும் குற்றமுள்ள நெஞ்சு ஆயிற்றே! எதற்காகத் தன்னை அழைக்கிறாரோ என்று நெஞ்சம் கலங்க அவன் அவரைப் பின் தொடர்ந்து சென்றான்.

ஆர்வி

நீதிபதி ராமசுந்தரத்தின் அறையில் நீதியின் அதிதேவதையே குடியிருந்தது போல் ஒரு பிரமை உண்டாயிற்று. அதை எட்டிப் பார்க்கும் போதே ஒரு மிரட்சி ஏற்பட்டது. அறையின் நாலு பக்கமும் சட்டப் புத்தகங்கள் அடுக்கிய கண்ணாடி பீரோக்கள்; நடுவில் கிடந்த மேஜையின் மேல் தீர்ப்பு எழுதிய, எழுத வேண்டிய வழக்குக் கட்டுகள். முதுகில் தங்க எழுத்துக்கள் பொறித்த சட்டப் புத்தகங்கள் கடவுள் படைப்பைவிட ஒரு



படி உயர்வாகப்பட்டன அவருக்கு. அவருடைய அறையினுள் மிஸஸ் மீனாட்சியம்மாளுக்கே நுழைய யோசனைதான். அவர் மணியைத் தட்டி அழைத்தால்தான் யாராக இருந்தாலும் உள்ளே போகலாம். அந்த அறையையே அநேகமாக அவர் கோர்ட்டாகத்தான் கருதி வந்தார். அவர் அங்கே இருந்தாலே அந்த இடம், 'கப்சிப்'பென்று அமைதியாகவே இருக்கும். வீட்டிலே இருப்பவர்களிடமும் சரி, அரைப் பேச்சுக்கு மேல் அவர் அங்கே பேசுவதில்லை. ஓய்வு பெற வேண்டிய நாள் நெருங்க நெருங்க, அவர் நெருப்புத் துண்டமாக விளங்கினார். கண்கள் வேறு உலகில் சஞ்சரிப்பவை போல் காணப்பட்டன. எதிரே இருப்பவை யாவும் அவருக்கு ஒழுங்கற்றிருப்பதாகத் தோன்றின. மனைவி, மக்கள், வேலைக்காரர்கள் அனைவருமே குற்றமும் குறையும் நிறைந்தவர்களாக அவர் கண்ணுக்குப் பட்டார்கள். ஆனால் என்ன செய்வது?

அவர் ஒழுங்கில்லாமல் கலைந்து கிடந்த மேஜையைச் சுட்டிக் காட்டி, "இதையெல்லாம் சரியாக அடுக்கிவை!" என்று உத்தரவிட்டார்.

பாபுவுக்கு இப்பொழுதுதான் நல்ல மூச்சு வந்தது.

அவன் ஒவ்வொன்றாய் எடுத்து அந்த மேஜையை ஒழுங்குபடுத்தலானான். திடீரென அவர், "உனக்கு அப்பா, அம்மா யாரும் இந்த ஊரில் இல்லையோ?" என்று கேட்டபோது பாபுவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. பேச்சு எந்தப் பக்கம் திரும்புமோ என்று கலங்கினான்.

"இல்லை; எனக்கு யாருமே இல்லை!"

அவன் தன் படபடப்பை மறைத்துக் கொள்ள வேகமாக எல்லாவற்றையும் அடுக்குவதில் முனைந்தான். சட்டென்று அவன் கண்கள் எதையோ பார்த்து விட்டுத் தயங்கின. உஷாவின் பெயர் அச்சடித்திருக்கிறதே! ஸ்ரீமான் பாரிஸ்டர் பரமசிவமும் ஸ்ரீமதி சொர்ணாம்பாள் பரமசிவமும் சிங்கப்பூர் கண்ணபிரானைக் கௌரவிக்க நடத்தும் விருந்துபசாரத்துக்கும் அதை யொட்டி நடைபெற விருக்கும் தங்கள் குமாரி உஷாவின் நடனத்துக்கும் வந்து சிறப்பிக்குமாறு பணிவோடு அழைத்திருக்கார்கள். பாபு அந்த அழைப்பை முதலிலிருந்து கடைசி வரையில் படித்தான். அதன் பிறகுதான் உஷா அவனை டெலிபோனில் அழைத்துப் பேச வந்த காரணம் விளங்கியது. உஷாவின் புஷ்பம் போன்ற உள்ளத்தை வருத்தி விட்டதற்காக அவன் தன்னையே நொந்து கொண்டான்.

ராமசுந்தரம் அவனையும் அந்த அழைப்புக் கடிதத்தையும் கவனித்து விட்டு, "அவர்கள் வீட்டுக்கு நீ அடிக்கடி போகிறாயாமே?" என்று கேட்டார்.

இந்தக் கேள்வி பாபுவைத் தூக்கிவாரிப் போட்டது. குப்பென்று அவன் உடம்பு



முழுதும் வியர்த்து விட்டது. அவன் தில் நிறைந்த பார்வையுடன், "அப்படியெல்லாம் ஒன்றும் இல்லையே!" என்று தலையை ஆட்டினான்.

அற்ப விஷயம் ஒன்றை எல்லாருமாகச் சேர்ந்து பெரிதாக்கி விட்டதாக எண்ணி அவன் வருத்தப்பட்டான். ஆனால் எஜமானி மீனாட்சி மட்டும் இன்னும் அதைப் பற்றி அவனிடம் எதுவும் கேட்காதது அவனுக்கு ஆறுதலாக இருந்தது.

ராமசுந்தரம் முகத்தை வேறுபுறமாகத் திருப்பிக் கொண்டு, "சேகர் சொன்னான் என்று நீ எதையாவது செய்து வைக்காதே. அவன் எங்கேயாவது உன்னைப் போகச் சொன்னால் என்னிடம் வந்து சொல்லு. நான் பார்த்துக் கொள்கிறேன்!" என்றார். "என்னிடம் சொல்ல உன்னால் முடியவில்லை என்றால் அம்மாவிடமாவது உடனே சொல்லிவிடு!" என்றார் மேலும்.

பாபுவுக்கு இது இன்னும் விசித்திரமாகப் பட்டது. உண்மை எப்படியெல்லாம் திரிந்து போகிறது என்பதை எண்ணி அவன் வேதனையோடு சிரித்துக் கொண்டான். அதற்கு ஏற்றாற்போல் மீனாட்சியம்மாள் மறுநாள் மாலை தன் கணவனோடு காரில் ஏறி உட்கார்ந்து கொண்டதும், பாபுவை வண்டிக்கு அருகில் கூப்பிட்டு, "எங்கே எங்களுக்கு முன் கிளம்புகிறாய்? நாங்கள் வரும் வரையில் நீ எங்கும் போகவேண்டாம். வீட்டை விட்டு அசையாதே!" என்று எச்சரிப்பது போல் கூறிவிட்டுச் சென்றாள்.

பாபு தலையை ஆட்டி வைத்தான். ஆனால் அவனுடைய அகக் கண்ணெதிரே உஷாவின் களங்கமற்ற மதிமுகமும் அழகிய தடங் கண்களும் யாரையோ காணாமல் வாடி ஏங்குவது போல் காட்சியளித்தன. சங்கத்துக்குப் போகிற சாக்கில் உஷாவின் நடனத்தையும் பார்த்து விட்டுப் போகலாம் என்று நிறுத்தி வைத்திருந்த சைக்கிளைப் பார்த்து ஏக்கப் பெருமூச்சு விட்டான் அவன். பாபுவின் உள்ளம் அடைந்த வேதனையைச் சொல்லி முடியாது.

## அத்தியாயம் 26

# விருந்து வைபவம்

மீனம்பாக்கம் நிலையத்தில் விமானம் வந்து சேர்வதற்குச் சில நிமிஷங்கள் இருந்தன. பாரிஸ்டர் மிகவும் உற்சாகமாகக் காணப்பட்டார். வந்திருந்தவர்களிலே அவரே முதன்மையாக இருப்பவர் போல்தோன்றினார். 'பீ-ஹைவ்' கம்பெனி ஊழியர்களும் சிப்பந்திகளும் அவரையே யோசனை கேட்டு நடந்துகொண்டார்கள். யார் மாலை போடுவது, யார் முதலில் செல்வது, எப்படி வரவேற்பது என்றெல்லாம் பாரிஸ்டர் அவர்களுக்கு ஆலோசனை கூறியிருந்தார். பாரிஸ்டரோடு விமான நிலையத்துக்கு வந்திருந்த சொர்ணம்பாளுக்கும் இது பெருமையாகத்தான் இருந்தது. மற்றவர்களுடைய உற்சாகம் அவளையும் தொற்றிக் கொண்டது. ஆயினும் உள்ளத்தின் ஒரு கோடியிலே அவளை ஏதோ ஒன்று உறுத்திக் கொண்டிருந்தது. உஷாவையும் சுந்தரியையும் ஒரே சமயத்தில் மாறி மாறிப் பார்த்து அவள் பெருமூச்செறிந்தாள்.

காலை நேரத்து வானம் நிர்மலமாக இருந்தது. பஞ்சுத் துண்டு பறப்பது போல் இரண்டு மூன்று மேகத் துணுக்குகள் மட்டும் குணதிசையில் காணப்பட்டன. காலைச் சூரியன் இளம் பதமாக உறைக்கத் தொடங்கிவிட்டான். சிங்கப்பூர் விமானம் வந்து கொண்டிருப்பதாக அறிவிப்பு வந்ததும், எல்லாரும் மைதானத்துக்குச் செல்லும் வழியில் போய் நின்று கொண்டார்கள். கீழ் வானத்தில் புள்ளிபோல் தெரிந்த விமானம், வரவரப் பெரிதாகி, வெய்யில் பட்டுக் கண்களைக் கூச வைத்தது. விமானம் நிலையத்தின் வடக்கெல்லையை நோக்கிச் சென்றது. அங்கிருந்துதான் அது நிலையத்து ஓட்டத்தில் இறங்கி வந்து நிற்க வேண்டும்.

அப்போது பாரிஸ்டர் எதற்காக நிலைய வாயிலை எட்டிப் பார்த்தாரோ, தெரியவில்லை. பார்த்த இடத்தில் அவர் பார்வை நிலைத்து விட்டது. அதே கார்தான்! அதே பெண்தான்! ஐந்தாறு வருஷங்களுக்கு முன்பு, தேன்கூட்டுப் பங்களாவில் கண்ணபிரானைத் தேடிக்கொண்டு போனபோது, பின்னால் வந்து நின்ற புத்தம் புது வண்டிதான் இன்னும் மெருகு குலையாமல் காணப்பட்டது. பாரிஸ்டரின் ஞாபக சக்தியைச் சோதித்துப் பார்ப்பது போல், கண்ணபிரானுக்கு அருகில் அமர்ந்திருந்த பெண் இன்னும் இன்று இளமையாக மாறியிருந்தாள். அவளே வண்டியை ஓட்டி வந்திருப்பதைக் கண்ட பாரிஸ்டரின் முகம் சட்டென்று சுண்டிப் போய் விட்டது.

"பாரிஸ்டர் சார் எங்கே?" என்று பல குரல்கள் அவரைத் தேடி அழைத்துக் கொண்டிருந்ததைப் பார்த்துவிட்டு, அவர் காரில் கண்ட காட்சியை மறந்துவிட்டு விமானத்தைப் பார்க்க ஓடினார். சொர்ணம்பாளையும் தம் குமாரிகள் இருவரையும் தம் பக்கத்திலேயே நிற்கச் சொல்லிவிட்டு, பெரிய ரோஜா ஹாரத்தையும் பூச்செண்டையும் சுமக்கமாட்டாமல் சுமந்து கொண்டு அவர் நின்றார். எட்டின வரையில் பார்த்தும் காரில் வந்து காத்திருந்தவள் உள்ளே அவனை வரவேற்க வந்திருப்பதாகத் தெரியவில்லை. அவள் காரிலேயேதான் இருந்திருக்க வேண்டும்.

விமானம் நிலத்தை யடைந்தது. சிப்பந்திகள் இருவர் இணைப்புப் படியைக் கொண்டுபோய்ப் பொருத்தினார்கள். கதவு திறந்ததும் கண்ணபிரான் முகமலர்ச்சியோடு படிகளில் இறங்கி வந்தான். முன்பு பார்த்ததைவிட அவன் சிறிது சிவந்து, மெலிந்து ஒரு நூலிழை உயர்ந்து காணப்பட்டான். அவன் முகத்தைக் கண்டதுமே அவன் வானுலகத்திலிருந்து வந்திருப்பதாகவே கருதி, மாலைகளிட்டு அவனை அனைவரும் உற்சாகத்தோடு வரவேற்றார்கள். பரமசிவம் அவன் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு முன்னால் நடந்தார். எல்லாரையும் அவன் ஒரே விதமான புன்னகையுடன்தான் பார்த்துத் தெரிந்து அறிமுகமும் செய்து கொண்டான்.

"இது யார் உஷாவா?"

கண்ணபிரானின் கண்கள் வியப்பினால் விரிந்தபோது, உஷாவின் முகம் ரோஜா மலரைப் போலச் சிவந்து விட்டது. அவள் உதட்டை மடித்துக் கொண்டு முகத்தை வேறு புறமாகத் திருப்பிக் கொண்டாள்.. அவளுக்கு அவன் பார்த்த விதமும் கேட்ட விதமும் கூச்சத்தைக் கொடுத்தன.

"இவளைத் தெரியுமா, தம்பி, உங்களுக்கு?" என்று ஆசையோடு முன் வந்து கேட்டாள் சொர்ணம்பாள்.

"தெரியவில்லையே...இது..."

"இவள்தான் சின்னவள்; உஷாவின் தங்கை!"

"அப்படியா?" என்று சொல்லும் போதே அவன் பார்வை விமான நிலையத்துக்கு வெளியே இருந்த காரின் மீது சென்றது.

இதைப் பாரிஸ்டர் மட்டுமே கூர்ந்து கவனித்தார். இருவரும் ஒருவரைப் பார்த்து ஒருவர் புன்னகை செய்து கொண்டார்களா, என்ன? இருவருமே புன்சிரிப்பு அரும்பிய முகத்தோடுதான் இருந்தார்கள்.

காரில் ஏறும்போது அவர் குப்பனிடம் தனியாக, "முன்பு தேன்கூட்டுப் பங்களாவில் பார்த்தோமே, அந்தப் பெண்தானே அங்கே காரில் இருப்பவள்? நீ கவனித்தாயோ?" என்று கேட்டார்.

"நினைச்சேன். அந்தப் பெண்ணைப் போலத்தான் இருக்கு. ஆனா அது சின்ன



எங்கள் திருமணத்திற்கு நேரில் சமூக மளித்திருந்தவர்களுக்கும், வாழ்த்துக்கள் அனுப்பியவர்களுக்கும், பரிசுகள் வழங்கியவர்களுக்கும், உறவினர்கள், நண்பர்கள் அனைவருக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

குப்புசாமி — கமலாம்பாள்

---

எஜமானைப் பார்க்க வந்ததாகத் தெரியலியே!" என்றான் குப்பன்.

அவனும் தம்மைப் போலவே எண்ணுவதால் அது ஏதோ அப்போது தற்செயலாக நடந்த சம்பவம் என்று ஒதுக்கிவிடப் பார்த்தார் பரமசிவம். ஆனால் மறுநாள் இரவு சம்பிரமமாக நடந்த விருந்தின் போது அந்தப் பெண் கண்ணபிரான் உட்கார்ந்திருந்த இடத்துக்கு எதிரே இருந்ததைப் பார்த்ததும், அவருக்குப் பெரிய அதிர்ச்சியாக இருந்தது.

விருந்து ஏற்பாடுகள் யாவும் மிகமிக விமரிசையாக இருந்தன. அவருடைய ஜூனியர்களும் குமாஸ்தாக்களும் வந்திருந்து எல்லா ஏற்பாடுகளையும் ஒரு குறைவும் இல்லாமல் செய்திருந்தார்கள். பங்களாவின் வலது புறத்தில் நடனக் கச்சேரிக்காக ஒரு திறந்தவெளி அரங்கத்தையே அவர்கள் அமைத்திருந்தார்கள். சென்னை நகரத்தின் பெரிய மனிதர்களும் பெண்மணிகளும் வந்து அந்த விருந்துபசாரத்தில் கலந்து கொண்டிருந்தார்கள். சாலையில் எட்டின வரையில் ஒரே வண்டிகளாகத் தெரிந்தன. விருந்துக்கு வந்திருந்த அத்தனை பேரையும் வாயிலில் நின்று வரவேற்ற பரமசிவம் தம்பதிகள் கண்களில் படாமல் அந்தப் பெண் எப்படி அங்கே வந்து அமர்ந்திருந்தாள்? இவளுக்கு யார் அழைப்பு அனுப்பினார்கள்? இவளுடன் இன்னும் யார் வந்திருக்கிறார்கள்? இவ்வளவையும் அவர் அந்தக் கணத்திலேயே தெரிந்துகொண்டு விட எண்ணினார். அழைப்பாவது டீ-ஹைஹவ் கம்பெனி மூலமாக அவளுக்குப் போயிருக்கலாம். ஆனால் அவள் யார் என்பதை எப்படித் தெரிந்து கொள்வது? குற்றவாளியையே கூச்சமில்லாமல் குறுக்குக் கேள்விகள் கேட்டுப் பழகியவர் பாரிஸ்டர். அவருக்கு அவளையே கேட்டுத் தெரிந்து கொள்வது ஒரு பெரிய காரியமல்ல. ஆனால் பிறர் இதைத் தவறாக எண்ணாமல் இருக்க வேண்டுமே. அவளும் இதைத் தவறாகக் கருதாமல் விடை கூற வேண்டுமே. எப்படியோ அவர் அதற்கு ஆயத்தமாகி விட்டார்.

விருந்து நடைபெற்ற இடம் சிரிப்பும் கலகலப்புமாக இருந்தது. முக்கிய விருந்தாளியாக அமர்ந்திருந்த கண்ணபிரானுக்கு அருகேதான் பாரிஸ்டர் தம்பதிகளுக்கு இடம் விடப்பட்டிருந்தது. பாரிஸ்டர் வந்து அந்தப் பெண்ணுக்கு அருகே காலியாக இருந்த இடத்தில் உட்காரப் போனபோது, "இப்படி எனக்குப் பக்கத்தில் உங்களுக்கு இடம் வைத்திருக்கிறேனே!" என்றான் கண்ணபிரான் காருக்காக.

பாரிஸ்டருக்கு வேறு வழியில்லை. பிறகு கண்ணபிரான் திடீரென்று அந்தப் பெண்ணைப் பார்த்து, "என்ன லீலா! எங்கே என் அழைப்பு வந்து சேராமல் நீங்கள் யாரும் வராமல் இருந்து விடுவீர்களோ என்று பார்த்தேன்" என்று மிகவும் நிதானமாகக் கூறினான்.

லீலா ஒயிலாகச் சிரித்து விட்டு வெறுமனே தலையைப் பூங்கொத்துப் போல் அசைத்தாள். அந்தத் தலையசைப்புக்குக் கண்ணபிரான் என்ன பொருள் செய்து கொண்டானோ, அது பாரிஸ்டருக்குச் சிறிதும் விளங்கவில்லை. அவர்தான் மூத்த தலைமுறையைச் சேர்ந்தவராயிற்றே! இதெல்லாம் அவருக்கு எப்படிப் புரியும்? "பெயரே லீலா தானோ, இல்லை..." என்று அவர் இழுத்தார்.

கண்ணபிரான் சிரித்துக் கொண்டே, "முழுப் பெயர் சுசீலா! சு போய், சீ வந்து லீயாகிவிட்டது!" என்றான்.

பாரிஸ்டருக்கு ஏனோ விருந்தே கசந்தது. மற்றவர்கள் சிரிப்பும் கொம்மாளமுமாக விருந்தை ரசித்துக் கொண்டிருந்தார்கள். தம்முடைய கனவுக் கோட்டை இடிந்து நொறுங்கி விட்டதுபோல் பாரிஸ்டர் லீலாவையும் கண்ணபிரானையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்கு அதற்கு மேல் அந்த இடத்தில் இருக்க முடியவில்லை.

விருந்து நடைபெற்ற இடத்திலிருந்து அனைவரும் கோஷ்டி கோஷ்டியாகத் திறந்தவெளி அரங்கில் போய்க் கூடினார்கள். தம்முடைய ஸ்தானத்தில் நீதிபதியை வைத்துவிட்டு நடன ஏற்பாடுகள் எந்த மட்டில் இருக்கிறது என்பதைக் கவனிக்கச் சென்றார் பாரிஸ்டர்.

ஆனால் அந்தக் கௌரவப் பதவியை நீதிபதியால் உடனே ஒப்புக்கொள்ள முடியவில்லை. மிஸஸ் மீனாட்சி குறிப்பிட்ட திசையில் அவர் தம் பார்வையைச் செலுத்தினார். அங்கே வாயில் பீடாவைப் போட்டுக் குதப்பிக்கொண்டு, ரிங் மாஸ்டர் உடையில் யாரிடமோ பேசிக் கொண்டிருந்தான் சேகர்.

நீதிபதி ராமசுந்தரத்துக்கு மானம் போவது போல் இது வேதனையாக இருந்தது. 'இவளை யார் அழைத்தார்கள்? இவள் எதற்காக இங்கே வரவேண்டும்?' என்று அவர் வெளியில் சொல்லிக் கொள்ள முடியாமல் பல்லைக் கடித்தார்.

"லீலா! இப்படி இந்தப் பக்கம் வந்து உட்கார்ந்து கொள்வதுதானே!" என்று அழைத்தான் கண்ணபிரான். லீலா உடனே அவனுக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டதைப் பாரிஸ்டர் மேடைக்கு அருகிலிருந்து பார்த்துக் கொண்டுதான் இருந்தார். பேசாமல் நடனக் கச்சேரியையே நிறுத்தி விடலாமா என்றுகூட அவருக்கு ஆத்திரம் பொங்கியது. ஆனால் அது எப்படி முடியும்?

மிஸஸ் மீனாட்சியை அழைத்து ஏதோ பேசுவதற்காக அப்போதுதான் திரும்பினாள் சொர்ணம்பாள். பாக்கு மரத்தின் மட்டையைப் பிடித்துக் கொண்டு பாபு வந்து நிற்பதை அவள் கண்கள் கண்டன. சேகருடன் அவன் பேசிக் கொண்டிருந்தான்.

பக்க வாத்தியங்கள் சுருதி சேர்க்கப்பட்டு விட்டன. முன்னால் விடப்பட்டிருந்த திரை விலகியது. பளிச்சென்று ஆபரணங்களின் பிரகாசம் கண்களைப் பறிக்க, அழகுப் பிம்பமாய்த் தோன்றினாள் உஷா.

(தொடரும்)

# உங்கள் வீட்டு அழகுக்குப் பொருத்த மானது

ஓரியண்ட் விசிறிகளின் புதிய அமைப்பு தோன்றுவதற்கு முன், உற்பத்திப்பொருள்களின் அழகில் கைத்தொழில் டிஸைனர்கள் அவ்வளவு அறிவு ஆற்றல் காட்டவில்லை.

உபயோகிப்பாளரைத் திருப்தி செய்யவேண்டும் என்று சிரத்தை மிக்க ஓரியண்ட் டிஸைனர்கள் உங்கள் அறையின் அழகுக்கு ஏற்ற நேர்த்தியான விசிறியைத் தயாரித்துத் தருகின்றனர்கள். சிருங்காரக் கோடுகள் வழவழப்பான அச்சுப்பெட்டியின் எல்லைப் புறங்கள் அமைந்த கேஸிங் என்றும் நிலைத்திருப்பதுமான முத்துப்போன்ற ஸ்டோவ் எனமல் பினிஷ் இவைகள் ஒவ்வொரு வீட்டிலும் அழகான சிற்பச்சித்திர மாக அமைந்திருக்கிறது. மகிழ்ச்சியைத் தரும் வஸ்து. வேலைத் திறனில் உத்தமமானது




**ஓரியண்ட் விசிறி-தோற்றத்திலும் சேவையிலும் பல வருடங்கள் முன்னதாக நிற்கிறது.**

ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட்.
6 கோர் பீபி லேன், கல்கத்தா-17

# பாண்டிமாதேவி

அத்தியாயம் 24

## சிதைந்த கனவுகள்

அரண்மனைக் கோட்டைக் கதவுகள் எல்லாம் மூடப்பட்டு விட்டன. வெளிப்புறம் பராந்தகப்பெருவாயிலுக்கு அப்பால் கலகக் கூட்டம் வெள்ளமெனப் பெருகிக் கொண்டிருந்தது. கலகக்காரர்களின் வெறிக் கூப்பாடுகள் பயங்கரமாக ஒலித்தன. சேந்தனையும், குழல்மொழியையும் வெளியே அனுப்பா விட்டால் கதவை இடித்துக் கொண்டு உள்ளே புகுந்து விடப் போவதாகப் பயமுறுத்திக் கொண்டிருந்தார்கள் அவர்கள்.

இத்தகைய பயங்கரமான சூழ்நிலை வெளியே நிலவிக் கொண்டிருக்கும்போது தான் சேந்தன் தான் கொண்டு வந்திருந்த மகாமண்டலேசுவரரின் இறுதிக் காலத்தில் எழுதப்பட்ட ஓலைச் சுருளை விரித்து மகாராணியிடம் கொடுத்தான்.

"இராசசிம்மா! இதைப் படித்துச் சொல்"—என்று குமாரபாண்டியனிடம் அதைக் கொடுத்தார் மகாராணி. துக்கம் அடைக்கும் நலிந்த குரலும், நீரரும்பும் கண்களுமாக அவர் அப்போது தோற்றமளித்த நிலை எல்லோருடைய உள்ளங்களையும் உருக்கியது. சேந்தனும் கண்கலங்கிப் போய் வாட்டத்தோடு காட்சியளித்தான். குழல்மொழி தலைநிமிரவே இல்லை. கண்கள் சிவந்து முகம் வீங்கி அழுதழுது சோகம் பதித்த கோலத்தில் நின்றாள் அவள். மற்றவர்கள் அமைதியாக நின்று கொண்டிருந்தார்கள். குமாரபாண்டியன் எல்லோரும் கேட்கும்படியாக மகாமண்டலேசுவரரின் இறுதித் திருமுக ஓலையை இரைந்து படித்தான்:—

"அன்புக்கும், மதிப்புக்கும் உரிய மகாராணி வானவன் மாதேவிக்கு இடையாற்றுமங்கலம்நம்பி இறுதியாக எழுதும் திருமுகம். தேவி! இந்தத் திருமுக ஓலையை நீங்கள் படிக்குமுன் நான் இவ்வுலக வாழ்வினின்றும் விடைபெற்றுச் சென்று விடுவேன். என்னுடைய மரணத்துக்காக நீங்களோ, குமாரபாண்டியரோ, சற்றேனும் வருந்த வேண்டியதில்லை. இந்த விநாடிக்குப் பின் இனி ஒரு கணம் வாழ்ந்தாலும் நானோ என் அறிவோ எதிலும் வெற்றி பெற முடியாது. தீபத்தில் எண்ணெய் வற்றியதும் திரியும், சுடருமே அழிந்து விடுகிற மாதிரி நல்வினைப் பயன் நீங்கியதும், எவ்வளவு பெரிய மனிதனுயிருந்தாலும் அறிவும், முயற்சியும் பயன்படாது! அருள் கலக்காத முரட்டு அறிவுக்கு என்றாவது ஒரு நாள் இந்தத் தோல்வி ஏற்படத்தான் செய்யும். தளபதி வல்லாளதேவன் என்னைச் சரியாகப் புரிந்து கொள்ளாமலே என்னென்னமோ செய்துவிட்டான். அதைப் போல் இறுதியில் சில சமயம் நானும் அவனைப் புரிந்து கொள்ளாமல் என்னென்னவோ செய்து விட்டேன். அறிவும், வீரமும், பகைத்துக் கொண்டதால் ஒரு நாட்டுக்கு எவ்வளவு கெடுதல்கள்? எப்போதாவது முடிந்தால் ஒரே ஒரு சந்தேகத்தை மட்டும் நீங்கள் தளபதிக்குத் தெளிவு செய்து விடவேண்டும். 'அவன் தங்கையின் மரணத்துக்கு நான் காரணமில்லை' என்பதுதான் நீங்கள் அவனுக்குத் தெளிவு செய்ய வேண்டிய மெய். பெரிய காரியங்களை நிறைவேற்ற முடியாமல் இலட்சிய பங்கமும், மானக்கேடும் ஏற்பட்டால் வடக்கு நோக்கி உண்ணா நோன்பிருந்து உயிர் விடுவது நம் தமிழ்க் குலத்து மரபு. நானும் இடையாற்றுமங்கலத்துச் சிவன் கோவில் குறட்டில் அமர்ந்து வடக்கு நோக்கி இந்த வாழ்வை முடித்துக் கொள்ளத் தீர்மானித்து விட்டேன். சாவு தீர்மானப்படிதான் வரவேண்டுமென்பதில்லையே? என் தீர்மானத்தை முந்திக் கொண்டு வந்தாலும் அதை வரவேற்க நான் தயங்க மாட்டேன்.

"இந்தக் கடைசி நேரத்தில் யாரும், எப்போதும், எதிர்பார்த்திராத ஒரு காரியத்தை நான் செய்யப் போகிறேன். இத்தனை காலமாக என்னிடம் உண்மையாக ஊழியம் செய்த நாராயணன் சேந்தனுக்கு என் மகள் குழல்மொழியைமணம் முடித்துக் கொடுத்துவிடப் போகிறேன். இதைவிடப் பெரிய நன்றி அவனுக்கு நான் வேறென்ன செய்ய முடியும்?"......

இரைந்த குரலில் படித்துக் கொண்டே வந்த குமாரபாண்டியன் படிப்பதை நிறுத்தி விட்டுத் தலை நிமிர்ந்து சேந்தனையும், குழல்மொழியையும் மாறி மாறிப் பார்த்தான். அடாடா! அப்போது குமாரபாண்டியனின் முகத்தில் தான் எத்தனை விதமான உணர்ச்சிச் சாயல்கள் சங்கமமாகின்றன. அவனைப் போலவே மற்றவர்களுடைய பார்வையும் சேந்தன் மேலும் குழல்மொழி மேலும்தான் திரும்பிற்று. சேந்தனும், குழல்மொழியும் ஏதோ பெரிய குற்றம் செய்து விட்டவர்களைப் போல் தலைநிமிராமலிருந்தார்கள். முகத்தில் உணர்ச்சிகளின் குருவளி தோன்றி விழிகள் சிவந்து போய்க் குழல்மொழியிடம் எதையோ கேட்டு விடுவதற்குத் துடித்தன குமாரபாண்டியனின் உதடுகள். அவளோ அவன் முகத்தை நிமிர்ந்து பார்க்கவே இல்லை. அந்தச் சமயத்தில், "மேலே படி." என்று மகாராணியின் தழுதழுத்த குரல் அவனைத் தூண்டியது. குமாரபாண்டியன் மேலே படிக்கலானான்: முதற்பகுதியைப் படித்ததைவிட அவன் குரல் கைத்திருந்தது. "எனக்கு மகளாகப் பிறந்த காரணத்தால் குழல்மொழிக்கு இருக்கிற அகந்தையும், ஆணவமும், இந்தப் புதிய உறவு

மூலம் அழிந்துவிட வேண்டுமென்பது என் ஆசை. என் பெண்ணையும், சேந்தனையும், துன்பங்களும், பகைகளும் பெருகி வரும் சூழலில் தனியே ஒரு பாதுகாப்புமின்றி விட்டுச் செல்கிறேன். அவர்கள் வாழ வேண்டும். நாட்டில் எனக்கிருக்கும் எதிர்ப்பின் பகையை அவர்களை அழிக்க முயலாமல் உங்களுக்கு அடைக்கலமாக அவர்களை அளிக்கிறேன். எப்படியாவது அவர்களை வாழ விடுங்கள். என்னுடைய அறிவின் பிடிவாதங்களால் இந்த நாட்டுக்கு விளைந்த துன்பங்களுக்காக என்னை மன்னியுங்கள். குமார பாண்டியரையும் மன்னிக்கச் சொல்லுங்கள். 'மகாமண்டலேசுவரர்' என்ற மனிதரை ஒரு கெட்ட சொப்பனம் கண்டது போல் மறக்க முயலுங்கள்!"

குமாரபாண்டியன் அதைப் படித்து முடித்தான். மழை பெய்து ஓய்ந்தாற் போன்ற ஒரு வகை அமைதி அவர்களிடையே நிலவியது. அந்த அமைதிக்கு நேர்மாறாக வெளியே கலகக்காரர்களின் வெறியாட்டம் நடந்து கொண்டிருந்தது. பராந்தகப் பெருவாயிலை இடித்துத் தகர்த்து விட்டு உள்ளே நுழைய முயற்சி செய்து கொண்டிருந்தார்கள்.



மகாமண்டலேசுவரரின் ஓலையைப் படித்து முடித்த பின் சிறிது நேரம் ஒன்றும் பேசத் தோன்றாமல் நின்றார் மகாராணி. குழல்மொழியின் உள்ளம் எப்படி அந்த மணத்துக்கு உடன்பட்டதென்று புரியாமல் மனங்குழம்பி நின்றான் குமாரபாண்டியன். "இராசசிம்மா! வீரமும், வெற்றியும் அரியணையேறி ஆளும் திருவும் இன்னும் உனக்குக் கிடைக்கிற காலம் வரவில்லை போலிருக்கிறது! மகாமண்டலேசுவரரோ போய் விட்டார். அவருடைய இந்த ஓலையைப் படித்த பின் என் நம்பிக்கைகளே அழிந்து விட்டது போல் துயரமாயிருக்கிறது எனக்கு. தளபதி ஆகாதவனாகி விட்டான். கூற்றத் தலைவர்களும் ஆகாதவர்களாகி விட்டார்கள். இனி யாரை நம்பி, எதை நம்பி நாம் வெற்றியை நினைக்க முடியும்? எனக்கு ஒரு வழியும் தோன்றவில்லை. அப்பா! போ; உன்னால் முடியுமானால் இன்னும் சிறிது நேரத்துக்கு இந்த அரண்மனையைக் கலகக்காரர் கையில் சிக்க விடாமல் காப்பாற்று. அதற்குள் நான் மகாமண்டலேசுவரரின் பெண்ணையும், அவள் கணவன் சேந்தனையும் இங்கிருந்து பாதுகாப்பான இடத்துக்குக் கூட்டிக் கொண்டு போய் விடுகிறேன்" என்று குமாரபாண்டியனை நோக்கி வேண்டிக் கொண்டார் மகாராணி.

"அம்மா! இப்படி ஒரேயடியாக நம்பிக்கை இழந்து பேசினால் என்ன செய்ய முடியும்? நாம் இருவரும் தளபதியையும், கூற்றத் தலைவர்களையும் சந்தித்துப் பேசிச் சமாதானப்படுத்தலாம்" என்றான் இராசசிம்மன்.

"மகனே! இந்த நாட்டின் வெற்றியைப் பற்றிக் கவலைப்பட்டால் என்னிடம் அடைக்கலம் அளிக்கப்பட்ட இவர்களை யார் காப்பாற்றுவது? இவர்களுக்கு அழிவு வராமல் வாழ வைக்க வேண்டுமென்பது மகாமண்டலேசுவரருடைய கடைசி ஆசை. அதை நான் முதலில் நிறைவேற்றியாக வேண்டும். நம்பிக்கையைக் காப்பாற்றிய பின் நாட்டைக் காப்பாற்ற வருகிறேன். நீ போய் நான் கூறியபடி வாயிற்புறத்துக் காவலை உறுதியாக்கு ... நிற்காதே ... உடனே செல்"— மகாராணியின் குரலில் பரபரப்பு நிறைந்திருந்தது. கடைசியாக ஒரு முறை குழல்மொழியைப் பார்த்துவிட்டு நடந்தான் இராசசிம்மன். அவன் காவலைக் கெட்டிப் படுத்துவதற்காகப் பராந்தகப் பெருவாயிலுக்குச் சென்றதும் சேந்தனையும், குழல்மொழியையும் தழுவி அழைத்துக் கொண்டு தமது அந்தரங்க அறைக்குச் சென்றார் மகாராணி. புவனமோகினியைக் கூப்பிட்டு, "புவனமோகினி! இந்த அரண்மனைக் கருவூலத்திலுள்ள விலை மதிப்பற்ற உயர்ந்த ஆடையணிகலன்களை யெல்லாம் தேர்ந்தெடுத்து இந்தப் பெண்ணை அலங்காரம் செய்து கொண்டு வா" என்று சொல்லிக் குழல்மொழியை ஆவலோடு அனுப்பினார்.

சேந்தன் எவ்வளவோ மறுத்தும் கேட்காமல் அவனையும் பட்டு பீதாம்பரங்கள் உடுத்து மணக்கோலம் பூண்டு வரச் செய்தார். பவழக்கனிவாயர், ஆசிரியர், விலாசினி எல்லோரையும் சூழ இருக்கச் செய்து குழல்மொழியையும் சேந்தனையும் மாலை மாற்றிக் கொள்ளுமாறு மணக்கோலம் கண்டு மகிழ்ந்தார். எல்லாருமாகச் சேர்ந்து மணமக்களுக்கு மங்கல வாழ்த்துக் கூறினார்கள். அந்தச் சமயத்தில் இராசசிம்மன் வேகமாகவும், பரபரப்பாகவும் அங்கே ஓடி வந்தான். அவன் முகத்தில் பயமும், குழப்பமும் தென்பட்டன.

"அம்மா! பராந்தகப் பெருவாயில் தகர்ந்து விட்டது. கலகக்காரர்கள் உள்ளே புகுந்து விட்டார்கள். இப்போதிருக்கிற வெறியையும், ஆவேசத்தையும் பார்த்தால் அவர்களை யாராலும் சமாதானப்படுத்த முடியாது போலிருக்கிறது. 'மகாமண்டலேசுவரரின் மகளையும், ஒற்றனையும் கொன்று பழி வாங்குவோம்' என்று கூச்சலிட்டுக் கொண்டு கொலை வெறியோடு ஓடி வருகிறார்கள். ஒரு விநாடிகூட இனிமேல் இங்கே தாமதிப்பதற்கில்லை. எப்படியாவது இவர்களைக் காப்பாற்ற வேண்டும்" என்று கலவரம் மிகுந்த குரலில் பதற்றத்தோடு கூறினான் குமாரபாண்டியன். குழல்மொழியை மணக் கோலத்தில் கண்ட போது அந்தக் குழம்பிய சூழ்நிலையிலும் அவன் மனத்தையும் கண்களையும் அடக்கிக் கொண்டான். ஏக்கத்தைப் பெருமூச்சாக வெளித் தள்ளினான். எங்கோ வெறித்து நோக்கியவாறு நின்ற மகாராணி அவனைப் பார்த்துக் கூறுவார் :

"இராசசிம்மா! எல்லோருமே வெளியேறிவிடலாம். உனக்கும், எனக்கும் இந்த அரண்மனையில் இனி ஒரு வேலையுமில்லை. உன்னுடைய எண்ணங்களும், என்னுடைய ஆசைகளும் நிறைவேறும் காலம் இன்னும் வரவில்லை போலிருக்கிறது. பாண்டியப் பேரரசின் பெருமையும் புகழும் பரவுவதற்குரிய சீலம் உன் தந்தையின் காலத்துக்குப்பின் இல்லையோ என்னவோ? நாம் கொடுத்து வைத்தது அவ்வளவுதான். கவலைப்பட்டுப் பயனில்லை. நீ போய் அந்தப்புரத்துக்குள் நுழையும் பிரதான வாயில்களை அடைத்துவிட ஏற்பாடு செய். போர்க் காலங்களில் அரண்மனைப் பெண்கள் தப்பி வெளியேறுவதற்காக நந்தவனத்து நீராழி மண்டபத்துக்கருகிலிருந்து ஒரு சுரங்க வழி போகிறது. நீயும் வா! நாமெல்லோரும் அந்த வழியாக வெளியேறி விடலாம். சுசீந்திரத்துக்கு அருகிலுள்ள பாதிரித் தோட்டத்தில் கொண்டு போய் விடும் அந்த வழி. அங்கிருந்து பவழக்கனிவாயர் முதலியவர்களோடு சேந்தனையும் குழல்மொழியையும் பாதுகாப்பாக முன்சிறைக்கு அனுப்பி வைத்து விடலாம். அறக் கோட்டத்தில் போய்த் தங்கிக் கொண்டால் பின்பு அவர்கள் பாடு கவலையில்லை" என்று மகாராணி கூறிய போது சேந்தன் குறுக்

கிட்டான்: "தேவி! எங்கள் இருவருக்காகவும் தாங்கள் துன்பப்படக் கூடாது. தாங்கள் முன்சிறையில் என் தமையனோடு போய்த் தங்கி விட்டால் பின்பு எங்களுக்கு ஒரு குறையும் வராமல் அவர்கள் பார்த்துக் கொள்வார்கள். கலகக்காரர்களின் பகைமையும், பழி வாங்கும் வெறியும் உள்ளவரை நாங்களும் இருக்கிற இடம் தெரியாமல் மறைந்து வாழ்வதற்குத் தான் விரும்புகிறேம்" என்று நாராயணன் சேந்தன் பணிவுடனும் குழைவுடனும் மேற்கண்டவாறு பேசினுன்.

"எப்படியோ நன்றாக வாழ வேண்டும் நீங்கள். அது மகா மண்டலேசுவரரின் கடைசி ஆசை. அதைக் காப்பாற்றுவதற்கும், நிறைவேற்றுவதற்கும், நான் கடமைப் பட்டவள். வாருங்கள். நாம் இங்கிருந்து வெளியேறிச் செல்ல வேண்டிய நேரம் வந்து விட்டது. புவனமோகினி! நீ அந்தத் தீபத்தை எடுத்துக் கொள். சுரங்கப் பாதைக்குள் இருட்டு அதிகமாக இருக்கும்" என்று கூறிக் கொண்டே முன்னுல் நடந்தார் மகாராணி. குமாரபாண்டியன் அந்தப்புரத்துக் கதவை அடைத்துப் பாதுகாப்பு ஏற்பாடு செய்து விட்டு அவர்களோடு வந்து சேர்ந்து கொண்டான். அந்தச் சமயத்தில் அவனுடைய முகத்தைக்காண்பவர்களுக்கு உலகத்திலுள்ள விரக்தியெல்லாம் அங்கே வந்து குடிகொண்டு விட்டதுபோல்தோன்றியது. போர்க்களத்தில் சக்க சேனுதிபதியிடம் வாக்களித்து விட்டு இரவோடு இரவாகக் கிளம்பிய போது அவன் மனத்தில் உருவாகி எழுந்து ஓங்கி நின்ற நம்பிக்கை மாளிகை இப்போது இடிந்து தரை மட்டமாகி விட்டதைப் போல் ஒரு தாழ்வு மனப்பான்மை ஏற்பட்டது. மகா மண்டலேசுவரரின் மரணம், குழல்மொழியின் விநோதமான திருமணம், கலகக் கூட்டத்தின் பழி வாங்கும் வெறி, மகாராணியின் அவநம்பிக்கை எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து நினைக்கும் போது தன்னுடைய இனிய கனவுகளில் பெரும் பகுதி அழிக்கப்பட்டு விட்டது போல் உணர்ந்தான் அவன். அன்றொரு நாள் மழையும், புயலும் வீசிய இரவில் சுழ நாட்டுக் காட்டில் பாழ் மண்டபத்து இருளில் உட்கார்ந்து வாழ்க்கையின் முழுமையைப் பற்றிச் சிந்தித்ததை மறுபடியும் நினைத்துப் பெருமூச்சு விட்டான் அவன்

அவர்கள் எல்லோரும் நந்தவனத்துக்குப் போய்ச் சுரங்கப் பாதை ஆரம்பமாகிற இடத்தை அடைந்தனர். விதியைப் பின்தொடரும் பேதை மனிதனைப் போல் குமாரபாண்டியனும் அவர்களைப் பின்பற்றி அங்கே சென்ருன். அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்துக் கொண்டே துக்கம் வடியும் குரலில், "செல்வா! உன் முன்னேர் மன்னுதி மன்னராக வாழ்ந்து சிறந்த இந்த அரண்மனையை இறுதியாக ஒரு முறை பார்த்துக் கொள். இனி இந்த மாபெரும் அரண்மனை இருப்பதும், இல்லாததும் உனக்குக் கிடைப்பதும், கிடைக்காததும் விதியின் ஆணையைப் பொறுத்தது" என்றூர் மகாராணி. இராசசிம்மன் நிமிர்ந்து பார்த்தான். கதவுகள் உடைபடும் ஓசையும், சுவர்கள் இடிபடும் ஒலியுமாக அந்த அரசமாளிகை முடிவின் எல்லையில் இருந்தது. எல்லோரும் சுரங்க வழிக்குள் இறங்கி விட்டனர். புவனமோகினி தீபத்தோடு முன்னுல் சென்ருள். கடைசியாகக் குமாரபாண்டியனும் அதற்குள் இறங்கி மறைந்தான். ஊழ்வினையே சுரங்கமாகி வழி நடத்திச் செல்கிற மாதிரி ஒரு பொய்த் தோற்றம் உண்டாயிற்று.

எல்லோரும் சுரங்க வழியில் நடந்து செல்லும்போது ஓரிடத்தில் சேந்தன் விரைவாக நடந்து முன் சென்று விட்டதால் குழல்மொழி சற்றுப் பின்தங்கிச் சென்ருள். தளர்ந்து துவண்ட மென்னடையில் மெதுவாகச் சென்ற அவளை நெருங்கினுன்குமாரபாண்டியன். கொதிக்கும் மனத்துடன் ஏதோ ஒரு கேள்வியை அவளிடம் கேட்டுவிடத் துடித்தான் அவன். ஆனுல் குழல்மொழி அவனை அருகில் நெருங்கவே விடவில்லை. அவன் விரைந்து வருவது கண்டு தான் முந்திக் கொண்டு முன்னுல் சென்று விட்டாள். அப்படி அவள் நடையை வேகப்படுத்திக் கொண்டு முந்தின போது அவளுடைய கூந்தலிலிருந்து இரண்டு மல்லிகைப் பூக்கள் உதிர்ந்தன. அவளை நெருங்கி ஏதோ கேள்வி கேட்கும் துடிப்புடனே



நியூயார்க் 'சான்பரைன்'டின் ஓவர்ஸீஸ் மானேஜர் மார்ஷல் வி. நெல்சன் சமீபத்தில் பம்பாய் வந்திருந்தார். அச்சமயம், எவரேஸ்ட் அட்வர்டைசிங் கம்பெனிக் காரியாலயங்களுக்கு விஜயம் செய்தார். மானேஜர் நெல்சனுடன், பம்பாய் சன்பரைஸ்டைச் சேர்ந்த ஜெரால்ட் கிளார்க்கையும், எவரேஸ்ட் அட்வர்டைசிங் கம்பெனியைச் சேர்ந்த திரு அயான் பீர்பாய், ஜோசபின்ரால், ஆர். கே. ஜோனல்கர் ஆகியோர்களையும் படத்தில் காணலாம்.



வந்த குமாரபாண்டியன் காலடியில் அந்த மல்லிகைப் பூக்கள் மிதிபட்டதும் அப்படியே தயங்கி நின்று விட்டான். காலில் மிதிபட்ட பூக்களையும் முன்னால் விரைந்து சென்று சேந்தனை ஒட்டி நடக்கும் குழல்மொழியையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டே சிறிது நேரம் நின்றான் அவன். அவனுடைய மனத்துக்குள் ஏதோ ஒரு மெல்லிய உணர்வும் அப்படி மிதிபட்டு விட்டது போலிருந்தது. மிதிபட்ட பூக்களைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே மேலே நடந்தான் குமாரபாண்டியன். சுரங்கப் பாதை முடிந்து வெளியேறுகிற வரையில் யாரோடும், யாரும், பேசிக் கொள்ளவில்லை.

சுசீந்திரம் பாதிரித் தோட்டம் வந்தது. மகாராணி குழல் மொழியையும், சேந்தனையும் கையைப் பற்றிப் பவழக்கனிவாயரிடம் ஒப்படைத்தார். "பவழக்கனிவாயரே! அதங்கோட்டாசிரியரே! இவர்களை முன் சிறை அறக்கோட்டத்தில் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டியது உங்கள் பொறுப்பு. நாட்டை யார் அரசாண்டாலும் உங்களுக்கும் காந்தளூர் மணியம்பலத்துக்கும் என்றும் அழிவில்லை. நீங்கள் உள்ளவரை சேந்தனும், குழல்மொழியும் வாழ்வதைக் கண்டு வாழ்த்தி மகிழுங்கள்!"–என்று மகாராணி கூறியபோது, "தேவி! தாங்களும் காந்தளூர் மணியம்பலத்தில் வந்து எங்களுடனே இருந்து விடலாமே?" என்றார் பவழக்கனிவாயர்.

"நான் இருக்க வேண்டிய இடத்தை நானே முடிவு செய்து கொண்டு விட்டேன். நீங்கள் போய்வாருங்கள்" என்று கண்டிப்பாகச் சொன்னார் மகாராணி. யாரும் மறுத்துப் பேச முடியவில்லை. மகாராணியையும், குமார பாண்டியனையும் வணங்கி விடைபெற்றுக் கொண்டு எல்லோரும் புறப்பட்டுப் போய்விட்டார்கள். புவனமோகினி ஒருத்தி மட்டும் மகாராணியாரோடு இருந்து கொண்டாள்.

"மகனே! மேகத்தால் மறைக்கப்படும் சந்திரனைப்போல் இன்னும் சிறிது காலம் பாண்டி நாடு பகைவர் ஆட்சியில்தான் இருக்க நேரவேண்டும் போலிருக்கிறது. என்னைப் பிறந்த வீட்டில் — சேரநாட்டு வஞ்சிமாநகரத்தில் கொண்டு போய்விட ஏற்பாடு செய். இந்தப் பெண் புவனமோகினி என்னோடு துணை வருவாள். எங்கு போய் என்ன செய்வாயோ? மறுபடியும் நீ ஆளாகி இந்த நாட்டை வென்று ஆள்வதற்கு வந்தால் அப்போது நான் உயிரோடு இருந்தால் நாம் மீண்டும் சந்திப்போம்" என்று மகாராணி கூறிய போது, குமாரபாண்டியன், உணர்ச்சி வசப்பட்டுச் சிறு பிள்ளை போல் அழுது விட்டான். வஞ்சிமாநகர் புறப்படுமுன் தென்பாண்டி நாட்டுக் கோவில்களுக்கெல்லாம் கடைசியாக ஒரு முறை சென்று தரிசனம் செய்ய வேண்டுமென்று மகாராணி ஆசைப்பட்டார். அந்த ஆசையை நிறைவேற்ற இரண்டு நாட்கள் செலவழித்தான் குமாரபாண்டியன். மூன்றாம் நாள் காலை ஒரு பல்லக்கும், சுமப்பதற்கு ஆட்களும் தேடி மகாராணியையும், புவனமோகினியையும் ஏற்றி அனுப்பினான். அப்போது அவன், "அம்மா! வஞ்சிமாநகரத்துக்கு இங்கிருந்து அதிக நாட்கள் பயணம் செய்ய வேண்டும். கவனமாகப் போய்ச்சேருங்கள். நான் போர்க்களத்துக்குப் போய்ப் போரைக் கவனிக்கிறேன். நல்வினை இருந்தால் மறுபடியும் சந்திப்போம்!" என்று மனங் கலங்கிக் கூறினான்.

"இராசசிம்மா! உனக்கு என் பயணத்தைப் பற்றிக் கவலை வேண்டாம். வஞ்சிமாநகரப் பயணத்தை விட நீண்ட வாழ்க்கைப் பயணத்தை நான் கண்டாயிற்று. இனிப் பயமில்லை. போய் வா! வெற்றியானால் வென்று வா. தோல்வியானால் எங்கேயாவது போய் மறுபடியும் வெற்றிக்கு முயற்சி செய்" என்று அவன் மனக்கலக்கத்தைத் தேற்றி வாழ்த்தி விட்டு நிம்மதியாக வஞ்சிமாநகரத்துக்குப் புறப்பட்டார் மகாராணி. தாயைத் தன்னிடமிருந்து பிரிக்கும் அந்தப் பல்லக்குப் போவதையே பார்த்துக் கொண்டு நின்ற குமார பாண்டியன் அதன் தோற்றம் கண் பார்வையிலிருந்து மறைந்ததும் கண்ணில் துளித்த நீர் முத்துக்களைத் துடைத்துக் கொண்டு திரும்பினான். நான்கு புறமும் விழிகள் பார்க்க முடிந்த அளவு சுற்றிலும் பார்த்தான். மேலே வானத்தை அண்ணாந்து நோக்கினான். அந்தத் தென்பாண்டி நாடு அதன் வளம், அதன் அழகு, அதன் செல்வங்கள், அதன் தெய்வத் திருக்கோவில்கள், எல்லாம் சூனியமாய்ப் பாழ் வெளியாய், ஒன்றுமற்ற பழம் பொய்களாய்த் திடீரென்று மாறிவிட்டது போலிருந்தது. தன் பெருமையையும், புகழையும், இளவரசன் என்ற பதவியையும் மறந்து எவரோ ஒரு பேதை இளைஞன்போல் நடந்தான் அவன்.

## அத்தியாயம் 25

# புதியதோர் பெருவாழ்வு

மகாராணியை வஞ்சிமாநகரத்துக்குச் சிவிகை ஏற்றி யனுப்பி விட்டுப் போர்க்களம் நோக்கிப் புறப்பட்ட குமாரபாண்டியன் நடு வழியிலேயே அந்தத் துன்பச் செய்தியைத் தெரிந்து கொண்டான். வேதனைப்படுகிற அளவு கூட அவன் உள்ளத்தில் அப்போது தென்பில்லை. "முதல் நாள் காலை பதினொரு நாழிகை யளவில் வெள்ளூரை வடதிசைப்படைகள் கைப்பற்றி விட்டனவாம். சக்க சேனபதியும் அவரோடு எஞ்சியிருந்த சமநாட்டு வீரர்களும் விழிஞத்துக்கு ஓடிக் கப்பலேறி விட்டார்களாம்" என்ற செய்திதான் அது. அதைத் தெரிந்து கொண்டவுடன், "சக்க

# கால்கேட் நிரூபிக்கிறது!

## ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் க்ரீம்



## பற்களை சொத்தையாக்கும் கிருமிகளை 85 சதவிகிதம் ஒழிக்கிறது

—பற்பொடி பற்பசை உபயோகம் தெரிந்த நாள்முதல் சாப்பிட்டவுடன் பற்களை கால்கேட் முறையில் சுத்தம் செய்தல், அதிக மக்களுக்கு பெருமளவில் பற்களை சொத்தையாக்காமல் பாதுகாக்கிறது என்பதை விஞ்ஞான பரீக்ஷைகள் நிரூபித்துள்ளன.



## துர்நாற்றத்தை உடனேயே போக்குகிறது

—வாயில் உண்டாகும் துர்நாற்றத்தை 10-ல் 7-பேர்களுக்கு கால்கேட் உடனே அகற்றுகிறது என்று விஞ்ஞான பரீக்ஷைகள் எடுத்துக் காட்டுகின்றன.



## நாட்டுமக்கள் ருசிக்காக நாடுவது

—மற்றெல்லா டூத்பேஸ்ட்களைக் காட்டிலும் கால்கேட்டையே, அதன் மணத்திற்காக மக்கள் பெரிதும் விரும்புகிறார்கள் என்று பிரதானமான பற்பசைகளுக்காக நாடெங்கும் எடுக்கப்பட்ட புள்ளி விவரக் கணக்குகள் கூறுகின்றன.

மூன்று காரியங்களையும் சாதிப்பது கால்கேட் முறையே!
உங்கள் வாய் துர்நாற்றத்தை அகற்றுகையில்
உங்கள் பற்களை சுத்தி செய்து அவற்றை
சொத்தையாகாமல் தடுக்கிறது!

இந்தியாவிலே
அதிகமாக
விற்பனையாகும்
டூத்பேஸ்ட்!




**மிகச்சிறந்த பலனுக்கு எப்பொழுதும் கால்கேட் டூத்பிரஷ்ஷை உபயோகியுங்கள்**

DCG/27

சேனாபதியின் மேல் குற்றமில்லை! அவர் என்ன செய்வார்? பாவம்; பதினொரு நாழிகை வரை என்னை எதிர்பார்த்திருப்பார். நான் போகவில்லை. அவர் போய் விட்டார். நான் மட்டுமென்ன? நானும் போகவேண்டியதுதான். எனக்கு மட்டும் இங்கே என்ன வைத்திருக்கிறது? வெற்றியை நினைத்து வந்தேன். எல்லா வகையிலும் தோல்விதான் கிடைத்தது. பரவாயில்லை! இந்தப் பரந்த உலகத்தில் எங்கோவாவது ஒரு மூலையில் என் ஏக்கங்களையும், நிராசைகளையும் சுமந்து கொண்டு வாழ்வதற்கு இடமில்லாமலா போய்விடப் போகிறது? ஏக்கங்களும், நிராசைகளும், தோல்விகளும், அவநம்பிக்கைகளும் இருக்கின்றவரை நான் வெற்றியை எண்ணித் துடித்துக் கொண்டே இருப்பேன்!" என்று தனக்குத் தானே மெல்லச் சொல்லிக் கொண்டான். தன் எண்ணத்தை மாற்றிக் கொண்டு வேறு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன்போல் திரும்பி விழிஞத்துக்குப் புறப்பட்டான் அவன். சோர்வும், ஆயாசமும் தன் மனத்திலிருந்து நீங்கித் தோல்வி மறந்துபோக வேண்டுமானால் அப்படி மறக்கச் செய்வதற்கு ஏற்ற பரிபூரணமான உல்லாச நினைவு ஒன்று அப்போது அவனுக்குத் தேவைப்பட்டது. முழுமையும், செழுமையும், நிறைந்த அந்த உல்லாசம் தனக்குக் கிடைக்க முடியுமென்றே அவனுக்குத் தோன்றியது. கண்களை மெல்ல மூடி மனத்திலிருந்த மற்ற எண்ணக் குப்பைகளையெல்லாம் ஒதுக்கி வெறிந்து நினைவை ஒருமைப்படுத்தி எதையோ நினைக்க முயன்றான் அவன்.

அடுத்த கணமே அந்த முயற்சிக்கு வெற்றி கிடைத்தது. கொவ்வைச் செவ்வாயும் அதில் குமிண் சிரிப்புமாக மண்ணுலகத்துக் குதுவாதுகள் பதியாத மதிவதனம் ஒன்று குமார பாண்டியனின் உருவெளித் தோற்றத்தில் தெரிந்தது. 'காலம் காலமாய் வளர்ந்தோடும் நாட்களின் சுழற்சியைக் கணக்கிட்டுக் கொண்டு உங்களுக்காகவே காத்திருக்கிறேன் நான்! என் நினைவுகளின் வலிமையை ஒன்றாக்கி அன்புத் தவம் செய்து உங்களுக்காகவே தேய்ந்து ஓய்ந்து போய்க் கொண்டிருக்கிறேன். நீங்கள் எப்போது வந்து என் தவத்துக்கு வெற்றியைக் கொடுக்கப் போகிறீர்கள்?'—என்று அந்த அழகு முகத்திற் பவழ இதழ்கள் திறந்து தன் காதருகே மெல்ல வினவுவது போல் ஒரு உணர்ச்சிப் பிரமை அவனுக்கு ஏற்பட்டது. 'மின்னலில் ஒளியெடுத்து முகில்தனில் குழல்தொடுத்து' என்று அந்த மகாசௌந்தரியத்தை வியந்து அதனால் ஆண்டப் பெற்றுத் தான் முன்பு பாடிய கவிதையை அவன் முணுமுணுத்தான். இவ்வாறாக விழிஞத்துக்குச் செல்லும்போது அவன் கடந்து செல்லவில்லை. மதிவதனி என்னும் இனிய நினைவுகளைத் தென்றல் காற்றின் அலைகளாக்கித் தன் உணர்வுகளை மிதக்கச் செய்து விரைந்தான். அந்த விரைவில்




சு:—இப்பத்தான் டாக்டர் சொல்லிட்டுப் போனாரு, அந்த மனுஷன் ரத்தம் கெட்டுக் கிடக்காம். அவசியம் போய்க் கடிக்க வைக்காதே!

அவன் மனம் தாங்கிக் கொண்டிருந்த நினைவும், கனவும், உணர்வும் எல்லாம் ஒன்றே ஒன்றுதான். அதுதான் மதிவதனி என்னும் எழில்.

குமாரபாண்டியன் விழிஞத்தை அடையும்போது இரவு நீண்டு வளர்ந்திருந்தது. விழிஞத்து அரச மாளிகைக்குப் போய் அங்கிருந்த குதிரைக்காரக் கிழவனை எழுப்பி அவனிடமிருந்து வலம்புரிச் சங்கைப் பெற்றுக் கொண்டு துறைமுகத்துக்குச் சென்றான் அவன். ஆள் நடமாட்டம் குறைந்திருந்த அந்த இரவு நேரத்தில் தன்னை இன்னாரென்று எவரும் அடையாளம் கண்டு கொள்ள விடாமல் ஒதுங்கித் தயங்கி நடந்தான் அவன். "தென்பாண்டி நாட்டின் வளமும் பெருமையும் மிக்க ஒரே துறைமுகப் பட்டினமாக மேற்குக் கடற்கரையில் இலங்கும் அந்த நகரம் இன்னும் இரண்டொரு நாட்களில் வடதிசை அரசர்களின் ஆதிக்கத்துக்கு உட்பட்டு விடும். அதன்பின் எங்கு நோக்கினும் சோழர் புலிக்கொடி பறக்கும்! அதற்கப்புறம் சிறிது காலத்தில் அவ்வழகிய துறைமுக நகரம் ஒரு காலத்தில் பாண்டியர்களுக்குச் சொந்தமாக இருந்தது என்று பழங்கதை பேசுவதோடு நின்று போகும்" என்று இப்படி யெல்லாம் நினைத்தபோது குமார பாண்டியனுக்கு மனம் கொதிக்கத்தான் செய்தது. துயரத்தோடு கடந்து போய்ப் புறப்படுவதற்குத் தயாராக இருந்த ஒரு பயணக் கப்பலில் ஏறினான் அவன். இருளாயிருந்தாலும் அவன் ஏறுவதைக் கப்பலின் தளத்திலிருந்து பார்த்துவிட்ட

மீகாமன் ஓடிவந்து ஏறக்கூடாதென்று விழிகளை உருட்டிக் கோபத்தோடு பார்த்துப் பயமுறுத்தினான்.

அவன் தடுப்பதன் குறிப்பைப் புரிந்து கொண்ட குமாரபாண்டியன் மெல்லச் சிரித்துக் கொண்டே தன் இரண்டு முன் கைகளையும் அழகுசெய் இலங்கும் விலை மதிப்பற்ற பொற் கடகங்களைக் கழற்றி, "இந்தா, இதை வைத்துக் கொள்! என்னை இக் கப்பலில் பயணம் செய்ய விடு"—என்று சொல்லிக் கொடுத்தான். அவற்றை வாங்கிக் கொண்டதும் கண்கள் வியப்பால் விரியக் குமார பாண்டியனைப் பார்த்தான் அந்த மீகாமன். மரியாதையோடு விலகி நின்று ஏறிக்கொள்ள வழிவிட்டு வணங்கினான். குமாரபாண்டியன் கப்பலில் ஏறி அதிகம் ஒளி பரவாத இடம் தேடித் தளத்தில் உட்கார்ந்து கொண்டான். அங்கிருந்து பார்க்கும் போது அந்த இருளில் விழிஞம் துறை முகமும், அதற்கு அப்பால் பன்னெடுந் தொலைவு இரவால் மூடுண்டிருக்கும் தென்பாண்டி நாடும், தன்னைக் கைவிட்டு நீங்கி எங்கோ விலகி அனுப்புவதுபோல் அவனுக்கு ஒரு ஏக்கம் உண்டாயிற்று. அந்த ஏக்கம் சில சொற்களாக உருப் பெற்றது. ஓசையைச் சொற்களாக்கிக் கப்பலிலுள்ள மற்றவர்கள் காதில் விழுந்து விடாதபடி மெல்லத் தனக்குள் முணுமுணுத்தான் அவன்.

திருமுடியும் அரியணையும் பெருவீரத்
    திருவாளும் நினைப்பொழியக்
கருதரிய தென்பாண்டி நிலம்மறந்து
    கருணைமிகு தாய் மறந்து
சிறுதேர்வை மதிவதனி சிரிப்பினுக்குச்
    செயல்தோற்று நினைவிழந்து
பொருதுமனம் பிடித்திழுக்கப் பிடித்திழுக்கப்
    போகின்றேன் போகின்றேன்

உணர்ச்சித் துடிப்பில் உருவான சொற்களைத் திரட்டி இப்படி முணுமுணுத்த போது இந்தச் சொற்களின் மூலம் தன் தாய்த் திருநாடாகிய தென்பாண்டி நாட்டினிடமே விடைபெற்றுக் கொண்டு விட்டது போல் அவனுக்கு ஒரு திருப்தி ஏற்பட்டது. கப்பல் புறப்பட்டு விட்டது. செம்பவழத் தீவில் தன்னை இறக்கி விடுமாறு மீகாமனிடம் போய்ச் சொல்லி விட்டு மறுபடியும் அந்த இருண்ட மூலைக்கு வந்தான். தன்னிடமிருந்த வலம்புரிச் சங்கை மார்போடு சேர்த்துத் தழுவினாற்போல் வைத்துக் கொண்டு சாய்ந்து படுத்தான். அந்தக் கப்பலில் யாரோ ஏளனமாகச் சிரித்துக்கொண்டே பேசிய சில வார்த்தைகளை அவன் செவிகள் கேட்டன.

"மறுபடியும் தென்பாண்டி நாடு போரில் தோற்று விட்டதாம் ஐயா! தளபதியே பாண்டியப் பேரரசுக்கு எதிராக மாறிவிட்டானாம். எல்லோரையும் ஆட்டிப்படைத்துக் கொண்டிருந்த மகா மண்டலேசுவரர் இறந்து விட்டாராம். மகாராணி வஞ்சிமா நகரத்துக்குத் தப்பிப் போய் விட்டாராம். அந்தப் பயந்தாங்கொள்ளி இளவரசன் இராசசிம்மன் எங்கோ ஓடிப் போய் விட்டானாம்."

"தெரிந்த விஷயம்தானே ஐயா! யார் தோற்றாலென்ன? யார் வென்றாலென்ன? நம்முடைய கப்பல் விழிஞத்துக்கு வந்து போவது நிற்கப் போவதில்லை. பேச்சை விடுங்கள்!" என்று மீகாமன் அலட்சியமாகப் பதிலளித்ததையும் இருளில் முடங்கிப் படுத்திருந்த குமாரபாண்டியன் கேட்டான். அந்தச் சொற்கள் சுரீர் சுரீரென்று தன் நெஞ்சில் அறைவது போலிருந்தது அவனுக்கு. தென் பாண்டி நாடு வெற்றி, தோல்வி, போர், இளவரசுப் பட்டம், அரச மரபு எல்லாவற்றையும் பழங் கனவுகள் போல் மறந்துவிடத் துடித்தது அவன் உள்ளம்.

"மறக்கத்தான் போகிறேன்! நானைக்குச் செம்பவழத் தீவில் இறங்கி அந்த வெண்முத்துப் பற்களின் சிரிப்பைப் பார்த்த பின் எல்லாவற்றையும் மறந்து புதிய வாழ்க்கையைத் தொடங்கத்தான் போகிறேன்!" என்று வற்புறுத்தி நினைத்துக் கொண்டு மனச் சாந்திபெற்று உறங்கினான் அவன். உறக்கமென்றால் தானாக உண்டாக்கிக் கொண்ட போலி உறக்கம்தான் அது. அந்தப் போலி உறக்கத்திலும் நினைவுகளின் கூட்டத்திலுமாகக் கப்பலின் இரவுப் பயணத்தைக் கழித்து விட்டான் குமாரபாண்டியன். விடிந்ததும், "ஐயா, எழுந்திரு! இதோ செம்பவழத் தீவு வந்து விட்டது" என்று மீகாமன் வந்து எழுப்பினான். கப்பல் செம்பவழத் தீவின் கரையோரமாக நிறுத்தப்பட்டிருந்தது. மீகாமனும் மற்றவர்களும் தன் முகத்தைப் பார்த்து விடாமல் மேலாடையால் தலையைப் போர்த்தியது போல் முட்டாக்கிட்டுக் கொண்டு கப்பலிலிருந்து இறங்கினான் குமார பாண்டியன். அவன் உள்ளம் இன்பக் கிளர்ச்சி கொண்டு பொங்கியது. அவலக் கவலைகளற்ற வெற்றி தோல்விகள் இல்லாத ஓர் புதிய போக பூமியை மிதித்துக் கொண்டு நிற்பது போல் அவன் பாதங்கள் உணர்ந்தன. கரையற்றுப் பொங்கும் உற்சாகத்துடன் வலம்புரிச் சங்கின் ஊதுவாயைத் தன் இதழ்களில் வைத்து முழக்கினான் அவன். நீராடி எழுந்த கன்னிகைபோல் வைகறையின் மலர்ச்சியில் அந்தத் தீவின் அழகு பன்மடங்கு சோபித்தது. அந்தத் தீவின் கடைவீதித் திருப்பத்தில் நின்று கொண்டு கப்பல் வந்து நிற்பதையும், அதிலிருந்து ஒருவர் இறங்குவதையும்பார்த்தவாறு இருந்தாள் ஒரு இளம் பெண். குமாரபாண்டியனின் சங்கொலி அந்தப் பெண்ணின் செவிகளில் அமுதமாகப் பாய்ந்தது. அந்த ஒலியைக் கேட்ட மறுகணமே அவள் பேதைப் பருவத்துச் சிறுமிபோல் உற்சாகத்தோடு கடற்கரையை நோக்கி ஓடலானாள். அந்தப் பெண்ணின் ஓட்டம் காட்டில் தன் போக்கில் ஓடும் புள்ளிமானை நினைவு படுத்தியது அவன் அவளை நெருங்கி

விட்டான். சங்கநாதம் செய்து கொண்டு மணல் திடலில் நின்ற குமாரபாண்டியன் அவளைக் கண்டதும், "மதிவதனி!" என்று கூவினான். அந்தக் கூவலில்தான் ஊழியூழியாகத் தேங்கி நின்று கனிந்து போனது போன்ற அன்புத் துடிப்பின் தொனி எத்தனை உருக்கமாக ஒலிக்கிறது! அவள் வந்து அவனெதிரே நின்று பார்த்தாள். பார்த்துக்கொண்டே யிருந்தாள். முழு மதியைக் கறை துடைத்தாற் போன்ற முகத்தில் மலர்ந்து அகன்ற கயல்விழிகளால் அவனைப் பருகிவிடுவது போல் நோக்கிய நோக்கம் பெயரவே இல்லை. கல்பகோடி காலம் பிரிந்து நின்று விரகதாபத்தில் நலிந்து அன்புத் தாகத்தால் வாடிய காதலிபோல் அவள் கண்கள் காட்சி யளித்தன.

"மதிவதனி! நான் வந்துவிட்டேன். இனி உன்னைப் பிரிந்து போகமாட்டேன். அன்றொருநாள் நீ என் உயிரைக் காப்பாற்றினாய்! உன்னைக் காப்பாற்றுவதற்கு இன்று நான் வந்திருக்கிறேன்!" என்று கூறியவாறே அவள் அருகில் நெருங்கி அவளைத் தழுவிக் கொண்டான் குமாரபாண்டியன். அன்புப் பெருக்கில் பேச்செழாமல் வாய் மூடி நின்ற மதிவதனி, "என் தவம் வெற்றிபெற்று விட்டது" என்று மெல்ல வாய் திறந்து நாக்குழறச் சொன்னாள்.

"வா, போகலாம்! நம்முடைய வாழ்க்கை இனி இந்தத் தீவின் எல்லைக்குள் ஆரம்பமாகிறது!" என்று அவளைத் தழுவி அணைத்தவாறே நடந்தான் குமாரபாண்டியன்.

அவளோடு அப்படி நடந்தபோது அன்பையும் இன்பத்தையும் அனுபவித்துச் சுதந்திரமான எளிமையுடன் காதல் வாழ்வு வாழ்வதற்காகவே ஒரு புதிய பிறவி எடுத்திருப்பது போல் குமாரபாண்டியனுக்குத் தோன்றியது. கடல் அலைகளும், இளஞாயிற்றின் மாணிக்கச் செங்கதிர்களும், காற்றும், வானமும், பூமியும் அந்தக் காதலர்களுக்கு நல்வரவும் வாழ்த்தும் கூறுவதுபோல் அதியற்புதமானதொரு சூழ்நிலை அன்று காலையில் அந்தத் தீவில் நிலவியது. எல்லா இன்பமும் துய்த்துப் பல்லூழி காலம் வாழட்டுமென்று அந்தக் காதலர்களை வாழ்த்தி விட்டு வஞ்சிமாநகருக்குச் செல்வோம் நாம். மகாராணி வானவன்மாதேவியைப் பார்க்க வேண்டுமல்லவா?

• • •

தென் பாண்டி நாட்டை வடதிசை மன்னர்கள் கைப்பற்றிய பின் சோழப் பேரரசுக்குட்பட்ட நிலமாகி விட்டது அது. தளபதியும், கழற்கால்மாறனும் கலகக் கூட்டத்தைக் கலைத்து விட்டு எங்கோ ஓடிப்போய் விட்டார்கள். இந்த நிகழ்ச்சிகளெல்லாம் நடந்து முடிந்து ஆறு திங்கட்காலம் கழிந்து விட்டது. சேந்தனும் குழல்மொழியும், அன்புமயமான இல்லற வாழ்க்கையை முன் சிறையில் நடத்தி வருகிறார்கள். காந்தளூர் மணியம்பலத்தில் சோழ அரசின் ஆட்சிக்குட்பட்டு அதங்கோட்டாசிரியரும் பவழக் கனிவாயரும் எப்போதும் போல் தமிழ்ப்பணி புரிந்து வருகிறார்கள். அதங்கோட்டாசிரியர் விலாசினிக்குத் திருமணம் முடிப்பதற்காகத் தக்க மணமகனைத் தேடிக்கொண்டிருக்கிறார். தென் பாண்டி நாடு பழைய அமைதியும், வளமும் பெற்றுச் செழிப்பாக இருக்கிறது. இவ்வளவும் தெரிந்த பின் இனி வஞ்சிமாநகருக்குப் போனால் நம்முடைய உள்ளத்தை உருக்கும் உண்மை ஒன்றைத் தெரிந்துகொள்ள நேர்கிறது. வஞ்சிமாநகரத்தின் கீழ்பால் ஊர்ப்புறத்தில் குணவாயிற் கோட்டமென்னும் தவப்பள்ளி ஒன்று நெடுங்காலமாக இருந்து வருகிறது. தூய தோற்றமும், அருளொளி திகழும் முகமும் கொண்ட துறவியர் பலர் அக் கோட்டத்தில் வசித்து வருகின்றனர். இதோ அக் கோட்டத்தினுள் நுழைந்து உள்ளே போகிறோம் நாம். திருக்குணவாயிலாகிய இத் தவச்சாலையின் வாயிலில் பிரும்மாண்டமான மரங்களின் நிழலில் இதோ ஆடவரும் பெண்டிருமாக எத்தனை துறவியர் வீற்றிருக்கின்றனர், பாருங்கள். மரங்கள் அடர்ந்த இம் முன் பகுதியைக் கடந்து உள்ளே செல்வோம். அதோ, தாமரைப் பூவடிவாக அமைந்த ஒரு பெரிய பளிங்கு மேடை! அதன்மேல் அமர்ந்திருக்கும் மூதாட்டியை நன்றாக உற்றுப் பார்த்தால்

**கொச்சைத் தமிழ்**

## முறை பிறழ்தல்

கொச்சைப் பேச்சிலே எழுத்துக்கள் முறை பிறழ்ந்து ஒலிக்கும். மதுரையை 'மருதை' என்றும், குதிரையைக் 'குருதை' என்றும் கொச்சைத் தமிழர் கூறுவர். அபராதம் என்பதை, அவதாரம் என்பர். காஷாயம் என்ற வடசொல் காயாசம் ஆகும்.

— பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை

இன்னாரென்று தெரிந்து கொள்ளலாம். நன்றாகக் கூர்ந்து பாருங்கள்.

ஆம்! மகாராணி வானவன்மாதேவி அங்கு தவக்கோலம் பூண்டு வீற்றிருக்கிறார். வேறோர் இளம் பெண்ணும் தவக்கோலத்தில் அவரருகே இருந்து பணிவிடை புரிந்து கொண்டிருக்கிறாள். சற்று நெருங்கிப் பார்த்தால் அவளைப் புவனமோகினி என்று அடையாளம் கண்டு கொள்ளலாம். மகாராணி விழிகளை மூடித் தியானத்தில் ஆழ்ந்திருக்கிறார். அமைதியான இந்தச் சமயத்தில் அங்கு ஒரு ஆச்சரியம் நிகழ்கிறது. சீரழிந்து உருத் தெரியாது தோற்றம் மாறிப் போய் வல்லாளதேவனும், கழற்கால்மாறனும் அங்கு ஓடி வருகிறார்கள்.

"தேவி! எங்களை மன்னிக்க வேண்டும். எங்களுடைய வெறியால் எத்தனையோ கெடுதல்களைச் செய்து விட்டோம். மகா பாவிகள் நாங்கள்" என்று கதறியவாறே ஓடி வந்து வணங்குகிறார்கள். அவர்கள் கண்கள் கலங்கி அழுகை முட்டிக் கொண்டு வர இருந்தது. மகாராணி கண்களைத் திறந்து அவர்களைச் சிரித்துக் கொண்டே பார்த்தார். அவர் முகத்தில் சிறிதும் மாறுதல் ஏற்படவில்லை. ஒரே சாந்தம் நிலவியது. "ஓ! நீங்களா? உட்காருங்கள்" என்று அருளின் கனிவு நிறைந்த குரலில் கூறினார் அவர்.

"நாங்கள் பாவிகள்; கெட்டவர்கள். உங்களுக்கு முன் உட்காரக் கொஞ்சமும் தகுதியற்றவர்கள்!"

சந்தர்ப்பம் மனிதர்களைப் பாவிகளாகவும், கெட்டவர்களாகவும் ஆக்கலாம். இனி ஆவது நல்லதாக இருக்கட்டும். போய் நல்வினையைத் தேட முயலுங்கள். இந்த விசாலமான தவப் பள்ளியில் இன்னும் நிறைய இடம் இருக்கிறது. உங்களையும், உங்களைப்போல வர இருக்கும் இன்னும் எத்தனையோ பேரையும் இந்தத் திருக்குணவாயிலின் கதவுகள் எப்போதும் திறந்தவண்ணம் வரவேற்கக் காத்திருக்கின்றன" என்று புன்னகையோடு சொல்லிவிட்டு அவர்கள் பதிலை எதிர்பாராமல் மறுபடியும் கண் மூடித் தியானத்தில் ஆழ்ந்தார் மகாராணி.

வல்லாளதேவனும், கழற்கால்மாறனும் அந்தத் தவக்கோலத்தை வணங்கி விட்டு அந்தக் குணவாயிற் கோட்டத்தின் உள்ளே சென்றனர். சில நாழிகைகளுக்குப் பின் அவர்களும் தவக்கோலத்தோடு வந்து அமர்ந்தபோது தியானத்தில் ஆழ்ந்திருந்த மகாராணி கண் திறந்து பார்த்தார். அவர் வதனத்தில் அருள் நகை மலர்ந்தது. ஒரு கணம்தான்! மறுபடியும் அவர் விழிகள் மூடிக் கொண்டன. அப்போது அந்தப் பக்கமாகக் குணவாயிற் கோட்டத்தைச் சுற்றிப் பார்க்க வந்திருந்த வஞ்சிமா நகரத்துப் பொது மக்கள் சிலர் இதைக்கண்டவாறு தங்களுக்குள் உரையாடிக் கொண்டு சென்றது அவர் செவியிலும் விழுந்தது.

"அதோ பதுமப் பளிங்கு மேடையில் அருளொளி திகழ வீற்றிருக்கும் அந்தத் தவ மூதாட்டி யார் தெரியுமா?"

"யார்?"

"அவர் சேரநாட்டு மன்னன் மகளாய்ப் பிறந்து பாண்டி நாட்டு மாமன்னன் பராந்தகனுக்கு வாழ்க்கைப்பட்டுப் பாண்டிமாதேவியாகப் பெருவாழ்வு வாழ்ந்தவர். இப்போது தவவாழ்வு வாழ்கிறார் இங்கே!"—

இந்த உரையாடலைச் செவியுற்றபோது துன்பம் நிறைந்த முன்பிறவி ஒன்றை யாரோ நினைவுபடுத்தினாற் போலிருந்தது அவருக்கு. அவர் சிரித்துக் கொண்டார்.

'உலகம் உயிர்ப்பூக்களின் நந்தவனம்! அங்கே எல்லாவற்றையும் பார்த்தும் பார்க்காதது போல் நடுவாக நடந்து போய்விட வேண்டும்'—என்று தியானத்துக்கு நடுவே நினைத்துக் கொண்டு மெய்யுணர்வில் மூழ்கினார் அவர். காலம்சுழன்று வளர்ந்து பெருகிக் கனத்து நீண்டு கொண்டு இருந்தது.



# விரக பங்கம்

கோமதிசுவாமிநாதன்

[விவாக சுப முகூர்த்தம் முடிந்து பகல்சாப் பாட்டுக்குப்பிறகு சாவகாசமாக மாப்பிள்ளை மன்னார்சாமியும் அவன் தோழன் கணபதியும் மாடி அறையில் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். மணப் பெண்ணின் தோழிகள் மங்களம் என்ற யுவதியின் தலைமையில் திடீரென்று அந்த அறையை வந்து முற்றுகையிடுகிறார்கள்.]

**மங்களம்:** மாப்பிள்ளை! புறப்படுங்கள்சீக்கிரம்!

**கணபதி:** (சிரிப்பை அடக்கிக் கொண்டு) மன்னார்சாமி! பார்த்தாயா? தாலி கட்டிக் குறைந்த பட்சம் 'திரி' ஹவர் கூட ஆகவில்லை! அதற்குள்ளே மாமியார் வீட்டாருக்கு மாப்பிள்ளை கசந்து போய் விட்டார்! அவர்கள் சார்பிலே ஊருக்குப் புறப்பட உத்தரவு போடறாங்க இந்த அம்மா. நான் போய்ப் படுக்கை பெட்டியைக் கட்டவா? ரயில்வே 'கைட்'டை எங்கே போட்டிருக்கிறாய்?

**மங்களம்:** (மன்னார்சாமியைப் பார்த்து) உங்க பிரெண்டு பெரிய வாயாடியாக இருப்பார் போலிருக்கிறதே? ஊருக்கா புறப்படச் சொன்னேன்? ஊஞ்சலுக்கும் கிளம்பச் சொன்னேன். வாங்க மாப்பிள்ளை, சார்!

**கணபதி:** (நாடகபாணியில்) அப்படியா சமாசாரம்? பிழைத்தோம் அம்மணி! பிழைத்தோம்! மன்னார்சாமி, நீ கிளம்பு!...நான் பெட்டி படுக்கைகளுக்கு ஆறுதல் சொல்லி வெய்யிலில் காயப் போடுகிறேன். சுருட்டிக் கட்ட வேண்டிய அவசியமில்லை பாரு?

**மங்களம்:** (கணபதியிடம்) அம்மணி, கோவில்மணி, சிம்னின்னு ஐம்பது வயது பாட்டிகிட்டே பேசுவது மாதிரிப் பேசுகிறீர்களே? என்னைப் பார்த்தால் அப்படியா இருக்கிறது?

**கணபதி:** ஐயோ! இது என்ன ஆபத்து? (இரைந்து) குழந்தாய்!...(நிறுத்தி) இப்படிக் கூப்பிடட்டுமா?

**மங்களம்:** ஐயே! பெரிய ரிஷி! கூப்பிடுகிற அழகைப் பாரு!

**கணபதி:** ரிஷியிலும் ரிஷி நான் பெரிய விசுவாமித்திர ரிஷி குழந்தாய்! (விசுவாமித்திரர் பாணியில் வலது கையைத் தூக்கிக் கண்களை மறைத்துக் கொண்டு) குழந்தாய்! பெண்ணழகைக் கண்டு பேதமை யடையாது இந்தக் கட்டை! இந்தக் கட்டையின் கண்களுக்கு எல்லோரும் குழந்தைகள்.

**மங்களம்:** சரியான புளியங்கட்டை மாதிரி தான் பேசுகிறீர்கள். தெருக்கிப் பார்த்தால் உள்ளே உளுத்துப் போயிருக்கும்.

**கணபதி:** இது வைரம் தாயே! வைரம்! அசல்டா பாலாம் கடை வைரம்போலே! மன்னார்சாமி! நீ போயேன்! இப்போதிருந்தே உன்னை ஆட்டுவிக்கத் தீர்மானித்து விட்டார்கள்! அடேடே! ஊஞ்சலில் வைத்து ஆட்டுறதைத்தான் சொல்கிறேன்! அதற்குள்ளே என்ன முறைப்பு முறைக்கிறீங்க!

**மங்களம்:** உங்கள் நண்பர் பெண் வாடை படாத ரிஷியிருங்கள்! அவர் இங்கேயே இருக்கட்டும். நீங்க புறப்படுங்க.

**மன்னார்சாமி:** அவன் ரொம்பத் தங்கமானவன். விவாக பந்தத்தில் சிக்கிக் கொள்ள மாட்டேன் என்ற விரதம் எடுத்துக் கொண்டிருப்பவன்! அவனையும் அழைத்தால்தானே நான் புறப்பட இயலும்? மாப்பிள்ளைத் தோழனுக்கு மரியாதை வேண்டாமா?

**மங்களம்:** வைரமும் தங்கமும் இவ்வளவு மலிவாகப் போச்சு! ஹூம்! ஐயா, விசுவாமித்திரரே! நீங்களும் புறப்படுங்கள்.

**கணபதி:** வருகிறேன், மிஸ் மேனகா!

**மங்களம்:** மேனகா?

**கணபதி:** மன்னிக்க வேண்டும்! உங்க பெயர் தெரியாது.

(கிளம்புகிறார்கள்)

## 2

[திருமண வீட்டில் ஊஞ்சல் போடப்பட்டிருக்கும் இடம். எல்லோரும் குழுமியிருக்கிறார்கள். ஊஞ்சலில் மாப்பிள்ளை மன்னார்சாமியும் மணமகள் மல்லிகாவும் உட்கார்ந்திருக்கிறார்கள். தோழிகள் கோஷ்டி ஒரு பக்கத்திலும் கணபதி மறு பக்கத்திலும் ஊஞ்சல் கம்பியைப் பிடித்துக் கொண்டு நிற்கிறார்கள்.]

**மங்களம்:** மாப்பிள்ளை! நீங்கதான் முதலில் ஒரு பாட்டுப் பாடவேண்டும்.

**மன்னார்:** ஐயையோ!...எனக்கும் பாட்டுக்கும்...

**கணபதி:** மாமியாருக்கும் மருமகளுக்கும் உள்ள உறவு! நம்ப மன்னார்சாமி பாட்டை வாசிப்பான்! ஆனால் பாட்டைப் பாடத் தொடங்கினாலோ அது காதிலே விழாத தூரத்

தில் நம்மை அறியாமலே நாம் போய் நிற்போம். சாரீரம் அத்தனை பிரமாதம்!

**மன்னார்:** ரொம்ப கரெக்ட்! நீங்க இப்போது இங்கிருந்து கிளம்பிப் போக வேண்டுமா? சொல்லுங்கள். நான் உடனே பாட ஆரம்பிக்கிறேன்.

**மங்களம்:** ரொம்பவும் பயமுறுத்தாதிங்க, மாப்பிள்ளே! உங்க 'பிரண்டு' ரிஷி பாடுவாரா?

**கணபதி:** பேஷ்! பிருகு முனி, அத்திரி முனி வரிசையிலே நம்மையும் சேர்த்துப் 'பிரண்டு ரிஷி' ஆக்கிவிட்டாளா?

**மன்னார்சாமி:** ஓ! அற்புதமாகப் பாடுவான். ஆனால் ஒரு கஷ்டம். சுலபத்திலே ஆரம்பிக்க மாட்டான். ஆரம்பித்து விட்டாலோ நிறுத்தவும் மாட்டான்; யுத்த காலத்துக் கரி மோட்டார்போல!

**கணபதி:** நீ தப்பித்துக் கொள்ள என்னைப் பலி கொடுக்கிறாயாக்கும்?

**மன்னார்சாமி:** சும்மா ஆரம்பி! நான் தேவைக்கு அதிகமாகவே தலையை ஆட்டி வைக்கிறேன்.

**கணபதி:** பிரதர்! அனாவசியமாக என் விஷயத்தில் தலையை ஆட்டிக் கழுத்தைச் சுளுக்கிக் கொள்ளாதே! தலையை ஆட்டும் படலமே இனிமேல்தான் உன் வாழ்க்கையில் ஆரம்பிக்கப்போகிறது! அதற்கு உபதேசம் செய்விக்க அதோ குருணி உட்கார்ந்திருக்கிறார்கள் பக்கத்தில்.....

**மன்னார்சாமி:** அதென்ன குருணி. மரக்கால், படி என்று.

**கணபதி:** குருவுக்குப் பெண்பால் குருணி.

**மங்களம்:** மாப்பிள்ளே! உங்கள் ஸ்நேகிதர் உபன்யாசம்தான் பண்ணுவார் என்றால் இங்கு விநியோகிக்கச் சுண்டல் இல்லே. பாடச் சொல்லுங்கள்.

**கணபதி:** அதற்குத் தேங்காய்மூடி தயாராக இருக்கிறது போலிருக்கிறது. பாட்டு அந்தப் பகுதியிலேயே முதலில் ஆரம்பமாகட்டும்.

**ஒரு தோழி** (மங்களத்தினிடம்): நீதான் பாடேன்! பிள்ளையார் பாட்டு ஒண்ணு ஆரம்பிப்பாயே!

**கணபதி** (சரியாகக் காதில் வாங்கிக் கொள்ளாமல்): ஓஹோ! என்னைப் பார்த்தால் பிள்ளையாரும் கொழுக்கட்டையும் நினைவு வருகிறதோ? அப்புறம் அங்கே மங்களம் பாடிமுடியும் வரையில் நான் கலாட்டா பண்ணுவேன்.

**மற்றொரு தோழி:** அடி மங்களம்! நீ பாடறபோது அவர் கலாட்டா பண்ணுவாராம்! உன் குரலைப் பற்றி அவருக்குத் தெரியாது போலிருக்கு!

**கணபதி:** ஹா! உங்க பேரே மங்களமா? நான் உங்க பாட்டைச் சொல்லவில்லே.

**முதல் தோழி:** நானும் உங்களைப் பற்றிப் பாடச் சொல்லவில்லே. 'விநாயகா' கீர்த்தனை மங்களத்துக்கு ரொம்பவும் பிடிக்கும் என்று சொன்னேன்.

**மன்னார்சாமி:** கணபதி! உலகத்திலே உன் பக்தர்கள்தான் அதிகம்!

**கணபதி:** உன் பேச்சுக்கு மங்களம் பாடி, அந்த மங்களத்தைப் பாடவிடு!

**மன்னார்சாமி** (மெதுவாக): உனக்கேற்ற வாயாடி அவள்!

**கணபதி:** அபசாரம்! அபசாரம்! இது என்றும் பிரம்மச்சாரிக் கட்டை...

(மங்களம் பாட ஆரம்பிக்கிறாள்)

## 3

[அன்று நள் இரவு நேரம். மாடி அறையில் கணபதி மாத்திரம் கையில் ஒரு புத்தகத்துடன் உட்கார்ந்திருக்கிறான். மங்களம் தனியாக வந்து எட்டிப் பார்க்கிறாள்.]

**மங்களம்:** மாப்பிள்ளே! மாப்பிள்ளே!

**கணபதி:** ஐயோ, பாவம்! இப்படி அருமையாக மாமியார்மாதிரி இழைந்து இழைந்து ஒரு நபர் கூப்பிட வரும் நேரத்தில் அந்த மடப்பயல் மன்னார்சாமி மொட்டை மாடிக்குப் போயிருக்கிறானே!

**மங்களம்:** ரிஷீசுவரரே! ஏது மாமியார் அளவுக்குப் போய் விட்டேனா நான்! சற்று நேரம் போனால் பாட்டி என்று கூப்பிட ஆரம்பித்து விடுவீர்கள் போலிருக்கிறதே!

**கணபதி:** மன்னிக்க வேண்டும்! நம் விவாகத்துக்கு மங்களம் பாடுவோமா? மாப்பிள்ளை மன்னார்சாமி தன் சுதந்திர வாழ்க்கைக்கு 'பலமான கதுபட்ட' பாடிவிட்டு, மனைவியுடன் மொட்டை மாடியில் இருக்கிறான். கூப்பிடலாமா? கூப்பிடவா?

**மங்களம்:** அடடா! உங்கள் விஷயமாக அவரை எச்சரிக்க வந்தேன். அவருடைய நண்பருக்கு ஆபத்து என்றால் அவர் கவனம் செலுத்த வேண்டாமா?

**கணபதி:** ஹா! எனக்கு ஆபத்தா? என்ன விஷயம்? சொல்லுங்கள்.

**மங்களம்:** உங்களிடம் சொல்லி என்ன பிரயோசனம்? வழக்கம்போல் அலட்சியமாக இருந்து மாட்டிக் கொள்வீர்கள்!

**கணபதி:** இல்லே! இல்லே! உஷாராக இருக்கிறேன், சொல்லுங்கள்.

**மங்களம்:** இந்த ஊரிலே பிரம்மச்சாரிகள் தர்ம பரிபாலன சங்கம் என்று ஒரு சங்கம் இருக்கிறது. அதில் படேபடே பிரம்மச்சாரிக் கிழவர்கள் அங்கத்தினர்களாக இருக்கிறார்கள்.

**கணபதி:** அப்புறம்?...

**மங்களம்:** அந்தக் கிழவர்களுக்குள்ளே ஒரு தகராறு! தலைவர் பதவிக்கு நீ நான் என்ற போட்டி. இந்த நிலையில் தீவிர பிரம்மச்சாரியாகிய நீங்கள் இந்த ஊருக்கு வந்திருப்பதைக் கேள்விப்பட்டு உங்களையே அந்தச் சங்கத்துக்குத் தலைவராக நியமித்து விடுவது என்று தீர்மானித்து விட்டார்கள்.

**கணபதி:** ஐயையோ! அத்தனை கிழவர்களையும் நான் எப்படிக் கட்டி மேய்ப்பதாம்?

**மங்களம்:** முதல் முப்பது வருஷ காலம் அவர்கள்தான் தலைவரை ஆட்டி வைப்பார்கள். ஆறு வருஷங்கள் ரிஷிகேசத்திலே பயிற்சி. அப்புறம் நாலு வருஷங்கள் இமயமலை உச்சியிலே பயிற்சி.

**கணபதி:** ஐயையோ! காப்பியும் இட்லி சாம்பாரும் கிடைக்குமோ, கிடைக்காதோ?

**மங்களம்:** கனி, கிழங்கு, ஆட்டுப்பால் தான் கிடைக்கும்! நீங்கதான் விசுவாமித்திர கோத்திரமாச்சே!

கணபதி: அம்மா தாயே! எனக்கு வேண்டாம் அந்தப் பதவி! பதவியில்லாத வெறும் கட்டையாகவே இருந்து விட்டுப் போகிறேன்.

மங்களம்: ஊஹூம்! நாளைக்குக் காலை பத்து மணிக்கு அவர்கள் பூர்ண கும்பத்தோடு இங்கு உங்களைப் பார்த்து அழைத்துப் போக வரப் போகிறார்கள்! ஊருக்குக் கிளம்பி ஓடலாம் என்றால் கூட இனிமேல் வண்டி கிடையாது!......(யோசித்து) தப்புவதற்கு ஒரு வழிதான் உண்டு!

கணபதி: (ஆவலுடன்) பஸ் இருக்கிறதா?

மங்களம்: உஷ்! அதெல்லாம் இல்லை! அவர்கள் வரும் போது 'நான் பிரம்மச்சாரி இல்லை' என்று சொன்னால் விட்டு விடுவார்கள்!

கணபதி: அதெப்படிப் பொய் சொல்ல முடியும்?

மங்களம்: பொய் சொல்லுவானேன்?... உங்க அம்மா அப்பா உங்களுக்கும் பெண் தேடாமலா இருப்பார்கள்? அதில் ஒருத்தியைப் பொறுக்கி நிச்சயம் செய்து கொள்ளுங்களேன்!

கணபதி: ஐயோ!...அவர்கள் பெண்ணா பார்க்கிறார்கள்! பொம்மையல்லவா தேடுகிறார்கள். எவர்சில்வர் பொம்மை!

மங்களம்: அப்படியானால் நீங்களே தேடிக் கொள்ள வேண்டியதுதான்! இல்லை, தலைவர் பதவி தானாக உங்களைத் தேடி வந்துவிடும்.

கணபதி: வேண்டாம்! வேண்டாம்!... (யோசித்து) காலை பத்துமணி என்பது ரொம்ப ஷார்ட் நோட்டீஸ் ஆச்சே!

மங்களம்: நாளைக்குக்கூட முகூர்த்த நாள்தான்!

கணபதி: நான் இருக்கேன்! ஆனால் மணப்பெண்......

மங்களம்: உங்கள் பெற்றோர்கள் அனுமதி...

கணபதி: நோ! நோ! அவர்கள் எந்த ரிட் பெட்டிஷன் போட்டாலும் தள்ளுபடி செய்ய நான்தான் சுப்ரீம் கோர்ட்!...இப்போ என்ன செய்வது?...

மங்களம்: என் அப்பாவைப் போய்ப் பாருங்கள் (நடக்கிறாள்) அவர் யோசனை சொல்லுவார்!

[மன்னார்சாமி வருகிறான்]

மன்னார்: என்னப்பா கான்பரன்ஸ்!

கணபதி: கல்யாண கான்பரன்ஸ்!

மன்னார்: உனக்கு எதற்கடா கல்யாணம்! நீ இந்தப் பந்தத்தில் ஈடுபடக்கூடாது!

கணபதி: அந்த மங்களத்தின் அப்பா யாருடா?...

மன்னார்: புகார் பண்ணப் போகிறாயா?

கணபதி: போடா! புகலே அடையப்போகிறேன்! அவரை என் மாமனார் பதவிக்கு அப்பாயிண்ட்மெண்ட் பண்ணி விட்டேன்!

மன்னார்: விசுவாமித்திரா! என்னே உன் வீழ்ச்சி!

கணபதி: பிரதர்! எல்லாம் உன்னைத் தோற்கடிக்கத்தான்!

மன்னார்: என்னைத் தோற்கடிக்கவா?

கணபதி: ஆமாம்!...சாயங்காலம் நீயும் மங்களமும் என்னைப் பற்றிப் பந்தயம் கட்டிக் கொண்டது எனக்குத் தெரியும். என் மனம் மாறவே மாறாது என்று நீ சாதித்தாய்! அவள் என் மனத்தை மாற்ற முடியும் என்று சவால் விட்டாள். பெண் என்றால் பேயும் இறங்குமே! இந்தக் கணபதிதானா இறங்க மாட்டான்!... உனக்குத் தோல்வி!

மன்னார்: அட பாவி!...விஷயம் தெரிந்து தானா நீ அந்தச் சங்கம் இந்தச் சங்கம் என்று கதை அளந்தபோது நம்புகிறவன் போல் நடித்தாய்!

கணபதி: நீ பதிலுக்கு ஒட்டுக் கேட்டு விட்டாயா?...நான் ஒருவிதமான முடிவுக்கு வந்து விட்டேன்! ஆமாம்!

[மன்னார்சாமி காதில் ஏதோ சொல்கிறான்]

மன்னார்: அட ராமச்சந்திரா!

(போகிறார்கள்)

3

[இரண்டு நாட்கள் கழித்து ஒருநாள் மாலை வேறு ஊரில் கணபதியின் வீடு. கணபதியின் தந்தை பரமசிவமும் தாயார் பார்வதியும் உட்கார்ந்திருக்கிறார்கள். கணபதியை மாப்பிள்ளையாக்கிக் கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டுள்ள நான்கு நபர்கள் எதிர்த்தாற்போல் உட்கார்ந்திருக்கிறார்கள்.]

முதல் நபர்: என் பெண் கிளிமாதிரி இருப்பாள் ஸார்! இரண்டாயிரம் ரூபாயும் சீர் வரிசைகளும் 'பிளாக்கிலே' கொடுக்கிறேன், சார்! வரதட்சிணை சட்டத்தைப் பற்றி நீங்கள் பயப்படவே வேண்டாம்!





பெரியவர்: என், தம்பி! உங்க அம்மா இப்ப எங்கே இருக்கா?
வாலிபன்: என் தங்கை வீட்டில் இருக்கிறாள்.
பெரியவர்: உன் மாமியார்?
வாலிபன்: என் வீட்டில் இருக்கிறாள்.

**பரமசிவம்:** போட்டோவிலே பெண் மூக்கைப் பார்த்தாலே தெரிகிறதே!

**பார்வதி:** அப்போதுதானே மாமியாரைக் கொத்திக் கொத்தி எடுக்கலாம்.

**இரண்டாவது நபர்:** என் பெண் ரதின்னு ரதி சார்! வீட்டு வேலை அத்தனையும் கச்சிதமாகச் செய்வாள்! மிளகு ரசம் வைத்தால் இன்று முழுதும் குடித்துக் கொண்டிருக்கலாம். மூவாயிரமும் சீர்வரிசையும் வெளிக்குத் தெரியாமல் தள்ளி விடுகிறேன்.

**பார்வதி:** நாங்களென்ன வருஷம் முழுதும் பத்தியச் சாப்பாடு சாப்பிடுபவர்களா, மிளகு ரசமே குடித்துக் கொண்டிருக்க? பெண் ரொம்ப அழகாக இருந்தாலும் கஷ்டம்! சதா கண்ணாடி முன்தான் நிற்பாள்! எங்களுக்கு வேண்டாம்.

**மூன்றாவது ஆசாமி:** அம்மா! இதோ பாருங்கோ! என் பெண் அழகிலே குமாரி தான்! ஆனால் ரொம்பப் பொறுமைசாலி. யார் என்ன கோபித்துக் கொண்டாலும் காதிலே போட்டுக்கொள்ள மாட்டாள்.

**பரமசிவம்:** அப்படியானால், நீங்கள் காது ஸ்பெஷலிஸ்ட்கிட்டே யிருந்து ஒரு சர்ட்டிபிகேட்டும் வாங்கி ஜாதகத்தோடு வைக்க வேண்டும். இப்படித்தான் ஒரு இடத்திலே 'எங்கள் பெண் வாயையே திறக்காது' என்று பெருமையடித்துக் கொண்டார்கள். அவர்கள் சொன்னது நூறு பர்சன்ட் உண்மை! பெண்ணும் ஊமை!

**நாலாவது நபர்:** இதோ பாருங்க சார்! பின்னை எந்த இடத்திலே நிச்சயமானாலும் சரி! நம் கடமையைச் செய்தாக வேண்டும் என்று ஆட்டு உரலிலிருந்து அகப்பைத் தூக்கு வரை எவர்சில்வரில் வாங்கிப் போட்டாயிற்று. என் பெண் செல்லமாக வளர்ந்தவள். அவள் எங்கே போனாலும் துணைக்குப் போகட்டும் என்று இரண்டு எருமை மாடும் வாங்கிக் கட்டிப் போட்டு விட்டேன்.

**பரமசிவம்:** துணைக்கு எருமை மாடா? என்னையா கூத்து?

**நாலாவது நபர்:** பால் பஞ்சமில்லாமல் இருக்க!

**பார்வதி:** தேவலையே! மாடு வேளைக்கு எத்தனை படி பால் கறக்கும்?

**நாலாவது நபர்:** மனிதர்களுக்கிடையே முதலில் உறவு ஏற்படட்டும்; அப்புறம் மாட்டைப் பத்திப் பேசுவோம்.

[நடேசன்று கணபதி வெளியூரிலிருந்து திரும்பி உள்ளே வருகிறான்.]

**கணபதி:** அப்பா! இவர்களெல்லாம் யார்? ஏதோ பெரிய அரசியல் பிரமுகர்களெல்லாம் 'பிரஸ் கான்பரன்ஸ்' நடத்துகிற தோரணையில் அவர்களுடன் பேசிக் கொண்டிருக்கிறீர்களே?

**பார்வதி:** வாடா, அப்பா! நல்ல சமயத்தில் வந்தாய்! இவர்களெல்லாம் உனக்குப் பெண் கொடுக்க வந்திருக்கிறார்கள்! இந்தப் போட்டோக்களை யெல்லாம் பாரேன்!

**கணபதி:** அப்படியா? (நால்வர் பக்கமும் திரும்பி) தோழர்களே! வணக்கம்! இருபது வருஷங்கள் பொறுத்திருந்தால் நானும் என் பெண்ணின் படத்தை எடுத்துக்கொண்டு உங்கள் கோஷ்டியில் சேர்ந்து கொள்வேன். அந்து பேராகப் போகலாம்! அவசரப்பட்டீர்களானால் உங்கள் வீட்டுத் திருமண அழைப்பை எங்களுக்கும் அனுப்பி வையுங்கள்! (மெதுவாக) எனக்குக் கல்யாணம் ஆய்விட்டது!

[நால்வரும் கிளம்புகிறார்கள்]

**பார்வதி:** ஐயையோ! அத்தனை எவர்சில்வரும் போகிறதே! என்ன சொல்லி அவர்களை விரட்டியடித்தாய்?

**கணபதி:** போனால் என்ன? நூறு பவுண்டு தங்கமே கொண்டு வந்திருக்கிறேனே!

[வாசல் பக்கம் பார்த்துக் கையை இரண்டு தடவை தட்டுகிறான். வாசல் திண்ணையிலிருந்த மங்களம் உள்ளே வருகிறாள்.]

**கணபதி:** வருக! வருக! இவ்வீட்டு மருமகள் இலக்குமியே வருக! இவர்கள்தான் உன் கணவனின் மாதா பிதா! (பார்வதி பக்கம் திரும்பி) அம்மா! இவள் என் மனைவி மங்களம், என் பிரம்மச்சாரி வாழ்க்கைக்கு மங்களம் பாடிய மங்கையர் திலகம்! என் இதயக் கல்யாணம் அளித்த தீஞ்சுவைக் கனி அமுது! அம்மா! வீட்டுச்சாவியை அவளிடம் கொடுத்து விட்டு நல்ல மாமியாராக லட்சணமாக ஒதுங்கி இரு!

[பார்வதி தரைகுற்றி உட்காருகிறாள்]

**மங்களம்:** ஓ! அதற்குள் உங்க அம்மாவுக்கு மாமியார் வியாதி வந்து விட்டதா?

**கணபதி:** நோ! மதர் இன்வாலிட்!... பயப்படாதே! டாக்டர் இன் வா! பத்து ஸி. ஸி. இஞ்செக்ஷன் போட்டால் ஓடி விடாதா?

[இருவரும் கை கோர்த்துக் கொண்டு உள்ளே போகிறார்கள்.]

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

# பார்த்த மாத்திரத்தில் பளிச்சிடும் உண்மை..

## ரின்ஸோ வெளுப்பது

# அதிவெண்மை

உண்மை. வெள்ளைத் துணிகளை வெள்ளை வெளேரென்றும் வர்ணத் துணிகளை அதிகப் பிரகாசமாகவும் வெளுப்பது ரின்ஸோ. அது மட்டுமா? ரின்ஸோவினால் சலவை செய்வது மிகவும் இலகுவானது—அடித்துத் துவைக்கவோ, அழுத்தித் தேய்க்கவோ தேவையின்றி, அழுக்கை அறவே அகற்றி விடும். குடும்பத்தின் சகல சலவைகளுக்கும் உகந்தது ரின்ஸோ; நீங்கள் உபயோகிக்கவேண்டியது ரின்ஸோ.




உங்கள் வேலையை இலகுவாக்குவதற்கென்றே
தயாரிக்கப்பட்ட அற்புத சோப் பவுடர்.

ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு.

R.17-50 TM

